ஸ்ரீ:

# தொல்காப்பியம்.



## செய்யுளியல்

## நச்சினார்க்கினியருரை

உரையாசிரியருரையுடன்

ஸேதுஸமஸ்தானவித்வான்

ரா. இராகவையங்கார்

பரிசோதித்தது.




மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரசுரம் - ம.

மதுரை:

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1917.

ஸ்ரீ:

# முகவுரை.

---

தொல்காப்பியம் என்பது தொல்காப்பியனூராற் செய்யப்பட்ட நூல் என்னும்பொருட்டு, இத்தொல்காப்பியனூர் சமதக்கினிபுதல்வரென்றும், திரணதூமாக்கினி என்னும் இயற்பெயரையுடையரென்றும், அகத்தியர் வடக்கணின்று தென்றிசைப்போதுகின்றபோது இவரை உடன்கொடுபோந்தாரென்றும், நச்சினூர்க்கினியர் பாயிரவுரைக்கண் உரைத்தார். அவர் தொல்காப்பியன் என்பதற்குப் பழைய காப்பியக் குடியினுள்ளோன் என்று ஆண்டுக்கூறினூர். இவற்றூற் றொல்காப்பியன் என்பது இவர்குடிபற்றிவழங்கியபெயரென்றும், திரணதூமாக்கினியென்பது இவரியற்பெயரென்றும் தெளியலாகும். அந்தணாருமறைமுதலாக வடமொழியிலுள்ள தொன்னூல்கள் பலவற்றினும் "காவியகுலம்" என்பதோர் பழையகுடிப்பெயர் வழங்கப்படுகின்றமை அம்மொழிவல்லார் நன்கறிப. காவியர் கவியின் வழியினரென்ப. கவி சுக்கிரனுக்கு ஒருபெயர். இவர் பிருகுமஹாருஷியின்மரபினராதலாற் பார்க்கவர் எனவும் வழங்கப்படுவர். சமதக்கினியும் அவர் புதல்வரும், பிருகுவம்மிசியராதலான் பார்க்கவரென்றும், அவரே கவிவம்மிசியராதலாற் காவியர் என்றும் பெயர் பெறுப. வான்மீகிபகவானும் பாலகாண்டத்துப் பிருகுமஹாருஷியின்பத்தினியைக் "காவியமாதா" என்று வழங்கினூர். காவியமாதா என்பது காவியர்க்குத் தாய் என்றவாறு. இதனூற் சமதக்கினி புதல்வரான திரணதூமாக்கினியின்குலம் காவியகுலமாதல் நன்குணரலாம். இது பழமைபற்றி விருத்தகாவியகுலமென்று வழக்குப்படுமென்று கருதலாகும். இது தமிழிற் றொல்காப்பியக்குடி என்று வழங்கப்படும். இக்குடியிற்பிறந்துசிறந்ததனூற் குடிப்பெயரே பெயராக வழங்கப்பட்டதென்க. பனம்பாரனூர்கூறியபாயிரத்தும் "தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றி" எனக்கூறுதலால் தன் பெயர் குலப்பெயரேயாக விளக்கஞ்செய்தார் என்பதே கருத்தாதல் காண்க. இது முப்பாலாசிரியர் வள்ளுவர் எனப் பெயர்சிறந்தது போல்வதொன்று.

இத்தொல்காப்பியனூர் அகத்தியனூர்மாணக்கர் பன்னிருவருட் டலைவராவர். இதனை "அகத்தியர்வழித்தோன்றிய ஆசிரியரெல்லாருள்ளுந் தொல்காப்பியனூரே தலைவரென்பது எல்லாவாசிரியருங் கூறுபவென்பது" என "வினையினீங்கி" என்னும் மரபியற் சூத்திர

வுரையிற் பேராசிரியர்கூறியதனுனுணர்க. அகத்தியனுர்க்குத் தொல்காப்பியனுர்முதலாகப் பன்னிருபுலவர் மாணுக்கருண்டென்பது "மன்னியசிறப்பின்வானோர்வேண்டத், தென்மலையிருந்தசீர்சான்முனிவான், றன்பாற்றண்டமிழ்தாமின்றுணர்ந்த, துன்னருஞ்சீர்த்தித் தொல்காப்பியன்முதற், பன்னிருபுலவரும்பாங்குறப்பகர்ந்த," எனவரும் புறப்பொருள்வெண்பாமாலைப் பாயிரத்தானுணர்க. இனி இவர்காலம் இஃதென்றுதுணியப்படாதிருப்பினும் இறப்பமுந்தியதென்பதுமட்டும் எல்லாருக்கும் ஒப்பதாகும். தொல்காப்பியனுர் ஆதியூழியின் அந்தத்தே இந்நூல்செய்தாரென்று நச்சினுர்க்கினியர் பொருளதிகாரக் கற்பியலுரைக்கண்கொண்டார்.

இவர், அகத்தியனுர்செய்தருளிய தமிழ்முதனூலிலக்கணம் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும்பற்றி மிகவும் பரந்து கிடத்தலான் அவற்றுள், தமிழுணர்ச்சிக்கின்றியமையாது சிறந்த இயற்றமிழ்ப்பகுதியை எடுத்துத் தொகுத்து எழுத்து, சொல், பொருள் என மூன்றதிகாரமாக்கி ஒவ்வோரதிகாரத்துக்கும் ஒன்பதொன்பதியலாகப்பகுத்து இருபத்தேழு இயலாகவைத்து அளக்கலாகாவரும்பொருள்பொதிந்து நுண்மையொடுபுணர்ந்த ஒண்மையவாய, சில்வகையெழுத்தின்செய்யுட்சூத்திரங்களாற் பல்வகையானும் இத்தமிழுலகு பயன்கொள்ளுமாறு இந்நூலை இயற்றியருளினுர். கடைச்சங்கத்தாருள், களவியற்பொருள்கண்டகணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் "இடைச்சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம்" என்றூராகலான் இவர் செய்தருளிய இந்நூலின் தலைமையும் பழமையும் நன்குணரலாம்.

இந்நூலுட்கூறப்பட்ட எழுத்து, சொல், பொருள் எனப்பட்ட மூன்றனுள் முன்னையஇரண்டும் பொருளாராய்ச்சிக்கேஉபகாரப்பட்டு நிற்றலால் பொருளதிகாரத்தின் மேம்பாடு இனிதுணரப்படும். பொருளதிகாரமேம்பாடு இறையனுர்களவியல் முகவுரையானும்தெளிக. பொருளனைத்தும் நிலைபெற்றுவிளங்குதல் நல்லிசைப்புலவரியற்றிய பல்வகைச்செய்யுளின்கண்ணேயாமென்பது தெளியப்படுமாதலாற் செய்யுளிலக்கணவாராய்ச்சி பொருளதிகாரத்தே வேண்டப்பட்டதெனவுணர்க. இப்போது வழங்குகின்ற எழுத்து, சொல், யாப்பு, அணியென்னப்பட்ட ஐந்திலக்கணங்களையும் ஒருவன் உற்றுணர்வது செய்யுளின்கண்ணேயாதலாற்செய்யுளிலக்கண ஆராய்ச்சிதமிழுணர்ச்சிக்கு இன்றியமையாமை காணப்படும்.

இனி இத்தொல்காப்பியத்திற்கு உரையியற்றியவர் கல்லாடர், உரையாசிரியரிளம்பூரணவடிகள், பேராசிரியர், சேனுவரையர், நச்சினார்க்கினியர் எனப்பலராவர்.* இவருட் கல்லாடருரை சொல்லதிகாரத்திற்கேயுள்ளது; அதுவுங்குறையாகக் காணப்படுவது. உரையாசிரியரிளம்பூரணவடிகளுரை மூன்றதிகாரங்கட்கும் உள்ளது. பேராசிரியருரை பொருளதிகாரத்திறுதியியல் நான்கற்கு இப்போது உள்ளது. சேனுவரையருரை சொல்லதிகாரத்திற்கே உள்ளது; இவ்வதிகாரத்திற்குமட்டுமே இவருரையெழுதினரென்ப. நச்சினார்க்கினியருரை எழுத்ததிகாரத்திற்கும், சொல்லதிகாரத்திற்கும் பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல்,உவமவியல்,மரபியல்என்னும் மூன்று இயல்கள்நீங்கலாக ஆறியல்கட்கும் இப்போது காணப்படுகின்றது. இவற்றுட் செய்யுளியற்குக் கல்லாடர், சேனுவரையர் இருவர்நீங்கலாக உரையாசிரியர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் என்னும் மூவருரையிருத்த லறியப்படும். இம்மூவருரையுள் இதற்குமுன் ஸ்ரீமான் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களச்சிட்ட பொருளதிகாரத்துள்ள செய்யுளியலுரை நச்சினார்க்கினியருடையதன்றென்றும் பேராசிரியருடையதென்றும் யான் செந்தமிழ்ப்பத்திரிகைநடாத்தியகாலத்தில் அதன் முதற்றொகுதி முதற்பகுதி ஆராய்ச்சியில்விளங்க எழுதினேன். இங்ஙனமே அவரச்சிட்ட பொருளதிகாரமரபியலுரையும் நச்சினார்க்கினியரதன்றென்றும் பேராசிரியரதென்றும் செந்தமிழ் இரண்டாந்தொகுதிப் பதினொன்றும் பகுதிமுதற்கட் டெளிவித்தேன். அவற்றை ஈண்டுவிரிப்பிற் பெருகும். ஆண்டுக்கண்டுகொள்க. இவ்வாறே அவரச்சிட்ட பொருளதிகாரமெய்ப்பாட்டியலுரையும் உவமவியலுரையும் நச்சினார்க்கினியருரையல்லவென்பது தெரிகின்றது. பின்னர்க்கிடைத்த இவ்விரண்டியலும் அடங்கிய பழையதோரேட்டுமுகத்துப் பேராசிரியனுரை என எழுதியிருத்தலானும் இக்கருத்து வலியுறுகின்றது. அவரச்சிட்ட பொருளதிகாரவிறுதியியலுரை நான்கன்

---

* தஞ்சைச்சரசுவதிவிலாச புஸ்தகநிலயத்துத்தமிழேடுகளுள் தொல்காப்பியச்சொல்லதிகாரவுரையேடு ஒன்றுள்ளது: அவ்வேட்டினிறுதியில் இவ்வோத்தினுட்சூத்திரமுட்பட்டதுரையினதளவு கிரந்தவகையானறநூற்றிருபது............சூ௸௳யகோத்திரத்தென எழுதப்பட்டுள்ளது. இதனாலிவ்வேட்டிலுள்ளவுரை ஆத்திரேயன்பேராசிரியனுரை என்று துணியப்படுகின்றது. இவரே மரபியலுரையிற்கண்ட "வலம்புரிமுத்தின்" என்னும் பொதுப்பாயிரஞ்செய்த ஆத்திரேயன்பேராசிரியராவர்.

முகத்தும்ஒருபடியாகக்காணப்படும்"இவ்வோத்துஎன்னபெயர்த்தோ வெனின்" என வினவிக்கொண்டு அதன்மேலுரைப்பது நச்சினார்க் கினியர் வழக்கன்றென்பது தொல்காப்பியமுதற்கணுள்ள இருபத்து மூன்றியற்கும் ஈண்டுச்செய்யுளியற்கும் அவர் கூறும் உரைத்தொடக் கத்தான் எளிதிலறியலாகும்.

இவற்றுட் செய்யுளியல் நச்சினார்க்கினியருரை இற்றைக்குப் பதினைந்துவருடங்கட்குமுன் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின்பொருட் டுப்பழையதமிழ் ஏடுகள்தேடிச் சென்றகாலத்து ஆழ்வார்திருநகரியிற் கவிராஜகேசரி திருமேனிஇரத்தினகவிராயர்வழித்தோன்றிய தாயவலந்தீர்த்தான்கவிராயர்வீட்டில் இரண்டு ஏட்டுப்பிரதிகள் கிடைத்தன. இவற்றுடன் திருமயிலைவித்துவான் சண்முகம் பிள்ளையவர்கள் உதவிய தொல்காப்பியப்பிரதியினும் இச்செய்யுளியல் நச்சினார்க்கினியருரை யிருத்தலைக்கண்டு அதனையும் ஒப்புநோக்கிக் கொண்டு இம்மூன்றுபிரதியுமே வைத்து இச்செய்யுளியலுரை என் சிற்றறிவிற்கியன்றவரை பரிசோதிக்கப்பட்டதாகும். இந்நச்சினார்க் கினியருரையுடன் ஆழ்வார்திருநகரித்தேவர்பிரான்கவிராயரவர்க ளுதவியதும் இதுகாறும் அச்சிடப்படாததும் ஆகிய செய்யுளிய லுரையாசிரியருரைப்பிரதி மிகவுஞ் சிதிலமடைந்திருந்ததனை அவ் வேட்டிலுள்ளவாறே ஆராய்ந்துகொண்டு இவ்விருரையினையும் இப் புத்தகவாயிலாக வெளியிடலாயிற்று.

இப்பதிப்புத்தொடங்கப்பட்டு நெடுங்காலமாக முற்றுப்பெறாம லிருந்ததனைச் செந்தமிழ்ச்செல்வவேந்தரும் மதுரைத்தமிழ்ச்சங்கத் தலைவரும் எம் அன்னதாதாவுமாகிய மாட்சிமைதங்கிய ஸ்ரீமான் ஸ்ரீ ராஜராஜேசுவரஸேதுபதிமஹாராஜரவர்கள் விரைவினிறைவேற்று மாறு பல்காலுந்தூண்டி அதற்கு ஆவனசெய்துதவ அதனானே இந் நூல் வெளிவந்ததாதலின் அவர்கட்கு என்றும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையேன். இச்செய்யுளியலுரைப்பிரதிகளை அன்புடனுத விய நல்லோர் பெருந்தகைமை என்னாலெஞ்ஞான்றும் மறக்கற்பால தன்று. செந்தமிழ்ச்செல்வச்சேதுவேந்தரும் அவராதரிக்கும் மதுரைத் தமிழ்ச்சங்கமும் நீடூழிவாழ இறைவனருள்புரிக.

இங்ஙனம்,

ரா. இராகவையங்கார்,

ஸேதுஸமஸ்தானவித்வான்.

---

# பிழைதிருத்தம்.

முதல்நாற்பதாம்பக்கத்தின்மேல் எட்டுப்பக்கங்கள் மறித்துந்தவறாக மூப்பத்துமூன்றுமுதல் நாற்பதுவரை இலக்கமிடப்பட்டவற்றை முறையே நாற்பத்தொன்றுமுதலாக நாற்பத்தெட்டிறுதியாகத் திருத்திக்கொள்க. எண்பத்தெட்டாம்பக்கத்திலுள்ள தொண்ணூற்றொன்பதாஞ் சூத்திரமும் உரையும் மறித்துந் தவறாக எண்பத்தொன்பதாம்பக்கத்திலும் பதிக்கப்பட்டுள்ளன.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| எ | ௩௦ | வியல்புணர்தோரே | வியல்புணர்ந்தோரே |
| ௧௬ | ௨௨ | பிறித்து | பிரித்து |
| ௧௮ | ௧௧ | இயலயை | இயலசை |
| ,, | ௩௧ | ன்றூர் | என்றூர் |
| ௧௯ | ௧௨ | வடாஅது | படாகை |
| ,, | ௧௩ | படாகை | வடாஅது |
| ௨௦ | ௧ | போஓய்ப்போஓய் | போஒய்ப்போஒய் |
| ௨௧ | ௫ | வஞ்சீச்சீரா | வஞ்சிச்சீரா |
| ௨௮ | ௧௫ | தனதே | தன்றே |
| ௩௦ | ௩௧ | யாப்பாருங் | யாப்பருங் |
| ௬எ | ௨௫ | அஃதேயேனின் | அஃதேயெனின் |
| எ௫ | ௨௫ | துங்கலாவது | தூங்கலாவது |
| எ௯ | ௬ | பிரட்டை | மிரட்டை |
| ௮௦ | ௧௨ | தொடைமை | றொடைமை |
| ௮௧ | ௪ | இவ்வாசிரியா | இவ்வாசிரியர் |
| ௮௩ | ௪ | தெடுத்த | தொடுத்த |
| ௮எ | ௧௧ | அளஎபெடைத் | அளபெடைத் |
| ௮௮ | ௩ | பொழிபபெண் | பொழிப்பெண |
| ௮௯ | ௧௮ | யின்றுத | யின்றுதா |
| ௯௫ | ௨எ | யொரேவொன் | யொரோவொன் |
| ௧௦௧ | ௧௪ | முடியினிடட | முடியினிட்ட |
| ,, | ௩௩ | நான்காற | நான்காற் |
| ௧௦௨ | ௧ | நாறபத் | நாற்பத் |
| ௧௦௪ | ௩௧ | பதின்மூன்ற்னு | பதின்மூன்றனும் |
| ௧௨௧ | ௧௯ | மெய்துவிக்க | மெய்துவிக்க |
| ௧௩௩ | ௨எ | வெளியடத் | வெளிப்படத் |
| ௧௬௦ | ௧௮ | வெரிஞெடு | வெரிகொடு |
| ௧௮௧ | ௧௯ | தெநதையும் | தெந்தையும் |
| ௧௮௬ | ௨௬ | வரையரை | வரையறை |
| ௧௮௮ | ௧௨ | துறவைகேள் | துறைவகேள் |
| ௧௯௦ | ௧எ | ராலார் | ராரலார் |
| ,, | ௨௧ | யோரோவெழுத்து | யொரோவெழுத்து |
| ௨௦எ | ௯ | எழூத்து | எழுத்து |
| ௨௦௮ | ௨௧ | கொர்டியியனல்லார் | கொடியியனல்லார் |
| ௨௧௯ | ௧௨ | வீடற்குக | வீடற்குக் |

# சூத்திரமுதற்குறிப்பகராதி.

(எண் சூத்திரத்தினெண்.)

உ

கடவுள் துணை

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

## அ.—செய்யுளியல்

# நச்சினார்க்கினியருரை.

---

க. மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ
யாத்த சீரே யடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை யெனாஅ
நோக்கே பாவே யளவிய லெனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை யெனாஅக்
கேட்போர் களனே காலவகை யெனாஅப்
பயனே மெய்ப்பா டெச்சவகை யெனாஅ
முன்னம் பொருளே துறைவகை யெனாஅ
மாட்டே வண்ணமொ டியாப்பியல் வகையி
னாறுதலை யிட்ட வந்நா லைந்தும்
அம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழைபெனப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.

என்பது சூத்திரம். இவ்வோத்து செய்யுளது இலக்கணம் உணர்த்தினமையிற் செய்யுளியல் என்னும் பெயர்த்து: எனவே இவ்வோத்துநுதலியது செய்யுளிலக்கணமாயிற்று. பாயிரத்துள் 'வழக்குஞ் செய்யுளு மாயிருமுதலி, னெழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்வல்' என்றமையான் இதற்கு முன்னர்க்கூறிய அதிகாரங்களிலும் இவ்வதிகாரத்தும்எல்லாம் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவனகூறி, அவ்விரண்டும்பற்றிச் செய்யுள்

நிகழுமாதலால் அச்செய்யுட்குரிய இலக்கணத்தையெல்லாம் இவ்வோத்தினுட் டொகுத்துக் கூறுகின்றார் என்றுணர்க. இங்ஙனங்கூறவே, முற்கூறிய ஒத்துக்களோடு இயைபுடைத்தாயிற்று.

இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம்;—இவ்வோத்தினுள் மேற்கூறுகின்ற செய்யுட்கு உறுப்பாவன இவையென்று அவற்றது பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

**இதன் பொருள்.** மாத்திரையென்றது எழுத்திற் குரித்தாக எழுத்ததிகாரத்தோதிய மாத்திரைகள் தத்தம் அளவின் இறந்து பாவின் ஓசை வேறுபாடுகளையுணர்த்தி விராஅய் நிற்குநிலையை: மாத்திரையென்றது மாத்திரையளவை என்பதூஉம், எழுத்தியல் என்றது எழுத்தியல்வகையை என்பதூஉம் மேலைச்சூத்திரத்தாற் பெறுக. எழுத்தியல் வகையென்றது எழுத்ததிகாரத்துக் கூறிய எழுத்துக்கள் செய்யுட்கியலும் வகையை. அசைவகையென்றது இயலசையும் உரியசையும் என இருவகையாம் அசைக்கூறுபாட்டினை. யாத்தசீர் என்றது பொருள்பெறத் தொடர்ந்து நிற்குஞ் சீரை: எனவே அசையும் தனித்தனியே பொருள்பெறுவனவும் தனித்தனிப்பொருளின்றிச் சீராயவழிப் பொருள்பெறுவனவும் என இருவகையாம்; தேமா சாத்தன் எனவரும். அடியென்றது அச்சீர் இரண்டும்பலவுந்தொடர்ந்ததோருறுப்பை. யாப்பென்றது அவ்வடிதொறும் பொருளேற்றுநிற்பச் செய்வதோர் செய்கையை. மரபென்றது காலந்தொறும் இடந்தொறும் வழக்குத்திரிந்தவாற்றுக்கேற்ப வழுப்படாமற் செய்வதோர் முறைமையை. தூக்கென்றது பாக்களைத் துணித்து நிறுத்தலை. தொடைவகையென்றது எழுத்துச்சொற் பொருள்களை எதிரெதிர்நிறீஇத்தொடுக்கின்ற தொடைப்பகுதிகளை. நோக்கென்றது மாத்திரை முதலிய உறுப்புக்களையுடைத்தாய்க் கேட்போர்க்கு நோக்குதல்படச் செய்தலை. நோக்குதல் - பயன்கோடல். பாவென்றது இவ்வுறுப்புக்களையுடைத்தாய்ச் சேட்புலத்திருந்து சொல்லும் பொருளுந் தெரியாமல் ஒருவன்கூறியவழியும், இஃது என்னசெய்யுளென்றறிவதற்கு ஏதுவாகிப் பரந்துபடச் செய்வதோரோசையை. அளவியல் என்றது அடிவரையறையை. திணையென்றது அகத்திணையும் புறத்திணையும் அறியச்செய்தலை. கைகோள் என்றது அவ்வத்திணையொழுக்கம் அறியச் செய்தலை. கூற்றுவகையென்றது அச்செய்யுட்கேட்டோரை இது கூறுகின்றோரின்னாரென அறிவித்தலை. கூற்றிவை என்பது பாடமாயின் அஃது எண்ணிய மூன்றினையுந் தொகுத்ததாம். கேட்போர் என்றது இன்னார்க்குக்கூறுகின்றது இதுவெனத் தெரித்தலை. களனென்றது இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் முதலியன உணரச்செய்தலை. காலவகையென்றது முக்காலத்தும் திணைநிகழ்ச்சிக்கண்ணே பொருணிகழ்ச்சியுணரக்

கூறலை. பயனென்றது சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்தலை. மெய்ப்பாடென்றது சொற்கேட்டோர்க்குப் பொருள் கட்புலனாதலை. எச்சவகையென்றது சொல்லப்படாத ஒழிபும் தழீஇக்கொள்ளச்செய்தலை: அது கூற்றும் குறியும் எனவருதலின் வகையென்றார். முன்னமென்றது கூறுவாரையும் கூறக்கேட்டோரையும் குறிப்பான் எல்லாரும் கருதும்படி செய்தலை. பொருள் என்றது புலவன் றான்றோற்றிக்கொண்டு செய்வதோர் பொருண்மையை. துறைவகையென்றது முதலுங் கருவும் முறைபிறழ்ந்தாலும் இஃது இதன்பாற்படுமென்று ஒருதுறைப்படுத்தற்கேதுவாயதோர் கருவியுளதாகச் செய்தலை. மாட்டென்றது அகன்றும் அணுகியுங் கிடந்த பொருள்களைக் கொண்டுவந்து தொடராகக் கூட்டி முடித்தலை. வண்ணமென்றது ஒருபாவின்கண்ணிகழும் ஓசை விகற்பத்தை. எனாஅ என்ற எல்லாம் எண்ணிடைச்சொல். ஏகாரங்கள் எண்ணுப்பொருட்டு. யாப்பியல் வகையி னாறுதலையிட்ட அந்நாலைந்தும் என்றது யாப்பிலக்கணப்பகுதியால் அவ்வண்ணத்தொடு கூறிய இருபத்தாறும் எ-று. அம்மை........ வகுத்துரைத்தனரே என்றது அம்மைமுதலிய எண்வகை வனப்பொடும் முற்கூறிய இருபத்தாறுந்தொகுத்து முப்பத்துநான்குறுப்பாக்கி இம்முப்பத்துநான்கும் நல்லிசைப்புலவர் செய்யப்படுஞ்செய்யுட்கு உறுப்பாமென்று கூறி, அங்ஙனம் இலக்கணமே கூறிவிடாதே அவற்றைத்தாஞ் செய்தல் வன்மையினமைந்து சுவடுபட வகுத்த அவ்வத்துறையெல்லாம் போயினார் என்றவாறு.

செய்யுளுறுப்பெனக்கூறி வல்லிதின் வகுத்துரைத்தனரென மாறுக. இருபத்தாறென்றும் எட்டென்றும் இருவகையாற் றொகைகூறியது, இருபத்தாறும் தனிநிலைச் செய்யுட்கு ஒன்றொன்றனை இன்றியமையாவாய் வருதலும், அவ்வெட்டும் பல செய்யுட்டொடர்ந்த தொடர்நிலைச்செய்யுட்கே பெரும்பான்மையும் உறுப்பாய்வருதலும், தனிநிலைக்கண் ஒரோவொன்றாயும் வருதலும் அறிவித்தற்கு என்க. இவ்வுறுப்புக்குறையாமற் செய்யுட் செய்வார் நல்லிசைப்புலவர் என்பதூஉம், அடிவரையறை கூறியவற்றிற்கே இவ்விலக்கணமென்பதூஉம், * அடிவரையறையில்லா நூன்முதலிய ஆறற்கும் திணைமுதலிய உறுப்பு ஆகா என்பதூஉம், அவற்றுள் நூலும் உரையும் ஒழிந்த நான்கும் செய்தார் இசைப்புலவராகார் என்பதூஉம் உணர்க. இனி நூலும் உரையும் செய்தாரும் நல்லிசைப்புலவர் என்பது பின்னர் அவற்றிற் கிலக்கணம் கூறும்வழி யுணர்க. உறுப்பெனவே உறுப்புடைச் செய்யுளும் அதன்கண் அடங்கும், உறுப்பினது ஈட்டம் முதலாதலின்.

---

* 'அடிவரை யில்லன வாறென மொழிப' 'அவைதா, நூலி னான வுரை யினான......குறிப்பினான' என்பனவற்றானுணர்க.

இவ்வாசிரியர் தளையை உறுப்பாகக் கொள்ளாததென்னையெனின்:— தளையாவது சீரினது தொழிலாய்ப் பாக்களின் ஓசையைத்தட்டு இருசீரிணைந்ததாகும்; அவ்வாறிணைந்த இருசீரினையும் ஆசிரியரெல்லாம் இருசீர்க்குறளடியென அடியாகவே வகுத்துக்கொண்டாராதலின் தளையென வேறோருறுப்பின்றாம். அன்றியும், தளையான் அடிவகுப்பாரும் உளராயினன்றே அதனை உறுப்பென்று கொள்ளவேண்டுவது; அங்ஙனம் வகுத்துக்கொள்ளாமையின் உறுப்பென்னாது சீரது தொழிலாய் ஓசையைத்தட்டுநிற்பதொன்றென்றே கொண்டார். அதனை யுறுப்பென்பார்க்குச் சீரான் அடிவகுத்தல் குற்றமாம். **தொல்காப்பியரோடு ஒருசாலைமாணுக்கராகிய காக்கைபாடினியாரும்** உறுப்பென்னார் ; **பின்றோன்றிய காக்கைபாடினியார்** முதலியோர் கொள்வர்: அது பொருந்தாது.

இச்சூத்திரத்துட் கூறிய முறையே முறையாமாறு வருகின்ற சூத்திரங்களின் பொருட்கிடையான் உய்த்துணர்க. வனப்பெட்டும் தனித்தனி வருமாறும் தம்முள் இயைபுடைமையும் ஆண்டுணர்க. இவ்வுறுப்பினை ஆசிரியன்குறியும் உலகத்தார்குறியுமாகக் கொள்க. இவற்றை உயிரில்லாத கலவையுறுப்புப்போற் கொள்க. (க)

உ. அவற்றுண்
மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு
மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இது நிறுத்தமுறையானே மாத்திரையும் எழுத்தியலும் உணர்த்துகின்றது.

இ-ள். அவற்றுள் மாத்திரையளவும் என்பது முற்கூறியவற்றுள் மாத்திரையைச் செவிகருவியாக உணர்ந்துகொள்ளும் நிலையும். எழுத்தியல் வகையும் என்பது முற்கூறிய முப்பத்துமூன்றெழுத்தும் யாப்பிலக்கணத்திற்குப் பதினைந்துபெயரவாய் நடக்குங் கூறுபாடும். மேற்கிளந்தன்ன என்மனார் புலவர் என்பது எழுத்தோத்திற்கூறிய இலக்கணத்திற் பிறழாமை வருமென்று கூறுவர் புலவர். எ-று.

ஈண்டு அளவென்றது எழுத்திலக்கணத்தில் எழுத்திற்குக் கூறிய மாத்திரைகள் தத்தம் ஓசைகளைப் புலப்படுத்தி நிற்குமாறு தொடர்புபடுத்தி விராஅய் நிற்பச்செய்யும் நிலையை அளந்துகோடலை : என்றது "அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலும்" (தொல்-எழுத்- நூன்- ௩௩) என்னுஞ் சூத்திரத்தானும் "குறுமையு நெடுமையு மளவிற் கோடலின்" (ஷை- ஷை மொழி- ௧௭) என்னுஞ் சூத்திரத்தானும் செய்யுட்குரிய ஓசைதருமெனக்

கூறிய நெட்டெழுத்துக்களும் ஒற்றெழுத்துக்களும் தத்தம் பாவின் ஓசையை வேறுபடத்தந்து நிற்கும் என்றதாம். இவ்விரண்டு சூத்திரத்தோடும் மாத்திரையளவை மாட்டெறிந்தார். 'இவன் அளந்தஅளவு நன்று' என்றாற்போல, அளவு அளவுதொழின்மேனின்றது. இதனாலல்லது செய்யுள் வேறுபாடு உணரலாகாமையிற் சிறப்புறுப்பாக ஏனையுறுப்புக்களின் முன்னே கூறினார். உதாரணம்;— "வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி" (கலி-பாலை-க0) எனவும்; "கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுள்" (ஷை) எனவும் குற்றெழுத்துக்களெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரைமிகுத்து விராஅய் நின்றவாறு காண்க. "குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (அகம்-ச) "பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே" (கலி-பாலை-க0) எனக்குற்றெழுத்துக்களெல்லாம் இடையினின்ற ஒற்றெழுத்துக்களை மாத்திரை மிகுத்து விராஅய் நின்றவாறு காண்க. இதுவும் எழுத்திற்சூத்திரங்களிரண்டும்* ஆணைகூறிற்று.

இனி எழுத்து முப்பத்துமூன்றனுட் சில எழுத்துக்களை உயிர் என்னும் பெயர்கொடுத்து அவற்றைக் குறிலும், நெடிலும், அளபெடையும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரக்குறுக்கமும், ஔகாரக்குறுக்கமும் எனப் பெயர்வேறுபாடு கொடுத்து அதனோடு எட்டாக்கியும், சிலஎழுத்துக்களை மெய்என்னும் பெயர்கொடுத்து அவற்றை மெல்லினமும், வல்லினமும், இடையினமும், ஆய்தமும், ஒற்றளபெடையும் எனப் பெயர்வேறுபாடுகொடுத்து அதனோடுஆறாக்கியும், இவையிரண்டுங் கூடியவற்றை உயிர்மெய் எனவேறோர் பெயராக்கியும் மேற்கூறியவாறே †பதினைந்து பெயராய் ஈண்டுநடக்குமென்றற்கு எழுத்தியல்வகை யென்றார். இவ்வெழுத்தினை எழுத்தினுட்கூறிய சூத்திரங்களோடு மாட்டெறிந்தார். அவை 'ஔ

---

* 'அளபிறந்துயிர்த்தலும்' 'குறுமையுநெடுமையும்' என்னுமிரண்டும். இவர் இவ்வெழுத்ததிகாரச்சூத்திரங்களிரண்டும் எதிரதுபோற்றலென்னும் உத்திபற்றி இச்செய்யுளியற்சூத்திரத்தை நோக்கிக்கூறியன எனக்கொண்டு, ஈண்டைக்குரைத்தாங்கு அவற்றிற்கும் உரைத்து, இவ்வுதாரணங்களையே ஆண்டும் எடுத்துக்காட்டுதல் காண்க.

† "இவற்றோடு மகரக்குறுக்கமுங் கூட்டிப் பதினாறெழுத்தென்பாருமுளர். அதனாற் பயனென்னையெனிற், பாட்டுடைத்தலைவன் கேட்டுக்குக் காரணமாமென்பர்" என்றார் பேராசிரியர். அளபெடையை யொன்றாக எண்ணி மகரக்குறுக்கத்தைக்கூட்டிப் பதினைந்தெனவேகொண்டார் யாப்பருங்கலநூலார். (எழுத்தோத்து-உ)

கார விறுவாய்' (தொல்-எழுத்-நூன்-அ) 'அ, இ, உ, எ' (ஷெ-க) 'ஆ, ஈ ஊ, ஏ' (ஷெ-ச) 'நீட்டம் வேண்டின்' (ஷெ-சு) 'அவைதாங், குற்றியலிகரம்' (ஷெ-உ) 'ஓரள பாகு மிடனுமா ருண்டே' (ஷெ மொழி உச)'வல்லெழுத்தென்ப' (ஷெ-எழுத்-கக)'மெல்லெழுத்தென்ப' (ஷெ-உ௦) 'இடையெழுத்தென்ப' (ஷெ-உக) 'உயிர்மெய்யல்லன' (ஷெ-மொழி-உஎ) என்பனவாம். அளபெடையிரண்டும் எழுத்தாந்தன்மை * மேலே பெறுதும். இவற்றுட் குறிலும் நெடிலும் குற்றுகரமும் அசைக்குறுப்பாம். ஒற்றடுத்த அசைகள் வேறுபடாமையின் ஒற்று அசைக் குறுப்பாகா: ஒற்றளபெடைக்குறுப்பாம். நெடிலும், அளபெடையிரண்டும், உயிரும், உயிர்மெய்யும், மூவினமும், ஐகார ஔகாரக்குறுக்கமும் தொடைக்குறுப்பாம். குறிலும், நெடிலும், அளபெடையிரண்டும், மூவினமும், ஆய்தமும் வண்ணத்திற்குறுப்பாம். இவற்றை இயற்கையெழுத்துஞ் சார்பெழுத்தும் என இரண்டாகவும் வருப்பர்.† (உ)

௩. குறிலே நெடிலே குறிலிணை குறினெடி
லொற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரு நிரையு மென்றிசிற் பெயரே.

இது நிறுத்த முறையானே அசை கூறுகின்றது.

இ-ள். குறிலும் நெடிலும் தனித்துவந்தும், குறிலிரண்டு இணைந்து வந்தும், குறிற்பின்னர் நெடிலிணைந்துவந்தும், பின்னர் இந்நான்கும் ஒற்றொடு வருதலோடே பொருள்பெற ஆராய்ந்து நிரனிறை வகையான் நேரசையும் நிரையசையும் என்று பெயர்கூறினர் ஆசிரியர். எ-று.

குறிலும் நெடிலும் தம்முண் மாத்திரையொவ்வாவேனும் அவற்றின் மாத்திரையை நோக்காது எழுத்தாந்தன்மைநோக்கி இரண்டற்கும் ஒரோவோரலகு பெறுமென்றார். இதுகுறிலிணைக்குங் குறினெடிற்கும் ஒக்கும். நேரசை நிரையசை என்ற பெயர், ஆட்சியும் குணமும் காரணமாகப் பெற்ற பெயர். இரண்டெழுத்தானாகாது ஓரெழுத்தானாதலின் நேரியதன்றே: அதனான் நேரியஅசை நேரசை என்றாயிற்று. 'உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ' (தொல்-செய்-சச) என்றலின் ‡எண்ணப்படாத ஒற்

* செய்யுளியல் - கஎ,கஅ.

† சிறப்பெழுத்து உறுப்பெழுத்து எனத்தொகையும் செய்வர் யாப்பருங்கலவிருத்திகாரர்.

‡ 'எண்ணுப்படாத' எனவும் பிரதிபேதம்.

றுக்கள் பயன்படாது அசைந்துநிற்றலின் அசையென்னும் பெயரும் எய்திற்று. இரண்டெழுத்துநிரைதலின் இணையசையென்னும் பொருள்பட நிரையசை யென்றாயிற்று*.

**உதாரணம்;**—அ, ஆ, அல், ஆல் எனவும், பல, பலா, புகர், புகார் எனவும் வரும். ஒற்றுக்கள் எழுத்தாய் நின்று அலகுபெறுதற் குரியவல்ல வென்பது **மொழி மரபின்கண்ணே** 'மொழிப்படுத் திசைப்பினும்' (உ0) என்பதன்கட் கூறியவாற்றானுணர்க. குறில் நெடில் என எழுத்தாக ஓதிற்றேனும் 'நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி' (ஷ-க0) என்றதனால் நெடில் சொல்லாந்தன்மையும் 'குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே' (ஷ-கக) என்றதனாற்குறிலும் †சிறுபான்மைசொல்லாந்தன்மையும்பெறுதும்; அன்றியும் ஒற்றுக் கூறினமையானும் பெறுதும். 'உள்ளார் தோழி' என நேரசைநான்கும் 'வரி வரால் கலா வலின்' எனநிரையசை நான்கும் வந்தன. (௩)

ச. இருவகை யுகரமொ டியைந்தவை வரினே
நேர்பு நிரைபு மாகு மென்ப.

இது கூறாத அசைக்கூறுங் கூறுகின்றது.

**இ-ள்.** இருவகை உகரமொடு என்பது குற்றுகர முற்றுகரங்களோடே. அவையியைந்துவரின் எ-து மேற்கூறிய நேரசையும் நிரையசையும் பிளவுபடாது ஒருசொல்விழுக்காடுபட இயைந்துவரின். நேர்பும் நிரைபும் ஆகுமென்ப எ-து நிறுத்தமுறையே நேரசையோடியைந்த குற்றுகரமும் அதனோடியைந்த முற்றுகரமும் நேர்பசை எனப்படும்: நிரையசையோடு இயைந்த குற்றுகரமும் அதனோடியைந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும். **எ-று.**

நேரின்பின் உகரம்வருதலின் நேர்பு: நிரையின்பின் உகரம் வருதலின் நிரைபு என ஆட்சியும் குணமும் காரணமாகப்பெற்ற பெயராதல் மேற்கூறியவற்றுட்காண்க.

---

* "இனி நேரசைநிரையசைகளைத் தனியசை, இணையசை என்பாருமுளர்: என்னை? 'தனியசை யென்று மிணையசை யென்று, மிரண்டென மொழிப வியல்புணர்ந் தோரே' என்றார் காக்கைபாடினியார்" என்பது **யாப்பருங்கலவிருத்தி.** (அசையோத்து-க)

† 'குற்றெழுத்தைந்தும்' என்புழி முற்றும்மை எச்சப்பட்டுநின்றதெனக்கொண்டு தாமே நிறைந்துநின்று மொழியாதலில; சிலமெய்யொடு கூடி நிறைந்துநின்று மொழியாம் எனவுரைப்பர்.

உ-ம். வண்டு, நாகு, காம்பு, மின்னு, நாணு, தீர்வு: நேரசைமூன்றன் பின்னும் இருவகை உகரமும் வந்து நேர்பசையாயிற்று. குறிற் பின்வரும் இருவகையுகரமும் நேர்பசையாகாமை *மேற்கூறுகின்றார். வரகு, குரங்கு, மலாடு, மலாட்டு, இரவு, புணர்வு, உலாவு என நிரையசைநான்கின் பின்னர்க்குற்றுகரமும், நிரையசைமூன்றின்பின்னர் முற்றுகரமும் வந்து நிரைபசையாயிற்று. குறினெடி லொற்றின்பின் வந்த முற்றுகரம் உளவேற்காண்க.† 'குற்றிய லுகரமு மற்றென மொழிப' (தொல்-எழுத்-புணரி-௩) என்ற விதியாற் குற்றுகரம் புள்ளிபெற்றுநின்றும் புள்ளிபெற்றஒற்றுப்போன்று ஒடுங்கிநில்லாது தன்னான் ஊரப்பட்டமெய்யுந்தானும் அரைமாத்திரைத்தாய்நின்றதேனும், அகன்றிசைத்தலின் ஒற்றென்றலுமாகாது ஒருமாத்திரை பெற்ற உயிர்போல அகன்றிசையாமையின் உயிரென வேறோரலகுகொடுத்தலுமாகாது இதனைச்செயற்பாலதுவேறோரசையாக்குதலென நோக்கி நேர்பசை நிரைபசை என வேண்டினார் ஆசிரியர். பின்னுள்ளோர் அலகுபெறுமென்று கொண்டாரேனும் அவர்க்கும் அலகுபெறாவென்றுங் கொள்ளவேண்டியவாறும், தேமா, புளிமாவொழியக் காசு, பிறப்பு எனக்குற்றுகரவீறாக வேறுதாரணங்கொள்ளவேண்டியவாறும் உணர்க; எனவே குற்றுகரம் அலகுபெறாவாயிற்று. வண்டு, கொண்டி என ஓசை ஒவ்வாமை செவிகருவியாக உணர்க.

ஒரு மாத்திரைபெற்ற முற்றுகரம் நேர்பசை நிரைபசையாமோவெனின்;—வண்டு வண்டு வண்டு வண்டு என்புழிப் பிறந்தஅகவலோசை மின்னு மின்னு மின்னு மின்னு என்புழியும்பெறப்படுதலானும், வெண்பாட்டீற்றடி வண்டுஎனக் குற்றுகரவீற்றானின்றுழியுங் ‡கோணு என முற்றுகர வீற்றானின்றுழியும் ஒத்தவோசையவாமாகலானும் அவ்வசைகளாயிற்று. இஃது 'எழுத்தளவெஞ்சினும்............மொழிப' (செய்-௪௩) என்ற விதியாற் பெறுதும். (௬)

---

* செய் - ௫.

† 'முற்றுகரம் இரண்டசைப்பின்னும் வருங்காற் குறிலொற்றின்பின்னும் நெடிற்பின்னும் என நேர்பசைக்கு இரண்டல்லதாகாது. நிரைபசைக்கண்ணும் குறிலிணைப்பின்னும் குறினெடிற்பின்னுமல்லதாகாது. உதாரணம்—மின்னு, நாணு எனவும், உருமு, குலாவு எனவும்வரும். வாழ்வு, தாழ்வு என நெடிலொற்றின்பின்னும் முற்றுகரம் வந்ததாலெனின், அவை ஆகா' எனவும், 'இக்காட்டிய நான்குமே ஆவன' எனவும் கூறுவர் **பேராசிரியர்.**

‡ **பேராசிரியர்** "முற்றிய லுகர மொழிசிதைத்துக் கொளாஅ, நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்" என்பதனுரையில் 'மருங்கு என்றதனால் ஈற்றடிக்கண்ணும் இறுதிக்கண்ணே முற்றுகரம் விலக்குண்டதெனக்கொள்க: என்றார்க்குப் 'புலைமலர்த் தாரகலம் புல்லு' எனவும் 'கண்ணாரக் காணக் கதவு' எனவும் வருமாலெனின், அவை மரூஉவழக்கு என்க' எனக்கூறுவர்.

ரு. குறிலிணை யுகர மல்வழி யான.

இது தனிக்குறிலாகிய நேரசைப்பின்னும் இருவகை உகரம் வந்து நேர்பசையாதலை விலக்கினமையான் எய்தியதுவிலக்கியதூஉமாம். குற்றுகரங் குற்றெழுத்துப்போன்று அலகுபெறுமென்றமையின் எய்தாதது எய்துவித்து வழுவமைத்ததூஉமாம்.

இ-ள். குற்றெழுத்தோடிணைந்த குற்றியலுகரமும் முற்றியலுகரமும் அல்லாதவிடத்தே முற்கூறிய நேர்பசையாவன; எனவே குற்றெழுத்தோடிணைந்த குற்றியலுகரமும் முற்றியலுகரமும் வந்துழி நிரையசையாம். எ-று.

இனி, 'உடம்பொடுபுணர்த்தல்' என்பதனாற் குறிலிணையெனக் குற்றுகரத்தையும் குற்றெழுத்தென வேண்டினமைபெற்றாம். உ-ம்;—ஞாயிறு வலியது என ஒரசைப்பின்னர் வருகின்ற குறிற்பின்வந்தகுற்றுகரம் குற்றெழுத்துப்போன்று குறிலிணையுகரமாய் அலகுபெற்றதேனும் குற்றுகரமே யென்று இலக்கணமல்லதோர் வழுவமைத்தவாறு. இங்ஙனம் குற்றுகரம் எழுத்தளபெஞ்சுமெனவே, 'குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கி, ஞெற்றிய னகரமிசை நகரமொடு முதலும்' (எழுத்-மொழி-நச) என விதித்த நுந்தையென்னு முதற்கட் குற்றுகரம், எழுத்தளபெஞ்சிக் குற்றெழுத்துப்போன்று அலகுபெறுதலுங் கொள்க. கரு, மழு இவை முற்றுகரநிரையசையாம். (ரு)

சா. இயலசை முதலிரண் *டேனைய வுரியசை.

இது முற்கூறிய அசையை இருகூறுசெய்து அவற்றிற்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ-ள். இயலசை முதலிரண்டு எ-து முதற்கண்ணின்ற நேரும் நிரையும் இயற்றிக்கொள்ளப்படாது இயற்கைவகையான் நின்றுங்குன்று தளைத்தலின் இயலசை யென்றும்: ஏனைய வுரியசை எ-து ஒழிந்த இரண்டும் இயற்றிக்கொள்ளப்பட்டுந் தொழில்செய்தற்குரியவாதலின் உரியசையென்றும் பெயராம். எ-று. அங்ஙனம் இயற்றுதல் சீருட் காண்க. (சா)

எ. தனிக்குறின் முதலசை மொழிசிதைத் தாகாது.

இஃது எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இ-ள். மொழி சிதைத்து எ-து பொருடந்து ஒற்றுமைப்பட்டு நிற்பதோர் சொல்லைப் பொருளைக்கெடுத்து: தனிக் குறில்-முதலெழுத்தைத் தனிக்குறிலாக்கின்: முதலசையாகாது எ-து அது நேரசையாகாது. எ-று.

* 'டேனை யுரியசை' எனவும் பிரதிபேதம்.

எனவே, பொருள்தந்து ஒற்றுமைப்பட்டுநில்லாது விட்டிசைத்து நின்றுழி நேரசையாம் என்றவாறாயிற்று. புளிமா என்றவழிப் புளியென்று ஒற்றுமைப்பட்டுநின்ற சொல்லைச் சிதைத்து முதல்நின்ற பகர உகரத்தை நேரசையாக அலகிடப்படாது. இனி விட்டிசைத்து நேரசையாங்கால் ஏவல், குறிப்பு, தற்சுட்டு, வினா, சுட்டு என *ஐந்து பொருளின்கண் விட்டிசைத்து நேரசையாம். உதாரணம்;—

'வெறிகமழ் தண்புறவின் வீங்கி யுகளு
மறிமுலை யுண்ணாமை வேண்டிப்—பறிமுன்கை
அ உ மறியா வறிவி லிடைமகனே
நொ அலைய னின்னாட்டை நீ'

என்பது ஏவல். அ உ என்பது அகரந்தன்னையே சுட்டுதலிற் றற்சுட்டு. 'அ ஆ விழந்தானென் றெண்ணப் படும்'(நாலடி-க)என்பது அருட்குறிப்பு. அ அவனும், இ இவனும், உ உவனும் என்பது சுட்டு. எ எவன் என்பது வினா. 'உரையிற்கோடல்' என்பதனான் ஐந்திடத்தும் விட்டிசைத்தல் கொள்க; 'அ, இ, உ, எ, ஒ என்னுமப்பா லைந்தும்' (தொல்-எழுத். நான்-ஙு) எனவரும். இவை மொழிசிதைத்துத் தனிக்குறிலாய் நேரசையாயினவாறு காண்க. (எ)

அ. ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்.

இது குற்றியலிகரம் அலகுபெற்றும் அலகுபெறாதும்வரும்என்கிறது.

இ-ள். குற்றியலிகரம் ஒற்றியற்று எழுத்தியற்றுஎ-து குற்றியலிகரமாவது ஒற்றியல்பினையுடைத்து: அதுவேயன்றி, எழுத்தியல்பினையும் உடைத்து. எ-று.

என்றது அலகுபெறாதவழி ஒற்றாம்: அலகுபெற்றவழி யெழுத்தாம் என்றவாறு. உ-ம்;—'குழலினி தியாழினி தென்ப' (திருக்குறள்-சுசு) என ஆசிரியத்தளையாயும் 'அருளல்லதியாதெனின்' (ஷை-உருசு) எனக் கலித்தளையாயும் வருதலிற் குற்றியலிகரம் அலகுபெறாது ஒற்றியற்றாயிற்று. "நினக்கி யாரோ மாருது மென்று, வனப்பு நினக்கியா னுரைப்பக் கேண்மதி" என இக்குற்றியலிகரங்கள் அலகுபெறுதலின் எழுத்தியற்றாயிற்று.

---

* "இனி விட்டிசைக்கும் இடந்தான் மூன்றென்பது உரையிற்கொள்க. அவை 'அ ஆ விழந்தான்' எனக்குறிப்பின்கண் வருதலும், 'அ உ மறியா' எனச்சுட்டின்கண் வருதலும், 'நொ அலையல்' என ஏவற்கண் வருதலும் என விட்டிசைக்கும் இடந்தான் மூன்றெனப்பட்டது" என்பர் பேராசிரியர்.

இங்ஙனம் *சான்றோர் செய்யுள்வருதல் பெருவரவிற்று. ஒற்றினையும் எழுத்தென்று †ஒரோரிடத்துக்கூறினாரேனும், ஈண்டு ஒற்றுஎழுத்து எனக்கூறலின் ஒற்றல்லாவெழுத்தை யுணர்த்திற்று ‡. (அ)

கூ. முற்றிய லுகரமு மொழிசினை தத்துக் கொளாஅ
நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்.

இது குற்றியலுகரத்திற் கினமாகிய முற்றுகரத்திற்கு இலக்கணங் கூறுகின்றது.

இ-ள். முற்றிய........... கொளாஅ எ-து முற்றியலுகரமும் வருமொழியைச் சிதைத்துப் பிரித்து அவற்றினின்றும் வாங்கிக் கொடுக்கப் படா: எனவே நிலைமொழித்தொழிலாகிய உகரமும் நிலைமொழியீறு கெட நின்ற உகரமுமே கொள்க எ-று. நிற்ற...........மருங்கினும் எ-து அது தான் இடையினன்றி ஈற்றடி யிடத்திலும் இயலசையாய் நிற்றலின்று; எனவே உரியசையாயே நிற்கும். எ-று.

'நாணுடை யரிவை' (அகம்-ருச) என்புழி வருமொழியின் உகரம் வந்தேறியது முற்றுகரமாகாதென்றுணர்க. இனி 'நாணுத்தளை யாக வைகி' 'இரவுத்தயின் மடிந்த தானை' (அகம்-உச) 'சுறவுக்கொடி' (சிந்-முத்-சகூரு) 'விழவுத்தலைக்கொண்ட' (அகம்-கஎ) 'மின்னுநிமிர்ந்தன்ன' (நற்றிணை-ருக) இவை நிலைமொழித்தொழிலாகிய உகரம்பெற்றன. நீர்க்கு,நிழற்குஎனநின்ற நான்கனுருபு நிலைமொழித்தொழிலுகரமாம். உலவுகடல், விரவுகொடிஎனி

* 'மற்றியா னென்னுளேன் கொல்லோ' என்னுந் திருக்குறளினையும், (கசஎ௦௯) 'ஈசற் கியான்வைத்த வன்பி னகன்று' என்னுந் திருச்சிற்றம்பலக்கோவையினையும் (க௦௯) நோக்குக.

† 'உயிரில் லெழுத்து மெண்ணப் படாஅ' (செய்-சச) என ஒற்றினையும் எழுத்தென்றல் காண்க.

‡ பேராசிரியர், குற்றியலிகரம் ஒற்றியற்று யலகுபெறுமலே வரும் என்றுகூறி, யாப்பருங்கலவிருத்திகாரர் காட்டிய 'முந்தியாய் பெய்த வளை கழலும்' என்பன முதலிய உதாரணங்களைச் 'சான்றோர் செய்யுளல்லவென மறுக்க' எனவுரைப்பர்.

ன் அதுவாம். '*சுரும்புலவு நறுந்தொடையலள், கலனளவு நலனளவு' இவை நிலைமொழியீற்று மகரங்கெட நின்ற உகரம் முற்றுகரமாயின. இனி 'இனத் துள்ள தாகு மறிவு' (திருக்குறள்-சருச) 'இன்னா தினியார்ப் பிரிவு' (ஷ-ககருஅ) 'கருமமே கல்லார்கட் டேர்வு' 'பேரறிவாளர் துணிவு' 'பாடறியாதானை யிரவு' 'போற்றா தார்முன்னர்ச்செலவு' (நான்மணி-கo) 'புன்கணுடைத்தாற் புணர்வு' (திருக்குறள்-ககருஉ) †'புனைமலர்த்தாரகலம் புல்லு' ‡'அஞ்சொன் மடவார்க்கருளு' 'கோலு' இவை யடியிறுதிக்கண் உரியசையாய் நின்ற வாறு காண்க.

'நிற்றலின்றே' என்றதற்கு ஈற்றடிக்கண் நிற்றலில்லையென்று கூறின் அவை முடியாவாம். இவை அசைக்கும் ஓசைக்கும் உறுப்பாம். உகரமும் என்ற உம்மையாற் குற்றுகரமும் §'சேற்றுக்கானீலம்' எனப்பிரித்துக் கொடாமனின்றவாறும் 'எய்போற்கிடந்தானென்னேறு' (வெண்-வாகை-உஉ) என இறுதிக்கண் உரியசையாய் நின்றவாறுங்காண்க. நாகுண்டு என்பது குற்றுகரமாகாது. (கூ)

---

* "பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து, தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து, வண்டு சூழ விண்டு நீங்கி, நீர்வாய்க் கொண்ட நீல மூர்வா, யூதை வீச வூர வாய, மதியேர் நுண்டோ டொல்கி மாலை, நன்மணங் கமழும் பன்னல் லூர, வமையேர் வளைத்தோ ளம்பரி நெடுங்க, ணிணையீ ரோதி யேந்திள வன முலை, யிரும்பன் மலரிடை யெழுந்த மாவி, னறுந்தழை துயல்வருஞ் செறிந்தேந் தல்கு, லணிநகை நசைஇய வரியமர் சிலம்பின், மணிமருள் வார்குழல் வளரிளம் பிறைநுத, லொளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொடு, நளி முழவு முழங்கிய வணிநிலவு மணிநக, ரிருந்தளவு மலரளவு **சுரும்புலவு நறுந்தொடையலள்**, கலனளவு **கலனளவு நலனளவு** நலனளவு, பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ, தொருநீ மறைப்ப வொழிகுவ தன்றே." இது செய்யுளியலுரையில் 'இழைபு' என்பதற்கு **உரையாசிரியர்** எடுத்தோதிய பாட்டு.

† இன்மலர்க் கோதா யிலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு.

‡ மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலு
மஞ்சொன் மடவாட் கருளு. இவை **யாப்பருங்கலவிருத்தி மேற்கோள்** (ருஅ).

§ சேற்றுக்கா னீலஞ் செருவென்ற வேந்தன்வேல்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகய
லேற்றந் தொழில்வடிவு தம்முட் டடுமாற்றம்
வேற்றுமை யின்றியே யொத்தன மாவேட
ராற்றுக்கா லாட்டியர் கண்—இஃது இன்னிசைப்பஃறொடைக்கு **உரையாசிரியர்** காட்டிய பாட்டு.

கO. குற்றிய லுகரமு முற்றிய லுகரமு
மொற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே.

இது உரியசைகள் ஒற்றுப்பெற்று நிற்குமென எய்தாததெய்துவித்தது.

இ-ள். குற்றியலுகரமும் முற்றியலுகரமும்எ-து முற்கூறிய குற்றியலுகரமும் முற்றியலுகரமும். ஒற்றொடு............பெறுமே எ-து வருமொழி வல்லெழுத்துவரும்வழி வல்லொற்றோடு தோன்றி நிற்கவும் பெறும் எ-று.

உதாரணம்;—'சேற்றுக்கானீலம்' 'நாணுத்தளையாகவைகி' 'நெருப்புச்சினந்தணிந்த' 'கனவுக்கொனீ கண்டது' என இருவகை உகரமும் ஒற்றடுத்து உரியசையாயினவாறு காண்க. உம்மை எதிர்மறையாதலின் ஒற்றடாது வருதலே பெரும்பான்மை யென்றுணர்க. நிலைமொழி ஒற்றுமிக்கு உண்ணும், நடக்கும் என்பன தேமா புளிமாவாயே நிற்கும்; விக்குள், கடவுள் என்பனவும் அவை. (கO)

கக. அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே.

இது முற்கூறியவற்றிற்கும் இனி வருஞ் சீர்க்குமெல்லாம் புறநடை.

இ-ள். அசை............சேர்த்தி எ-து அசைகளையும் சீர்களையும் ஓசையோடு சேர்த்தி. வகுத்................ராறே எ-து வேறுபாடுணர்வித்தலும் செய்யுளிலக்கணத்துறைபோயினாரது நெறி. எ-று.

முற்கூறிய மாத்திரையென்னு முறுப்பின் ஓசையை யளந்து இன்னோசையும், இன்னாவோசையும் அறிந்து உணர்த்துக. எ-று.

உ—ம். 'தருக்கிப் புணர்ந்து தணந்த தமது, பொருப்புப் புடைத்துப் புடைத்து' என்றால் வெண்பாவீற்றடி இன்னோசைத்தாகாமையிற் 'பொருப்புத் தழைந்த பொழிந்து' என மெல்லினவோசைசேர்க்க இன்னோசைத்தாயிற்று. 'நிலமிசை நீடுவாழ் வார்' (திருக்குறள்-௩) இதனுள் வாழ்வாரென்னும் ஓசையைவகுத்து வார் என நேரசைச்சீராக்க அசையான் இன்னோசைத்தாயிற்று. இதனை வகையுளி என வேறோருறுப்பாக்குவாருமுளர். இனிக்கட்டளையடியையும் சீர்வகையடியையும் இசையொடுசேர்த்தி இன்னோசை யுணர்க. அஃது 'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' (செய்-௫அ) என்ற பதினன்கெழுத்தளவும்வருங் கட்டளைவெண்பாவும் வெண் சீரோயொன்றிற் கலித்தளைதட்டு இன்னோசை பெறாதாம். மாசேர்வாய் மாசேர்

வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என்றூற் றுள்ளலோசையும்பிறக்கும். இதனை மாசேர்வாய் பாதிரி காருருமுக் காருருமு எனின் இன்னோசைத்தாய்ச் செப்பலோசைபிறந்தது. இனிச்சீர்வகையடிக்கும் 'யாதானு நாடாமா லூரா மால்* யாதோதான்' என்றூற் சீர்வகைத்துள்ளலோசையும், 'என்னொருவன்'* என்றூற் சீர்வகைச் செப்பலோசையும் பிறக்குமாறு இசையொடு சேர்த்தியுணர்க. இனி ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசேர்வாய் என்றால் ஞாயிறு என்ற இயற்சீர்ப்பின் நிரையொன்றி ஆசிரியத்தளையாயிற்றேனும் கலித்தளைப்பாற்படுதலும்: ஞாயிறு புலிசேர்வாய் புலிசேர்வாய் மாசேர்வாய் என்றவழிப் புலிசேர்வாய் மாசேர்வாயென நேரொன்றிற்றேனும் கலித்தளைப்பாற்படுதலும் இசையொடு சேர்த்தியுணர்க. இவ்வாறே பிறவும் வகுத்துணர்த்துதல் அத்துறைபோயினர்க்கே தெரிவதாம்.

இனி உம்மையான் அடியு மிவ்வாறே வகுத்துணர்த்துக. 'நுதல திமையா நாட்ட மிகலட்டுக், கையது கணிச்சியொடு மழுவே' (அகம் - கடவுள் வாழ்த்து) என்புழி இகலட்டு என்னுஞ்சீர் குறித்தபொருளை முடியநாட்டும் யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது 'இகலட்டுக்கையது' எனமேலிலடியோடு பொருள்கூடிற்றேனும் இசையொடு சேர்த்தி வகுத்ததாயிற்று. இன்னும் அதனனே எழுத்தல்கிளவியாகிய 'சுஃறென்னுந்தண்டோட்டுப் பெண்ணை' என்பதனை அசையொடுஞ் சீரொடுஞ் சேர்த்துணர்த்தலுங் கொள்க. இனி அகவன் முதலிய நான்கோசையினையும் ஒன்று மூன்றாக்கி வகுத்தல் **தொல்காப்பியனர்** கருத்தன்றாயிற்று; என்னை? இயலசை மயங்கிய இயற்சீரும், உரியசை மயங்கிய இயற்சீரும், வெண்சீரும்பற்றி யோசை வேறுபடத்தோன்றலின் அவை பன்னிரண்டென்னும் வரையுளடங்காவென்பது பற்றி. இன்னும் 'இசையொடு சேர்த்தி' என்றதனனே 'ஓஎள பாகுமிடனுமா ருண்டே' (தொல்-மொழிமரபு-உச) என்ற ஐகாரமும் பொருள் சிதைந்திசையொடுசேர்தல் கொள்க. 'வண்கொன்றையை மருட்டுங் காண்' '† புகழ்த லானுப்பெருவண் மையனே' இவைமுதலிடைகடைகளிற் சிதைந்தும் வருமென்று கொள்க. (கக)

கஉ. ஈரசை கொண்டு மூவகை ‡புணர்த்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே.

---

* **திருக்குறள்**—ந கஎ.

† "செங்கண்மேதி கரும்புழக்கி, யங்கணீலத் தலரருந்திப், பொழிற்காஞ்சி நிழற்றுயிலுஞ், செழுநீர் நல்வய லூரன், புகழ்த லானுப் பெருவண் மையனே" இது **யாப்பருங்கலவிருத்திமேற்கோள்** (கரு).

‡ **உரையாசிரியரும்** இதுவே பாடங்கொண்டார். பேராசிரியர் 'புணர்ந்தும்' என ஓதுவர்.

இது நிறுத்தமுறையானே சீருணர்த்துவான் றொடங்கி அவற்றின் பகுதியும் அவற்றது பொதுவிலக்கணமும் உணர்த்திற்று.

இ-ள். ஈரசை யியைந்துகொண்டும் எ-து ஈரசை தன்னில் இயைந்து பொருள்கொண்டும். மூவசை யியைந்துகொண்டும் எ-து மூவசை தன்னி லியைந்து பொருள்கொண்டும். இற்றது சீரெனப்படும் எ-து அற்றுநிற்பது சீரென்று சிறப்பித்துச்சொல்லப்படும். சீர்புணர்த்தும் சீரெனப்படும் எ-து அவ்வாறன்றி அச்சீர்தான் ஒருசீரோடொருசீர் தொடரப் பிறர்கூட்டப்பட்டு நின்றாலுஞ் சீரென்று சொல்லப்படும்என்றுங் கொள்க. எ-று.

'இயைந்து' என்றதனையும் 'கொண்டு' என்றதனையும் ஈரசைக்கும் மூவசைக்குங் கூட்டிக் 'கொண்டு' என்பதற்குப் பொருள்கொண்டு என்று பொருளுரைக்க. நடுவுநின்ற 'சீர்' என்றதனைப் 'புணர்த்தும்' என்றதனோடு மாறிக்கூட்டுக. இயைந்து என்றதனான் ஒருசீர்க்கட் பலசொற்றொடர்ந்து வரினும் அவையொன்றுபட்டுநிற்றல் வேண்டுமென்றுணர்க.* எனவே,சொல்லெல்லாம் ஈரசையும் மூவசையுமாயல்லது வாராவென்பதூஉம், இனிப் புணர்த்து என்றதனான் அச்சீர்கள் அவ்வாறற்றுநிற்குமேனும் பிறர் தொடர்பு படுத்தும்வழிப் புணர்ச்சிவிகாரமெய்தாமற் றம்முட்டொடர்ந்துநிற்றலும் புணர்ச்சிவிகாரமெய்தியுந்தொடர்ந்துநிற்றலுமுடைய என்பதூஉங் கொள்க. உ—ம் 'போந்து சென்று சார்ந்து சார்ந்து, மதனுடை நெஞ்சமொடு நடுநாளென்னாது' இவை புணர்ச்சிவிகாரமெய்தாமல் இசையற்றுத்தொடர்ந்தன. 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' இது வல்லெழுத்துப்புணர்ச்சியெய்திற்று. இன்னும் அதனானே ஒரு சொல்லைப் பகுத்துச் சீர்க்குவேண்டுமாற்றான் வேறுசீராக்கியவழியும் அச்சீர்வகையான் வேறுசொல்லிலக்கணம் பெறுதும். அது 'மம்மர் நெஞ்சினேன் றொழுதுநின் றதுவே' என்புழிநின்றது என்னுங் குற்றுகரவீற்றுச்சொல்லினைப்பிரித்து அதுவேஎன வேறொரு சீராக்க முற்றுகரமாகி வேறுபடுதல் கொள்க. எனப்படும் என்று சிறப்பித்தவதனான் இவை சிறப்புடையஎன்பதூஉம், ஓரசைச்சீர் இவைபோலச் சிறப்பில என்பதூஉம் உணர்த்திற்று. உண்ணாநின்றான் என நாலசையானும் வருமாலெனின், அவை பிளவுபட்டு நிற்றலின் ஒரு சீரெனப்படாமையானும், அவை சீராகவருஞ்செய்யுளின்மையானும், வஞ்சியுள் 'நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்' (பட்டினப்பாலை) என்ற ஆசிரியவடியினை நாலசைச் சீர் காட்டவேண்டுவார் இருசீரடியாகவுரைப்பினும் அவற்றிற்குத் தூங்க

* 'மற்றுச் சீரென்றதென்னையெனின், பாணிபோன்று இலயம்படநிற்றலான் அது சீரெனத் தொழிற்பெயராம்; என்னை? சொற்சீர்த்திறுதல் என்புழித் தொழிற்படுத்தோதினமையின்' என்றார் பேராசிரியர்.

லோசையின்றாகலானும், சீர்தம்முட்புணர்ந்திறுதலின்மையானும், வஞ்சிச் **சீர் அறுபது** காட்டுகின்றவழி யாண்டும் நேர்பசை நிரைபசைகள் அலகுபெறாமையானும் **தொல்காப்பியனார்** கொள்ளார். உ-ம் 'சாத்தன், கொற்றன்,தேமா ஈரசைச்சீர்கொண்டன. கானப்பேர், சாய்க்கானம், தேமாங்காய் எனவும் உண்ணுதன, தின்னுதன, தேமாங்கனி எனவும் இவை மூவசைகொண்டன. பிறர் தொடர்புபடுத்தின செய்யுள் 'உலகமுவப்ப வலனேர்பு' (திருமுருகாற்றுப்படை) 'யாதானு நாடாமால்' எனவும் 'வசையில் புகழ்வயங்கு வெண்மீன்' (பட்டினப்பாலை)எனவும் ஈரசைச்சீரும் மூவசைச்சீரும் வந்தன. (கஉ)

**கங.** இயலசை மயக்க மியற்சீ ரேனை
யுரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்.

இது முறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்முண் மயங்கிவரும் ஈரசைச்சீர் உணர்த்திற்று.

**இ-ள்.** இயலசை மயங்கினவற்றை இயற்சீரென்றும் உரியசை மயங்கினவற்றை ஆசிரியவுரிச்சீரென்றும் கூறுக. **எ-று.**

மயக்கம் என்றது தம்மொடுதாமயங்குதலும் தம்மொடுபிறிதுமயங்குதலுமாம். உ-ம். நேர்நேர், நிரைநிரை எனத் தம்மொடுதாமயங்கின ; இரண்டினையும் பிறித்து நேர்நிரை நிரைநேர் எனப் பிறிதொடுமயக்க இந்நான்கும் இயற்சீராயிற்று. இந்நான்கு வழியுமல்லது வேறுகூட்டமின்மையும் உணர்க. இவற்றைத் தேமா, புளிமா, பாதிரி, கணவிரிஎனவும், கருவிளம் கூவிளம் எனவும் காட்டுப; பிறவாறுங்காட்டுப. நேர்புநேர்பு நிரைபுநிரைபு எனத் தம்மொடுதாமயங்கின. இரண்டினையும் பிறித்து நேர்பு நிரைபு, நிரைபு நேர்பு எனப் பிறிதொடுமயக்க இந்நான்கும் ஆசிரிய வுரிச்சீராயிற்று. இவற்றை வீடுபேறு, தடவுமருது, பாறுகுருகு, வரகுசோறு எனக்காட்டுப. செய்யுள்—'அவரோ, சேடில் விழுப்பொரு டருமார் பாசிலை' (குறுந்தொகை-உசு) என நான்கியற்சீரும் வந்தன. 'வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப' எனவும் 'நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்து' (அகம்-கூசு) எனவும் 'பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்' எனவும் 'வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்' (திருமுருகாற்றுப்படை) எனவும் வந்தவற்றுள் வீற்றுவீற்றுஎனவும் இறவுக்கலித்துஎனவும் பூண்டுகிடந்து எனவும் வசிந்துவாங்குஎனவும் நான்காசிரியவுரிச்சீரும் வந்தன. நான்கு பாவிற்கும்இயற்றலானும், இயல்புவகையான் ஒரோசொல்லாய்வருதல் பெரும்பான்மை யாகலானும் இயற்சீரெனவும், ஆசிரியத்திற்கு உரிமையான் உரிச்சீரெனவும் ஆட்சியுங்குணமுங்காரணமாகப் பெற்றபெயர். 'இயற்சீ

றிறுதிமுன்' (செய்-கக) எனவும் 'வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீர்'(ஷ-உந) எனவும் பிறண்டும் ஆள்ப. (கங)

கச. முன்னிரை வரினு மன்ன வாகும்.

இஃது இயலசையும் உரியசையும் மயங்கிச் சீராமாறு கூறுகின்றது.

இ-ள். 'உரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்' (செய்-கந) என்ற அதிகாரத்தான் அவ்வுரியசைமுன்னர் நிரையசைவரினும் அவ்வுரியசை மயக்கமாகிய ஆசிரியவுரிச்சீராம். எ-று.

அவை நேர்புநிரை, நிரைபுநிரை. உ-ம். நீடுகொடி நாணுத்தளை, உரறுபுலி விரவுகொடிஎனவரும். செய்யுள்—'ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ' (புறம்-டுரு) 'நாணுத்தளை யாக வைகிமாண் வினைக்கு' 'களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை' (புறம்-கூச) 'உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை' (ஷ-ந) 'ஓங்குதிரை வியன்பரப்பின்' (மதுரைக்காஞ்சி) 'பன்னுதமிழ்ப் பாவலர்க்கு' 'களிற்றுநிணத் துகிலுடுத்த' 'பிணர்மோட்டுப் பேய்மகளிர்' 'நிலவுமணல் வியன்கானல்' எனவும் ஆசிரியத்திலும் வஞ்சியிலும் வந்தன. 'தூங்குசிறை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டு' எனவும் 'ஏடுகொடி யாக வெழுதுகோ' எனவும் வெண்பாவினுட் கட்டளையடியல்வழிச்சிறுபான்மைவந்தன. கட்டளையடியன்மை இசையொடுசேர்த்தியுணர்க. இவை இயலசையோடு மயங்கினமையிற் பாதிரி கணவிரிபோலக் கொள்க. (கச)

கரு. நேரவ ணிற்பி னியற்சீர்ப் பால.

இஃது இயலசை உரியசை மயக்கத்துப் பிறப்பன இரண்டியற்சீருணர்த்திற்று.

இ-ள். அவண் நேர்நிற்பின் இயற்சீர்ப்பால எ-து மேனின்ற அதிகாரத்தான் உரியசையிரண்டன்பின்னும் நேரசைவரின் அவையிரண்டும் இயற்சீர்ப்பாலவாம். * எ-று.

அவை நேர்புநேர், நிரைபுநேர்; உ-ம். சேற்றுக்கால், வேணுக்கோல், களிற்றுத்தாள், முழவுத்தோள் எனவரும்; நீத்துநீர், குளத்துநீர் எனவும் போதுபூ, யேவுசீர், விறகுதீ, உருமுதீ எனவும் கண்டுகொள்க. இவையெல்லாம் பாதிரி கணவிரி என்னும் இயற்சீர்ப்பாற்படும். போதுபூ, விறகுதீ

*"இவற்றைஆசிரியவுரிச்சீர்ப்பின்வைத்ததென்னையெனின்;—இவையும் அவைபோல ஈண்டொருங்கியைதல் பெரும்பான்மையென்பதறிவித்தற் கெனவுணர்க" என்றார் பேராசிரியர்.

என்னுமிரண்டன்கட் குற்றுகரம் மேல்வரும் நெடிலோடிணைந்து நிரையாய்ப் பாதிரி கணவிரிபோல நிரையாமோவெனின்; ஆகா;—அக்குற்றுகரம் நேர்பு நிரைபுமாயேநின்று நேருநிரையு முதலாய் நிரையீருகிய சீர்தளை கொண் டாங்குத் தட்கும்; செய்யுள்—'நீத்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மான்றேர்' எனப் போதுபூவும், விறகுதீயும் வந்தன. (கரு)

கசா. இயலசை யீற்றுமு னுரியசை வரினே
நிரையசை யியல வாகு மென்ப.

இது மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் உரியசை இய லசைமயக்கத்துள் ஒழிந்துநின்ற நான்கியற்சீரும் உணர்த்திற்று.

இ-ள். இயலசை.........வரினே எ-து இயலசையிரண்டன்பின்னும் உரியசையிரண்டும் ஒன்றிரண்டுசெய்து மயங்கி நான்காங்கால் அவ்விரண் டுரியசையும்; நிரை...... மென்ப எ-து இயலசைமயக்கமாகிய இயற்சீர் நான்க னுள்நிரையீற்ற பாதிரியும் கணவிரியும்போல வருஞ் சீரொடு தட்கும். எ-று.

அவை நேர்நேர்பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரைநிரைபு என வருங் கால் நேர்முதலிரண்டும் பாதிரிபோலவும் நிரைமுதலிரண்டும் கணவிரிபோ லவும் கொள்க.

*இச்சூத்திரமும் தளைக்குமாறு கூறிற்றும். உ-ம். போரேறு நன் ஞணு, பூமருது காருருமு, கடியாறு பெருநாணு, மழகளிறு நரையுருமு எனவரும். (கசா)

கஎ. அளபெடை யசைநிலை யாகலு முரித்தே.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

இ-ள். எழுத்ததிகாரத்து 'நெட்டெழுத்தேழேயோரெழுத்தொருமொழி' (மொழி-க0) என்றதனுற் சொல்லாந்தன்மையெய்திய அளபெடை ஈண்டு ஈரசைச்சீர்கூறிய அதிகாரத்தானும் இயற்சீராந் தன்மையெய்திற்று, அத னையே எழுத்துநிலைமைப்படுத்து அசைநிலையும்வேண்டலின். அளபெடை .........முரித்தே எ-து அளபெடை மேற்கூறிய இயற்சீர்நிலைமை பெறுத லேயன்றி ஓரசையாய் நிற்றலுமுரித்து. எ-று.

---

* "இச்சூத்திரமும் சீராமாறேயன்றிச் சீர்தளைக்குமாறுங் கூறியவாறுயிற்று. இவற்றைப் போரேறு பூமருது கடியாறு மழகளிறு எனினும் இழுக் காது" என்றார் **பேராசிரியரும்.**

உம்மையாற் சீர்நிலையாதலேவலியுடைத்து. நிலையென்றதனால் எழுத்துநிலையும் நேர்ந்தார். அங்ஙனம் சீர்நிலை பெறுங்கால் முற்கூறிய ஈரசைச்சீர் பதினாறனுள் ஆசிரியவுரிச்சீராறும், போதுபூ விறகுதீ என்னுமிரண்டியற்சீரும் ஒழித்து ஒழிந்த நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை, நேர்நேர்பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரைநிரைபு என்னுமியற்சீர் எட்டுமாம். அங்ஙனமாதல் ஒருமொழியகத்தேயுடைய என்பது. ஆஅ எனத்தேமாவாயிற்று. கடாஅ எனப் புளிமாவாயிற்று. யாஅது என ஈரெழுத்து ஞாயிறு ஆயிற்று; என்னை? கடாஅ என்புழி அளபெடையதாகாரம் பிரித்துக் குறினெடிலாயினாற்போல ஆகாரத்துப் பின்னின்ற அகரமுங் குற்றுகரமுங் குறிலிணையெனப் பட்டமையினென்பது. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரி. வடாஅது என்பது மூவெழுத்துக்கணவிரியாம். படாகையென நாலெழுத்துக்கணவிரியாம். ஆஅங்கு என ஈரெழுத்துப் போரேறும். ஆஅவது என மூவெழுத்துப் பூமருது. புகாஅர்த்து என்பது கடியாறும். பராஅயது என்பது மழகளிறும். இவை ஒரே சொல்லாகிநின்று எட்டியற்சீரானும் அளபெடுத்தன. 'தேஎந் தேரும் பூஉம் புறவிற், போஒரி துள்ளுஞ் சோஒரி நண்ணிக், குராஅம் பிணையல் விராஅங் குஞ்சிக், குடாஅரிக் கோவல ரடாஅரின் வைத்த, கானெறிச் சென்றனர் கொல்லோ, மேனெறிச் சென்று பொருள்படைப் போரே'—இதனுள் இயலசை மயங்கிய இயற்சீர் நான்கும் வந்தன. ஒழிந்த நான்கும் இவற்றுள் அடங்கும். இங்ஙனம் சீர்நிலையெய்திய வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாயது இயற்கையளபெடை என்றும், செய்யுட்குப்புலவர் ஓசைகருதிச் செய்துகொண்டது செயற்கையளபெடை என்றுங்கொள்க; இவ்விதி கட்டளையடிக்கென்றுணர்க. இவை சீர்நிலையடிக்காயிற் றனிநிலை, முதனிலை இடைநிலை, இறுதிநிலை எனக்கொள்வர். 'ஆஅ வளிய வலவன் *' எனவும், 'எள் சிதைய வழாஅ லெல்லாநின், சேஎயரி சிந்திய கண்' எனவுமிவை நேர்நேரும் நிரைநேருமாக அலகிடுப. இனி ஓரசையாங்காற் செயற்கையளபெடைசீர்நிலையாதல் செய்யுட்கேயுரியவாதல்போல,இயற்கையளபெடைஅசைநிலையாதல் செய்யுட்கேயுரியவாதலும், புணர்ச்சிவகையான் எழுத்துப்பேறாகிய அளபெடைகள் அசைநிலையாதலும், பொருள் புலப்பாட்டிற்குப் புலவர் செய்த செயற்கையளபெடையுட்சிலவும் அசைநிலையாதலுங்கொள்க. உ-ம்.

---

* "ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினொடு, டீஇ நிரைகொண் டீரளைப் பள்ளியுட், டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றேரண், மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதா, லோஒ வுழக்குந் துயர்".

'உப்போஒ வெனவுரைத்து மீள்வாள் *' என்புழிப்பண்டமாற்றின்கட் பகர வோகாரத்திற்குள்ள ஓரலகே பெறுதலின் ஓரசையாயிற்று. "நூறேஒ நூறு "† என்பதும் அது. இவை இயற்கையளபெடை யசைநிலையாயின. 'பலாஅக்கோட்டுத் தீங்கனிமேற் பாய்ந்த கடுவன்' என்புழிப் 'பலாஅ' எனப் புளிமாவாகாது ஓரசையாய்க் கோடு என்பதுங் கூட்டிக் கணவிரியாக அலகு பெறும். 'குறியதன் முன்னரும்' (எழுத்-உயிர்மயங்-உச) என்னுஞ் சூத்திரத்தாற் பெற்ற அகரமும் அளபெடைபோல் அசைநிலையாயிற்று. 'நிலம் பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நீணிலா மென்றோள், கலம்போஒய்ப்போஒய்க் கௌவை செய' எனப் போஒய்ப்போஒய் எனச் செய்கைக்குறிப்புப் புலப்படச் செய்யுள்செய்தவழியும் அசைநிலையாயிற்று. இவை ஓசை சிதைத்தாற் செய்யுளின்பஞ் சிதையுமென்று அலகிருக்கைக்கட் சிதைத்தார். இவை அலகுபெறுமெனவே, நெடிலின் றன்மையேயாயிற்று. இதனானே குற்றிகரம் போல் எழுத்தாந்தன்மையும்பெற்றும். இனி, வாஅழ்க எனவும், தூஉமணி எனவும் மூவகைச்சீரானும் வருதல் உம்மையாற் சீர்நிலை யெய்துமென்றதனாற் பெறுதும். அவை வெண்சீரும் வஞ்சிச்சீருமாம். (கஎ)

கஅ. ஒற்றள பெடுப்பினு மற்றென மொழிப.

இஃது ஒற்றளபெடையும் சீர்நிலையாதலேயன்றி அசைநிலையுமாமென எய்தாததெய்துவித்தது.

இ-ள். ஒற்......மொழிப எ-து ஒற்றளபெடுத்தாலும் உயிரளபெடைபோலச் சீர்நிலையெய்தலும் ஓரசையாய் நிற்றலுமுரித்து. எ.று.

ஒற்றெனவே, 'ங ஞ ண ந ம ன வ ய ல ள வாய்தம்' என்னும் பதினொரொற்றுங் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் அளபெடுத்தல் பெறுதும். மங்ங்கலம் எனவும், அரங்ங்கம் எனவும் வரும். ஏனையவற்றோடும் ஒட்டுக. சீராமெனவே, ஈரசைச்சீரும் மூவசைச்சீருமாதல் பெறுதும். மேல் எழுவகைச்சீர் கூறுதலின் இதனை ஈண்டுவைத்தார். ஓரசையாதல் சிறுபான்மை.

---

* "இடைநுடங்க வீர்ங்கோதை பின்றாழ வாட்கண், புடைபெயரப் போழ்வாய் திறந்து—கடைகடையி, னுப்போஒ வெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவற், கொப்போநீர் வேலி யுலகு".

† "பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள், சொல்லுக்குத் தோற்றின்னந் தூற்றினவா—னெல்லுக்கு, நூறேஒநூ றென்பா ளுடங்குடைக்கு மென்முலைக்கு, மாறேமா லென்றளந்த மண்" 'தோற்றிலவால்' எனவும் பாடம். இவை யாப்பருங்கலவிருத்திமேற்கோள்.

உ-ம். கண்ண் தண்ண்ணெனக் கண்டும்கேட்டும்' என்புழிக்கண்ண்ணென்பது சீர்நிலையெய்தித் தேமாவாயிற்று. தண்ண்ணென என்றவழித் தட்பத்திற் சிறப்புக்கூறுதற்காக இயற்சீர்க்கண் ணகரவொற்றினை மிகக்கொடுத்து அளபெடுத்துச் செய்யுள்செய்தான். அது, மாசெல்சுரம் என்னும் வஞ்சிச்சீராவதனை ஆகற்க: பாதிரி என முன்னின்ற இயற்சீரேயாக என வழுவமைத்தவாறு. இதுவும் ஓசை சிதையாதுநிற்கவும் அலகுபெறுதெனவே எழுத்தின்றன்மை எய்திற்று. இது வழக்கிற்குஞ் செய்யுட்கும் உறுப்பாய் நின்றன அளபெழுதலும், தோற்றிக்கொண்டன அளபெழுதலுமாம். சுள்ள்ளென்றது, புள்ள்ளென்றது, நள்ள்ளென்றது, கிண்ண்ணென்றது—இவை வழக்கிற்குஞ் செய்யுட்குமுரிய. தோற்றினது—கண்ண்ணென முற்காட்டினும். இருவகை யுகரமீறுய்க் கொங்ங்கு, குரங்ங்கு, மின்ன்னு, எஃஃகு என்பன உயிரளபெடையின் வருமெழுத்தோடுகூடிப் பேரேறு, கடியாறென நிற்குமாறுபோலாது வண்டு வரகு என்னும் உரியசைப்பாற்படுதலின் உயிரளபெடையின் வேறாக வோதினார். இருவகையுகரத்தோ டியையாதவழிக் 'கண்ண்டண்ண்ணென' 'கஃஃறென்னுங் கல்லதரத்தம்' எனத் தேமாவாக அலகுபெற்றன. இனி, 'நீட்டம் வேண்டின்' (எழுத்-நான்-சு) என்னுஞ் சூத்திரத்துட்காட்டிய **'செய்யுட்க ளோசை'** * **என்னும் மாபுராணச் சூத்திரத்துள்** 'மைதீரொற்று' என்றதனானே, சீர்வகை யடியோசைகெடின் ஒற்றில்லாத சொல்லிற்கோசை அவ்வொற்றை உண்டாக்கியுநிற்குமென்றும், 'குன்றுமேலொற்றளபுங்கொள்' என்றதனானே அவ்வொற்றானும் ஓசை நிறையாவிடின் அங்ஙனம் வருவித்த ஒற்றை அளபெடுத்துங்கொள்கவென்றுங் கூறியவிதியுங்கொள்க. "அம்பொரைங்.........னன்"†இதனுள் யகரவகரவொற்றில்வழி ஓசை அவ்வொற்றையுண்டாக்கிற்று. அஃது அளபெடுத்தது வந்துழிக்காண்க. (கஅ)

**கக.** இயற்சீ ரிறுதிமு னேரவ ணிற்பி
னுரிச்சீர் வெண்பா வாகு மென்ப.

---

* "செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு, மையப்பா டின்றி யணையுமா—மைதீரொற், றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு, குன்றுமே லொற்றளபுங் கொள்"

† "அம்பொ ரைந்து டைய்ய காம னைய்ய னென்ன வந்தண, னம்புநீர ரல்லர் நன்கு ரங்கு நீர ராயினுந், தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பி னெஞ்சுநொந்து தாழ்வர்தாம், பொங்க ரவ்வ வல்கு லாரெ னப்பு கன்று சொல்லினன்." (**சிந்தாமணி-சுரமஞ்-ஙு**). 'தங்கு ரவ்வர்' 'பொங்க ரவ்வ' என ஒற்றுமிகுத்தே இச்சங்கத்துள்ள பழைய சிந்தாமணிப் பிரதியொன்றிற் காணப்பட்டது.

இது முறையானே மூவகைச்சீருணர்த்துதலொடங்கி, அவற்றுள் வெண்பாவுரிச்சீர் உணர்த்துகின்றார்.

இ-ள். அவண் இயற்சீரிறுதிமுன் நேர்நிற்பின் எ-து அவ்விடத்திற் கூறிய இயலசையானாகிய இயற்சீரிறுதிக்கண் நேரசைவந்துநிற்பின்: வெண் பா வுரிச்சீராகுமென்ப எ-து அந்நான்கும் வெண்பாவுரிச்சீராமென்று கூறு வர் புலவர். எ-று.

அவை.—நேர்நேர்நேர், நிரைநிரைநேர், நேர்நிரைநேர், நிரைநேர்நேர் எனவரும். இவற்றை மாசெல்வாய், புலிவருவாய், மாவருவாய், புலிசெல் வாய் எனவும்: தேமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய், புளிமாங்காய் எனவுங்காட்டுக. செய்யுள்.—“காமன்கா ணென்று கருவூரார் பாராட்டத், தாமந்தாழ் கோதை வருவானை—யாமு, மிருகுடங்கை யானெதிரே கூப்பித் தொழக்கண், டொருகுடங்கை யாயின கண்” என நான்கு வெண்சீருங் * காண்க. இஃது ஆட்சியுங் குணமுங் காரணமாகப் பெற்றபெயர், வெண்பா விற்கும் அதன் பகுதியாகிய கலிப்பாவிற்கு முரிமையின். இனிப் பொது வாக இயற்சீரென்றால் இயலிசைமயக்கமாகிய இயற்சீர் நான்கினையும், பொ துவாக உரிச்சீரென்றால் உரியசைமயக்கமாகிய உரிச்சீர் நான்கினையுமே கோடல்வேண்டினார் இத்தொல்காப்பியனாரென்பது, இச்சூத்திரத்தானும் ‘வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ, ரின்பா நேரடிக்’ கென்பதனானும் (செய்-உ௩) பெறுதும்; இதனான் ஆட்சியும் பெற்றாம். இதுவுங் கட்டளை யடிக்குஞ் சீர்வகையடிக்குமுரித்து. (கக)

உ0. வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவசை யான.

இஃது ஒழிந்த மூவசைச்சீர் கூறுகின்றது.

இ-ள். வஞ்சிச்சீரென்று கூறுபடுக்கப்பட்டன, மேற்கூறிய வெண்சீ ரல்லா மூவசைச்சீரெல்லாம். எ-று.

அவை வருமாறு;—நேர், நிரை, நேர்பு, நிரைபு என நான்கனையும் நிறு த்தி, ஒருகால் நேர்முன்னாகவும், ஒருகால் நிரைமுன்னாகவும், ஒருகால் நேர்

---

‘*இதனுட் காமன்காண் எனவும், கருவூரார் எனவும், இருகுடங்கை எனவும், யானெதிரே எனவும் நான்குவெண்சீரும் வந்தன’ என்றார் பேரா சிரியர்.

என்பது நிரையீற்றிரட்டை. இதுவும் இயைபாய் அடங்கிற்று. செந்தொடையாய் அடங்குவன உளவேற் கண்டுகொள்க. மற்று, இவை இவ்வாறு அடங்குவனவற்றை விதந்தோதுவதென்னையெனின், இவையுந் தொடைப் பாடுகண்டு ஐயுற்றானை ஐயமறுத்தானென்பது. எனவே, ஒழிந்தபொருள்கோள் தாமேநின்று தொடைப்பாடுகாட்டி ஐயஞ்செய்யாமையின் அவை கூறானாயினனென்பது. நிரனிறையாயின் இனைத்தெனநிறுத்தபொருட்கேற்ப எதிர்பொருளும் எண்ணி நிறுத்துச் செய்யப்படுதலின் அது வேறுதொடையாங்கொலென்று ஐயஞ்செல்லுமென்பது. மொழிந்தவற்றியலானெனவே, தனக்கு வேறியல்பில்லாத செந்தொடை நீக்கப்பட்டது. பொழிப்பும் ஒரூஉவும்போல ஓரடியுள் நின்றுந் தொடைமைசெய்யினும் அவை முற்றாய் அடங்கும். ஈரடிக்கூட்டத்துத் தத்தம் வகையாற் தொடைமை செய்யாவென்பது. (கக)

கூஉ. அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை*

இது மோனையிலக்கணங் கூறுகின்றது.

இ-ள். அடிதோறும் முதற்கண் ஓரெழுத்துவரத் தொடுப்பது மோனைத்தொடையாம். எ-று.

முன்னர் "அடியுள் ளனவே தளையொடு தொடையே" (செய்-ந௩) என்பதனான் ஓரடிக்கண்ணே தளையுந்தொடையும் வருமென்பது பெறுதலானும், ஈண்டு அடிதொறும் எனப் பன்மைகூறுதலானும், ஈரடிக்கூட்டத்துந் தளையுந்தொடையும் வருமென்பது பெறுதலானும் ஓரடிக்கண்ணும் ஈரடிக்கண்ணும் தளையுந்தொடையுங் கோடல் வேண்டுமென்றுணர்க. 'தலையெழுத்தொப்பது' என்றற்கு, அடிகளின் முதலெழுத்தும் சீர்களின் முதலெழுத்தும் என்பது பொருளாம். அடிதொறுமென்பது ஈரடியையும் ஓரடியையும் உணர்த்தலின், அடிமோனையும் இணைமோனையும் பொழிப்புமோனை

---

* "அடிதோறும் தலையெழுத்தொன்றிவரத் தொடுப்பது மோனைத்தொடையாம். எ - று. அஃதேல், "அடியுள் ளனவே தளையொடு தொடையே" (செய்-ந௩.) எனவோதி, ஈண்டு மற்றையடியினும் வருதல் பொருந்தாதெனின், ஆண்டு மற்றையடியுள் வாராதென்றாரல்லர்: அடியல்லாத உரை முதலானவற்றுள் தளையொடு தொடையில்லையென்பார் "அடியுள் ளனவே தளையொடு தொடை" என்றாரென்க. உ-ம். 'மாவும் புள்ளும் வதிவயிற் படர, மாநீர் விரிந்த பூவுங் கூம்ப, மாலை தொடுத்த கோதையுங் கமழ, மாலை வந்த வாடையும், மாயோய் நின்வயிற் புறத்திறுத் தற்றே' என்வரும்." என்பது உரையாசிரியநரை.

யும் ஒரூஉமோனையும் கூழைமோனையும் மேற்கதுவாய்மோனையும் கீழ்க்கதுவாய்மோனையும் முற்றுமோனையுமென மோனை எண்வகைப்படுமாயிற்று. 'பொழிப்புமொரூஉவும்' (செய்-கo) என்னுஞ் சூத்திரத்தான், இவ்வாசிரியா கொண்ட பொழிப்பும் ஒரூஉவுங் கோடற்கு அஃது இணைகொள்ளுமாறென்னையெனின் :— அச்சூத்திரத்து 'அவையுமாருளவே' எனச் சூத்திரஞ்செய்தமையான் அவையும் முன்பிறவும் ஓரடித்தொடையுமுள என்று பொருடருதலிற் றொடைக்குச் சிறந்துதோன்றும் வினைமுதலியனவுங் கோடும். உ-ம். 'கான மஞ்ஞை யீன்ற முட்டை, சாத லின்றி வீசு மந்தி'—இஃது ஈரடியும் எழுத்தொத்தலிற் றன்னொடுதான்வந்து தொடுத்த கட்டளை அடிமோனை. 'கோதை மார்பிற் கோதை யானுங், கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்'—இஃது எழுத்தொவ்வாமையிற் பிறவடிதொடுத்த கட்டளையடிமோனை. 'யாண்டுங் காணேன் மாண்டக் கோனை, யானுமோ ராடுகள மகளே' (குறுந்தொகை-நக.) இஃது இருவகையுந் தொடுத்தது. 'கண்டற் கானற் குருகின மொலிப்பக், கரையா டலவன் வளைவயிற் செறிய'— இது சீர்வகையடிதொடுத்தது. 'உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை' (புறம்-ந.) 'ஒடுங்கா வொலிகடற் சேர்ப்ப னெடுந்தேர்' இவை கட்டளையிணைமோனை. 'உலக முவப்ப வலனேர்பு திரிதரு' (திருமுருகாற்றுப்படை) இது சீர்வகையிணைமோனை. 'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை' (ஷை) 'கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு' (திருக்குறள்-நகந.) இவை கட்டளைப் பொழிப்புமோனை. 'வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப' இது சீர்வகைப் பொழிப்புமோனை. 'வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்' (புறம்-சு.) 'வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்' (நாலடி, கடவுள்வாழ்த்து) இவை கட்டளையொரூஉமோனை. 'கல்லாதவரு நனிநல்லர் கற்றார்முன்' (திருக்குறள்-சoந.) இது சீர்வகையொரூஉமோனை. 'வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்' 'அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறு' (நாலடி, பிறனில்விழையாமை) இவை கட்டளைக்கூழைமோனை. 'மடக்கண் மயிலின மறலி யாங்கு' இது சீர்வகைக்கூழைமோனை. 'கந்திற் பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர' (நான்மணி-சஉ) 'பயவார்கட் செல்வம் பறப்பப் பயின்கொல்' (நாலடி, நன்றியில்செல்வம்) இவை மேற்கதுவாய்மோனை. 'எல்லை யெம்மொடு கழிப்பி யெல்லுற' 'நல்லா ரிருவ ருவப்ப நயமிலார்' (நாலடி.) இவை கீழ்க்கதுவாய்மோனை. 'ஒல்லா தொல்வ தென்றலு மொல்லுவது' (புறம்-கககு.) இது சீர்வகைக் கீழ்க்கதுவாய்மோனை. 'கற்க கசடறக் கற்பவை கற்றபின்' (திருக்குறள்-நககு.) இது முற்றுமோனை. இது சீர்வகை முற்றுமோனை.

இனிக், கலிக்கு 'இணையிரண் டியைந்தொத்த முகைநாப்ப ணிதியாதும்' (கலி-மருதம்-கஉ) இஃது இணைமோனை. 'அரிமதர் மழைக்கண்

*

ணீ ரலர்முலைமேற் றெறிப்பபோல்' இது பொழிப்புமோனை. 'பெண்டெ னப் பிறர்கூறும் பழிமாறப் பெறுகற்பின்' (ஷை) இஃது ஒரூஉமோனை. 'கழிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேல்' இது கூழை மோனை. 'அளியெனை வுடையேன்யா னவலங்கொண் டழிவலோ' (கலி, பாலை, கக) இது மேற்கதுவாய்மோனை. 'முளிகழை யுயர்மலை முற் றிய முழங்கழல்' (ஷை, பாலை, உச) இது சீர்வகை மேற்கதுவாய்மோனை. 'மணிநிற மலர்ப்பொய்கை வளர்ந்தருளு மயிலோனே' இது கீழ்க்கதுவாய் மோனை. 'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்' (பாலை-கo) இது முற்றுமோனை. இவற்றுக்குச் சீர்வகைபலவும் வருமாறுணர்க. இச் சூத்திரமுதலாகக்கூறுங் கட்டளையடிக்குத் தொடைகொள்ளுங்காற் றளைவ ழுக்கழித்துத் தொடைகொள்ளுமாறு 'மெய்பெறு மரபின்' (செய்-கoக) என்பதனுட் காட்டுதும். (கூஉ)

கூந. அஃதொழித் தொன்றி னெதுகை யாகும்.

இஃது எதுகை கூறுகின்றது.

இ-ள். முற்கூறிய முதலெழுத்தினையொழித்து இரண்டடியினும், சீர்முழுதும்ஒன்றினும், இரண்டாமெழுத்தேஒன்றினும், ஓரடிக்கண் முத லிருசீர்க்கண் இரண்டாமெழுத்துஒன்றினும், முதற்சீரினும் மூன்ருஞ்சீரி னும் இரண்டாமெழுத்து ஒன்றினும், முதற்சீரினும் நான்காஞ்சீரினும் இர ண்டாமெழுத்து ஒன்றினும், முதற்சீரொழித்து ஏனைய ஒன்றினும்,முதல யற் சீரொழித்து ஏனைய ஒன்றினும், ஈற்றயற் சீரொழித்து ஏனைய ஒன்றி னும்,நாற்சீரும் ஒன்றினும் தலையாகெதுகை,அடியெதுகை,இணையெதுகை, பொழிப்பெதுகை, ஒரூஉவெதுகை,கூழையெதுகை,மேற்கதுவாயெதுகை, கீழ்க்கதுவாயெதுகை, முற்றெதுகை எனக்கூறப்படும். எ-று.

அயலெழுத் தொன்றின் என்னுது முதலெழுத்தைச் சுட்டியவத னுன், முதலெழுத்தின் மாத்திரை தம்முள் ஒத்தல்வேண்டுமென்றுகொள்க. உ-ம். 'மாயோன் மார்பி னுரம் போலுஞ், சேயோன் சேர்ந்த வெற்பிற் றீநீர்' இது தம்மொடு தாம்வந்த கட்டளைத்தலையாகெதுகை. "வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற், கானிலந் தோயாக் கடவுளை, யாநிலம்'

* 'அடிதொறும் முதலெழுத்தொன்ருமல் இரண்டாமெழுத்தொன்றி ன் எதுகையாகும் எ-று. அஃதேல், முதலெழுத்து மொன்றி இரண்டாமெ ழுத்துமொன்றில் யாதாகுமெனின், முந்துற்ற மோனையாற் பெயரிட்டுவழங் கப்பெறும் எ-று. உ-ம்.—' அடிதாங்குமளவன்றி...............களிறெனவு முரைத்தனரே எனவரும்' என்பது உரையாசிரியநரை.

(நாலடி,கடவுள்வாழ்த்து)இது தம்மொடு தாம்வந்த கட்டளை அடியெதுகை. 'சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய நோக்கி, முலைவிலங்கிற் றென்று முனிவாள்' இது சீர்வகையடிக்கட்டளையொடு தொடுத்த தலையாகெதுகை. 'அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி' (பெரும்பாணாற்றுப்படை) இது கட்டளையடிச் சீர்வகையடியொடு தொடுத்த அடியெதுகை.'தலையெழுத்தொப்பதுமோனை' (செய்-௯௨) என்றலிற்றலையாகுமோனை இவ்வாசிரியர்கொள்ளார். 'வைகலும் வைகல்' (நாலடி-அறன்வலியுறுத்தல்) என்னும் வெண்பாவிற் சீர்முழுதும் வருதலின் வழிமோனைப்பாற்படும். 'புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ' (பதிற்றுப்பத்து-எ-க) 'மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்' (திருக்குறள்-உ0௪) இவை இணையெதுகை. 'பொன்னேர் மேனி நன்னிறஞ் சிதைத்தோர்' 'உருவக் கடுந்தேர் முருக்கிமற் றத்தேர்' இவை பொழிப்பெதுகை. 'உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை' 'பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசை' (சிறுபாணாற்றுப்படை) 'வாண்மாய் குருதி களிறுழக்கத் தாண்மாய்ந்து' (களவழி-க.) இவை ஒரூஉவெதுகை. 'இன்ன ரென்னா தின்பம் வெஃகி' 'குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து' இவைகூழையெதுகை. 'பொன்னேர் மேனி துன்னினர்' 'கொண்டுபா ராட்டுவார் கண்டிலர்கொன் மண்டி, (நாலடி,தூஉய்தன்மை) இவை மேற்கதுவாயெதுகை. 'உள்ளி னுள்ளம் வேமே யுள்ளாது' (குறுந்தொகை-க0உ) 'படியை மடியகத் திட்டா னடியினுன்' (நான்மணி, கடவுள் வாழ்த்து) இவை கீழ்க்கதுவாயெதுகை. 'கன்னிப் புன்னை யன்னந் துன்னும்' 'இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது' (நாலடி-அறன்வலியுறுத்தல்) இவை முற்றெதுகை.

இனிக்கலிக்கு—'அடங்காதார் மிடல்சாய மார்வந் திறத்தலின்' 'எறிதிரை செறிகையான் மிகவாங்கி மீதோங்கி' இவை இணையெதுகை. 'பெருவரை யுறழ்மார்பிற் றிருவோங்கு கரியோனை' இது பொழிப்பெதுகை. 'அணிவேங்கை செறிநீழற் கிளியோப்பு மணிநிறத்தாள்' இஃது ஒரூஉவெதுகை. 'மணிவரை யணிமார்பிற் பணிமேவும் *பெரியோனை' இது கூழையெதுகை. 'அலைகடற் றுயிலுணரா மலையெடுத்த நிலையோனை' இது மேற்கதுவாயெதுகை. 'கதிபல விதியாற்சென் றழுந்தாமற் றுதித்தேத்தி' இது கீழ்க்கதுவாயெதுகை. 'திரிபுர மெரிசூழ வரிவாங்கும் பெரியோனை' இது முற்றெதுகை.

---

* 'பிறையோனை' எனவும் பாடம்.

கூசு. *ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய.

இது முற்கூறியவற்றோ டொப்பனசில தொடைகூறுகின்றது.

இ-ள். முற்கூறிய மோனைக்கும், எதுகைக்கும் கிளையெழுத்துக்களும் ஒன்றிவரப்பெறும். எ-று.

கிளையெழுத்தாவன:-வருக்கமோனையும், வருக்கவெதுகையும்,வல்லின வெதுகையும், மெல்லினவெதுகையும், இடையினவெதுகையும் என ஐந்தாம். உ-ம். 'வயங்குகதிர் காய்ந்த வாடை வைகறை, விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி'† இது கட்டளையடிச்சீர்வகையடியொடு தொடுத்தவருக்கமோனை. 'கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங், கொள்ளா ரறிவுடையார்' (திருக்குறள்-௪0௪) இது கட்டளைவருக்கமோனை. 'கேளிர் போலக் கேளல வேண்டி, வேளாண் வாயில் வேட்பக் கூறிய' இது கட்டளைவருக்க வெதுகை. 'வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்துஞ், சீருடை நன்மொழி நீரொடு சிதறி' இஃது இரண்டுந் தொடுத்தது. 'வானுயர் வெற்ப விரவின் வரல்வேண்டா, யானை யுடைய சுரம்' இது கட்டளைவருக்கவெதுகை. 'தக்கார் தகவில ரென்ப தவரவ,ரெச்சத்தாற் காணப் படும்' (திருக்குறள்-௧௧௪) இது கட்டளைவல்லினவெதுகை. 'அத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப், பிற்படு பூசலின் வழிவழி யோடி' இஃதிரண்டுந்தொடுத்தது. 'அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், நின்றது மன்னவன் கோல்' இது கட்டளை மெல்லினவெதுகை. 'நும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியுந், தண்வரலசைஇய பண்பில் வாடை' இது சீர்வகைமெல்லினவெதுகை. 'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப், பொய்யா விளக்கே விளக்கு' (திருக்குறள்-௨௯௯) இஃதிடையினவெதுகை. 'மன்னர் மன்ன மறவர் மறவ, செல்வர் செல்வ செருமேம் படுந' (பெரும்பாணாற்றுப்படை) இது சீர்வகை இடையினவெதுகை. (௬௪)

---

* 'எ-து எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தலை நுதலிற்று. மோனைத்தொடைக்கும் எதுகைத்தொடைக்கும் எடுத்த எழுத்தே வருதலின்றி வருக்கவெழுத்தும் உரிய எ-று: உ-ம். 'பகலே, பல்பூங் கானற் கிள்ளை யோப்பியும், பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇய, பின்னுப்பிணி யவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்' எ-து வருக்கமோனை. 'ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து, தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்து 'என்பது வருக்கவெதுகை' என்பது உரையாசிரியருரை.

† என்பது வகரவருக்கம் முதற்கண் வந்தமையின் வருக்கமோனையாயிற்று என்ப.

கூ௫. மொழியினும் பொருளினு முரணுதன் முரணே.

இது *முறையானே முரண் கூறுகின்றது.

இ-ள். †சொல்லானும் பொருளானும் பகைத்தல் முரண்டொடை. எ-று.

அவை ஐவகைய: சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என. உதாரணம்:— 'செவ்வரை நிவந்த சேணிடை யருவி, வெண்மறி கறித்த முல்லை' இதுகட்டளை ஈரடியும் சொல்லும் சொல்லும் முரணிற்று. 'செங்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து, கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்' இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று. 'நெருப்பி னன்ன சூட்டுச் சேவ, னீர்சேர் கானத்து நெடுமணற் கிளைப்ப' இது கட்டளையீரடியும் பொருளும் பொருளும் முரணிற்று. 'நீரோ ரன்ன சாயற், றீயோ ரன்ன வென் னுரனவித் தன்றே' இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று. 'தண்சே றுடிய தயங்கிணர்க் கடத்து, வெம்பொருட் பிரிவை வேண்டிச் சென்றோர்' இது கட்டளையீரடியுஞ் சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணிற்று. 'சிறுநல் கூர்ந்த செல்சுடர் மாலை, நெடுநீர்ப் பொய்கைக் குறுநர் தந்த' இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று: சிறுநல் கூர்ந்ததுக்குச் சிறிய பொருளின்று. 'செந்தீக் கானஞ் சென்ற மாதர், நீரின் மையி னெஞ்சழிந்து வருந்த' இது கட்டளையீரடியுஞ் சொல்லும் பொருளும் பொருளொடு முரணிற்று. செந்தீக்கு நிறமும் சொல்லுமு

---

* 'மோனை யெதுகை முரணே யியைபென' என மேல்ஓதிய முறையானே என்றவாறு.

† 'அடிதொறும் வந்த சொல்லினானுதல் பொருளினானுதல் மாறுபடத் தொடுப்பது அடிமுரண்டொடையாம் எ-று. அவற்றுட் பொருள் முரணுவது சொல்லினனன்றிப் பொருளினன்மாறுபடுவது. உதாரணம்;— 'இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை, பொன்னி னன்ன நுண்டாதுறைக்கும்'' என்பது இரும்பும் பொன்னும் மாறுபாடுடைத்தாதலிற் பொருண்முரணாயிற்று. 'சிறுகுடிப் பரதவர் மடமகள், பெருமதர் மழைக் கண்ணு முடையவா லணங்கே' என்றவழிக் குடியும் குணமும் மாறாகாது பெருமையென்னுஞ் சொல்லே மாறுகோடலிற் சொன்முரணாயிற்று' என்பது உரையாசிரியருரை.

ண்டு, நீர்க்குச் சொல்லின்று. 'செந்தீ யன்ன சினத்த யானை, நீர்நசை பெருஅக் கற்பிற் றேர்நசைஇ' இஃதிருவகை யடியும் அங்ஙனம் முரணிற்று. 'செங்குரற் பைந்தினை விளைபுன மேவிப், பைங்கிளி கடியும் பான்மொழி மகளிர்' இது கட்டளையீரடியும் சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணிற்று. 'செவ்வேற் சேஎய் திருமண மறுத்த, கருவிற் கானவன் வரில்' இது சீர்வகையடி அங்ஙனம் முரணிற்று. 'பன்மை சின்மை பற்று விடுதலென், றென்பன' இது கட்டளை இணைமுரண். 'நிலவு மிருளும் போல்வ நீர்வரை' இது சீர்வகை. 'கார்பெயல் பெய்தபிற் செங்குளக் கோட்டுக்கீழ்' 'எழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்' (நாலடி-சுயமை) இவை கட்டளைப் பொழிப்புமுரண். 'வருதுமெனமொழிந்தார் வாரார்கொல் வானங், கருவிருந்தா லிக்கும் பொழுது' (கார்நாற்பது, க). இது சீர்வகை. 'பின்னுவ தென்று பிடித்திரா முன்னே' (நாலடி-செல்வநிலையாமை) 'இன்சொற் குழியு ளினிதெழூஉம் வன்சொல்' (நான்மணி, கசு) இவை கட்டளை ஒரூஉமுரண். 'வரினு நோய் மருந்தல்லர் வாராது.' இது சீர்வகை. 'நிறுத்தலி னளவி னெண்ணினென்று' 'தேரும் யானையுங் குதிரையும் பிறவும்' இவை கட்டளைக் கூழைமுரண். 'கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பும்' (நற்றிணை-அ௪) இது கட்டளைக் கீழ்க்கதுவாய் முரண். 'அறுத்தலிற் குறைத்தலிற் பிரித்தலின்' (தொல், சொல், வேற்றுமையியல், கக) 'நிற்ற லிருத்தல் கிடத்த லியங்குதல்' இவை கட்டளை முற்றுமுரண். 'நீரு நிலனுந் தீயும் வளியு, மாக விசும்போ டைந்து மாகும்' என்பது சீர்வகை. இவற்றை ஐவகையாக முற்கூறியாங்கு விரிப்பிற் பெருகுமாகலின் அவற்றுளேற்றன கொள்க. (கூ௫)

**கூசு.** * இறுவா யொன்ற லியைபின் யாப்பே.

இது முறையே இயைபு கூறுகின்றது.

இ-ள். இரண்டடியினும் பொருளியைபின்றி எழுத்தாதல் சொல்லாதல் ஈற்றிலே பொருந்தத் தொடுப்பது இயைபுத்தொடைக்கிலக்கணம் எ-று.

---

* 'அடிதொறும் ஈற்றெழுத் தொத்துவரின் அஃது இயைபுத்தொடை யென்று சொல்லுவர் எ-று. உ-ம். 'இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே, நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே, யாடமைத் தோளிக் கூடலு மணங்கே, யரிமதர் மழைக்கண்ணு மணங்கே, திருநுதற் பொறித்த திலதமு மணங்கே' என வரும். அசை சீரென வரையாது கூறினமையான் ஓரெழுத்து இறுதிக்கண் ஒப்பினும் இயைபாமெனக்கொள்க' என்பதுஉரையாசிரியநன

'அவரோ வாரார் கார்வந் தன்றே, கொடிக்கு முல்லையுங் கடிக்கரும் பின்றே' இது கட்டளையெழுத்தடியியையு. 'பரவை மாக்கடற் றொகுதிரை வரவும், பண்டைச் செய்தியின் றிவன் வரவும்' இது கட்டளைச்சொல்லடியியையு; 'சீர்வகையடிக்கு வந்துழிக்காண்க. 'ஓங்கிய சுரத்தை நீங்கி யேகி' இஃதிணையியையு. 'விரிந்தாறு மலராயின் விளித்தாலுங் குயிலாயின்' இது பொழிப்பியையு. 'கரவெழூஉங் கண்ணில் குழியு ளிரவெழூஉம்' (நான்மணி கச.) இஃது ஒரூஉவியையு. 'பொருசமத் தெழுவனர் பொருவினர் விரைவனர்' இது கூழையியையு. 'நீருந் தீயு மாகிய விறைவனும்' இது மேற்கதுவாயியையு. 'பொருவனர் விடுகணை தகைவன ரெதிர்வனர்' இது கீழ்க்கதுவாயியையு. 'இயற்கையி னுடைமையின் முறைமையிற் கிழமையில்' (தொல், சொல், வேற்றுமையியல், கக) இது முற்றியையு. 'காம்பிவர் தோளுங் கருமதர் மழைக்கணும்' இது சீர்வகைப் பொழிப்பு. 'பகலுங் கங்குலு மகலா தொழுகும்' இது சீர்வகை மேற்கதுவாய். ஏனையவற்றிற்குச் சீர்வகை வந்துழிக்காண்க. இவற்றிற்கு எழுத்தியைபினும் சொல்லியைபினும் ஏற்றன கொள்க. வெவ்வேறாகக் கோடல் அரிதென்றுணர்க. (கசு)

**கஎ.** அளபெழி னவையே யளபெடைத் தொடையே.

இது *முறையே அளபெடைத் தொடை கூறுகின்றது.

இ-ள். அடி முதற்கண்ணே எழுத்துக்கள் அளபெழுந்தனவாயின் அவை அளபெடைத்தொடை எனப்படும். எ-று.

அவையென்றார், உயிரளபெடையும் ஒற்றளபெடையுங் கோடற்கு. உ-ம். 'உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்-செறாஅஅய் வாழியென் னெஞ்சு' (திருக்குறள், கஉ00) இது கட்டளை உயிரளபெடை. 'பாஅ லஞ்செவிப் பணைத்தாண் மாநிரை, மாஅல் யானையொடு மறவர் மயங்க' இதுவும் இருவகையடியும் வந்த உயிரளபெடை. 'எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர், வெஃஃகு வார்க்கில்லை வீடு' இது கட்டளையொற்றளபெடை. 'கஃஃ றென்னுங் கல்லதர்க் கானிடைச், சுஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை' இதுசீர்வகையொற்றளபெடை. இவ்வொற்றளபெடைகட்டளைக்குக் கொள்ளாம்; ஒழிந்தனவற்றிற்கும் வந்துழிக்காண்க. இவற்றிற்கு இணை முதலியன கொள்ளாம், சிறப்பின்மையின். (கஎ)

---

* 'மோனை யெதுகை முரணே யியைபென' என எண்ணியதன் பின்னே 'அளபெடை தலைப்பெய வைந்து மாகும்' என ஓதிய முறை.

கூஅ * ஒருசீ ரிடையிட் டெதுகை யாயிற்
பொழிப்பென மொழிதல் புலவ ராறே.

இது நிறுத்த முறையானே பொழிப்பிற்கெல்லாம் இலக்கணங் கூறு கின்றது.

இ - ள். ஒரு சீர்..............மொழிதல் எ-து பொழிப்பு ஒரு சீரை நடுவே யிட்டுவைத்து எதுகையாயிற், பொழிப்பெதுகை யென்று பெயர் கூறுக; அன்றிப் பொழிப்பு ஒருசீர் இடையிட்டு மோனைமுரணியையாய் வந்தனவாயிற் பொழிப்புமோனை, பொழிப்புமுரண், பொழிப்பியைபு எனப் பெயர் கூறுக; புலவராறே எ-து இங்ஙனம் பெயர் கூறுதல் ஆசிரியர் கொண்ட நெறி. எ-று.

இங்ஙனம் எதுகையைப் புலப்பட வைத்து ஏனைய அநுத்தாபத்தியாற் கூறியது, எல்லாவற்றினும் எதுகை சிறந்து தோன்றுதல் கருதி. இவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டினும். (கூஅ)

கூகூ. †இருசீ ரிடையிடி னொரூஉவென மொழிப.

இது நிறுத்தமுறையானே ஒரூஉவிற்கெல்லாம் இலக்கணங்கூறுகின்றது.

---

* "ஒருசீரிடையிட் டெதுகையாயிற் பொழிப்புத் தொடையாம் எ-று. எதுகை என ஓதினாராயினும் 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனான், மோனை இயைபு முரண் அளபெடை என்பனவும் பொழிப்புத் தொடையாம் எ-று. உ-ம். 'அரிக்குரற் கிண்கிணி யரற்றுஞ் சீறடி இது பொழிப்புமோனை. "பன்னருங் கோங்கி னன்னலங் கவற்றி" இது பொழிப்பெதுகை. "சுருங்கிய நுசுப்பிற் பெருவடந் தாங்கி" என்பது பொழிப்பு முரண். "கடலே, கானலங் கழியே கைதையந் துறையே" என்பது பொழிப்பியைபு. "பூஉங் குவளைப் போஒ தருந்தி' என்பது பொழிப்பளபெடை" என்பது உரையாசிரியநரை.

† "இரண்டு சீரிடையிட்டு மோனைமுதலாயின வரத்தொடுப்பது ஒரூஉத் தொடையாம் எ-று. உ-ம். 'அம்பொற் கொடிஞ்சி நெடுந்தே ரகற்றி' இஃது ஒரூஉமோனை. 'மின்னிவ ரொளிவடந் தாங்கி மன்னிய' இஃது ஒரூஉவெதுகை. 'குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து' இஃது ஒரூஉமுரண். 'நிழலே யினியத னயலது கடனே' இஃது ஒரூஉவியைபு. 'காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்' எ-து ஒரூஉவளபெடை" என்பது உரையாசிரியநரை.

௬௯. * இருசீ ரிடையிடி னொரூஉவென மொழிப.

இது நிறுத்தமுறையானே ஒரூஉவிற் கெல்லாம் இலக்கணங்கூறுகின்றது.

இ-ள். இரண்டு சீரை நடுவேயிட்டுவைத்து முதற்சீரும் நாலாஞ்சீரும் ஒன்றிவரின் ஒரூஉமோனை, ஒரூஉவெதுகை, ஒரூஉமுரண், ஒரூஉவியைபு எனப்படும் எ-று.

ஒரூஉவை விதந்தோதினார், வெண்பாவிற்குச் சிறந்துவருதலானும், ஆசிரியத்திற்கு ஏனையவற்றிற்சிறந்து தோன்றுதலானும். உதாரணம் முன்னர்க்காட்டினாம். (௬௯)

௯00. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவர் அது செந்தொடை யென்ப.

இது செந்தொடை கூறுகின்றது.

இ-ள். சொல்லிய........டியலின் எ-து முற்கூறிய தொடைகளெல்லாவற்றோடும் ஒவ்வாதுவரின் அதனை. சொல்லியற்......பென்ப எ-து இயற்சொல்லாற் செய்யுள் செய்யும் புலவர் செந்தொடை யென்று கூறுவராசிரியர் எ-று.

எனவே, விகாரப்படச் செய்யுஞ் செய்யுட்குச் செந்தொடையின்றாதயிற்று. உ-ம். "நெடுவேண் மார்பி னாரம் போலச், செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்து" (அகம்-௧௨0) "விருந்தினர் மூத்தார் பசுசிறை பிள்ளை" இவை கட்டளைச்செந்தொடை. "பூத்த வேங்கை வியன்சினை யேறி, மயிலின மகவு நாட, னன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே" இது சீர்வகைச் செந்தொடை. (௯0௧)

---

* "இரண்டுசீரிடையிட்டு மோனைமுதலாயினவரத் தொடுப்பது ஒரூஉத் தொடையாம் எ-று. உ-ம். "அம்பொற் கொடிஞ்சி நெடுந்தே ரகற்றி" இஃது ஒரூஉமோனை. "மின்னிவ ரொளிவடந் தாங்கி மன்னிய" எ-து ஒரூஉ வெதுகை. "குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து" இஃது ஒரூஉமுரண். "நிழலே யினியத னயலது கடனே" இஃது ஒரூஉவியைபு. "காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்" எ-து ஒரூஉவளபெடை" என்பது உரையாசிரியருரை.

௧௦௧. *மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டு தலையிட்ட பத்துக்குறை யெழுநூற்
றொன்பஃ தென்ப வுணர்ந்திசி னோரே.

---

* "வடிவுபெற்ற மரபினையுடைய தொடையினது பாகுபாடு பதின்மூவாயிரத்தறுநூற்றுத்தொண்ணூற்றொன்பதென்றவாறு. அவைவருமாறு:— மொழிமுதலாமெழுத்து உயிர் பன்னிரண்டு: இதன்கிளையெழுத்தும் ஒரோவொன்றுக்குப் பதினொன்றுளவாகலின் அவற்றையுறழ நூற்றுமுப்பத்திரண்டாம். க த ந ப ம என்பனவற்றை உயிர் பன்னிரண்டோடு முறழ அறுபதாம்; அவ்வறுபதும் முதற்றொடையாகிய கிளையெழுத்தோடு முறழ அறுநூற்றறுபதாம். சகரத்தின் முதலாமெழுத் தொன்பது; அவற்றைக் கிளையெழுத்தோடுறழ எழுபத்திரண்டாம். வகரத்தின் முதலாமெழுத்து எட்டு. அவற்றைக் கிளையெழுத்தோடுறழ ஐம்பதாம். யகரத்தின் முதலாமெழுத்தொன்று: கிளையெழுத்தில்லை. ஞகரத்தின் முதலாமெழுத்து மூன்று: கிளையெழுத்தோடுறழ ஆறும் இவ்வகையினானே முதலெழுத்துத் தொண்ணூற்றுமூன்றுங் கிளையெழுத்துத் தொள்ளாயிரத் திருபத் தாறுமாக மோனைத்தொடை ஆயிரத்தொருபத்தொன்பதாம். எதுகையாமாறு:—உயிரெழுத்து மொழியிடையில் வாராது. உயிர்மெய்யெழுத்து இருநூற்றொருபத்தாறில் வருக்கமொழிந்த வெழுத்து இருநூற்றுநாலினையும் கிளையெழுத்தினோடுறழ இரண்டாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டாம். இதனோடு ஒற்றுப்பத்தொன்பதும் குற்றுகரமாறுங் கூட்ட எதுகைத்தொடை இரண்டாயிரத்து நானூற்றெழுபத்துமூன்று பாகுபாடாம். முரண்டொடை பொருண்முரண், சொன்முரண் என இரண்டாம். இயைபுத்தொடை வருமாறு. உயிரெழுத்து மொழியீற்றின்கண் ணுயிர்மெய்யே வருதலின் அவையாகா. உயிர்மெய் இருநூற்றொருபத்தாறினும் இறுதிக்கண் வாராதாம். ஙகரவுயிர்மெய்பன்னிரண்டும் அகரம்பதினேழும் இகரம்பதினாலும் உகரமிரண்டும் எகர மொன்றும் ஒகர மொன்றும் இவையொழிந்துநின்ற எழுத்து நூற்றறுபத்தைந்தும், ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் புள்ளியிறுதி பதினொன்றும் குற்றியலுகரம் ஓராறும் ஆக இயைபுத்தொடை நூற்றெண்பத்திரண்டு பாகுபாடாம். அளபெடைத்தொடையாமாறு:—மொழிமுதலாகும் உயிரளபெடை எழு, க த ந ப ம என்னும் உயிர்மெய்யளபெடை முப்பத்தைந்து, சகரவளபெடை ஐந்து, வகரவளபெடை ஐந்து, யகரவளபெடையிரண்டு இவை ஐம்பத்துநான்கில் உயிரளபெடை தனிநிலையாம். ஏனையவற்றை முதனிலை இடைநிலை இறுதிநிலை எனவுறழ நூற்றுநாற்பத்தொன்றும்:

இது வரையறைப்படுங் கட்டளையடிக்குத் தொடைத்தொகை கூறுகின்றது; எனவே சீர்வகைக்குத் தொடைவரையறை யின்று எ-று.

---

ஒற்றுக்களுள் வல்லெழுத்தாறும் மகரமும் ழகரமும் ஒழிந்து ஏனையபதினொன்றும் அளபெடுக்க ஒற்றளபெடை பதினொன்று. இவ்வகையினான் அளபெடைத்தொடை நூற்றைம்பத்தொன்பது வகையாம். இவ்வகையான் அடித்தொடை மூவாயிரத் தெண்ணூற்று முப்பத்தைந்து வகையாம். பொழிப்புத்தொடை கிளையெழுத்துவாராது. மோனைப் பொழிப்புத் தொண்ணூற்றுமூன்று; எதுகைப்பொழிப்பு இருநூற்றிருபத்தொன்பது; முரண்பொழிப்பு இரண்டு; இயைபுப்பொழிப்பு நூற்றெண்பத்திரண்டு; அளபெடையுள் ஒற்றளபெடை பொழிப்பாக வாராமையின் உயிரளபெடைப் பொழிப்பு நூற்றுநாற்பத்தெட்டு; இவையெல்லாங்கூட்டப் பொழிப்புத்தொடை அறுநூற்றைம்பத்துநாலு வகைப்படும். ஒரூஉத்தொடையும் இவ்வகையினால் அறுநூற்றைம்பத்து நாலாம். இனிச்செந்தொடையாமாறு:—மொழிமுதலாமெழுத்துத் தொண்ணூற்றுமூன்றும் மற்றையடியினும் ஒத்துவருங்கால் அவை மோனையுளடங்குதலின் அவற்றையொழித்து ஏனை எழுத்துத் தொண்ணூற்றிரண்டோடுறழ எண்ணாயிரத் தைந்நூற்றைம்பத்தாறு வகையாம். இவ்வகையினாற் றொடைவிகற்பம் பதின்மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதாம் என்றறிக" என்பது உரையாசிரியநரை. இவ்வுரைகாரர் கொண்டபாடம் "தொண்டு தலையிட்ட பத்துக்குறை யெழுநூற், றொன்றுமென்ப" என்பதாகும். ஈண்டு ஒன்றும் என்பது முற்றுவினை. பத்துக்குறை எழுநூறு-அறுநூற்றுத்தொண்ணூறும். தொண்டு தலையிட்ட அறுநூற்றுத்தொண்ணூறு அறுநூற்றுத்தொண்ணூற்றொன்பதாயவாறுகாண்க. இவ்வுரையாசிரியர் கொண்ட இப்பாடத்தையும் உரைத்த வுரையினையும் **பேராசிரியர்** மறுத்துரைத்தனர். பேராசிரியர் 'தொண்டுதலையிட்ட பத்துக்குறை யெழுநூற் றொன்பஃது' என்பது எழுநூற்றெட்டு எனக்கொண்டு தொடைவகை பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு என்பர். பத்துக்குறை எழுநூற்றொன்பஃது அறுநூற்றுத் தொண்ணூற் றொன்பதாம். தொண்டு தலையிட்ட அறுநூற்றுத் தொண்ணூற் றொன்பது எழுநூற்றெட்டாதல் காண்க. **நச்சினார்க்கினியர்** பத்துக்குறை எழுநூற்றொன்பஃது அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது எனக்கொண்டு, அதனைத் தொண்டுதலையிடுதலாவது ஒன்பதாற் பெருக்கல் என்றுகருதி ஒன்பதனாற் பெருக்கிய அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது ஆறாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்றென்பது பற்றித் தொடைவகை பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்று என்பர். இங்ஙனம் உரையாளர் மூவரும் கருத்து மாறுபடுதல் கண்டுகொள்க.

இ-ள். மெய்........தாமே எ-து கேட்டார்க்குத் தொடைப்பாடு வெளிப்படுக்கும் இலக்கணத்தவாகிய தொடைக்கூறுபாடுதாம்; ஐயீரா......ஞ்ஞூற்றொடு எ-து பதின்மூவாயிரத்தோடே; தொண்டு......தென்ப எ-து ஒன்பது தலையிலேவைத்த பத்துக்குறைந்த எழுநூற்றொன்பது என்றுகூறுவர்; என்பது ஆறாயிரத்திருநூற்றுத்தொண்ணூற்றொன்று என்று கூறுவர் எ-று. உணர்ந்திசினோரே எ-து சட்டகளையின் றொடைப்பகுதி யறிந்தோர் எ-று.

பதின்மூவாயிரத்தோடே ஆறாயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றொன்றெனவே, தொகை பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்றாயிற்று. ஆக, ககூஉகூக. பத்துக்குறை யெழுநூற்றொன்பதாவது அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது. இதனை ஒன்பதனோடு பெருக்க ஆறாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்றாயிற்று. இதனை ஆறாயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றொன்று என்று விளங்கக்கூறாது ஒருகாற்குறைத்து அதன்மே லொருகாலேற்றி ஞாபகப்படச் சூத்திரஞ்செய்தது ஒரு பயனோக்கி; அது கட்டளையடி அறுநூற்றிருபத்தைந்துந் தொடைகொள்ளுங்கால் ஐம்பத்தொன்பது வழுவுள அவை களையப்படுமென்றற்கு. அவற்றுள் அடிமோனைத்தொடை மூன்று பாவினும் எழுபத்தெட்டுச் சீரானும் வருங்கால் ஈரடிக் கூட்டத்துத் தளைவழுக் களையவேண்டும்; அவ்வழி அகவற்கு நாற்பத்தொன்றும் வெள்ளைக்குப் பதினெட்டுமாக ஐம்பத்தொன்பது களையப்படும். அவை களையுமாறு:—நந்தை, வண்டு, தேமா, மின்னு, ஞாயிறு, போதுபூ, போரேறு, பாதிரி, மேவுசீர், நன்னாணு, பூமருது, நீடுகொடி, காருருமு, நாணுத்தளையென இந்நேராதி பதினான்கும் அகவற்குப் பெருகிய நிலத்திவ்விரண்டடி தளை வழுப்படும். வரகு, புளிமா, அரவு, வலியது, கடியாறு விறகுதீ, கணவிரி, உரறுபுலி, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, விரவுகொடி, நரையுருமு என இந்நிரையாதி பதின்மூன்றுஞ் சுருங்கிய நிலத்து ஓரோவோரடி தளைவழுப்படும். ஆக அகவற்கு நாற்பத்தொருதளை வழுவாயின. இனி வெள்ளைக்கு முற்கூறிய சீர்களுள் ஆசிரியவுரிச்சீர் நான்குநீக்கி வெண்சீர் நான்குங்கூட்ட இருபத்தேழாம். இதில் நேராதி பதினான்குஞ் சுருங்கிய நிலத்து ஒரோவொன்று தளைவழுப்படும். நிரையாதியில் வரகு, கடியாறு, விறகுதீ, வலியது என்னுநான்கும் பெருகிய நிலத்து ஒரோவொன்று தளைவழுப்படும். ஆக வெள்ளைக்குப் பதினெட்டு வழுவாயிற்று. ஆகத் தளைவழு ஐம்பத்தொன்பதாயிற்று. அவை வருமாறு:—வண்டு காருருமு நளிமுழவு நளிமுழவு என நிற்பக் கண்டு எனத் தொடைவருங்கால் வெண்டளையாய் வழுவாம். பதினான்செழுத்திற்கும் இவ்வாறே கூறிக்கொள்க. வரகு நீகு காம்பு வண்டு என நிற்பக் குரவு எனத் தொடைவருங்கால் வெண்டளையாய் வழுவாம். இனி வண்டு வரகு வரகு வரகு என நிற்பக் கண்டு

எனத் தொடைவருங்கால் ஆசிரியத்தளையாய் வழூவாம். வரகு நளிமுழவு காருருமுப் பாதிரி என நிற்பக் குரவு எனத் தொடைவருங்கால் ஆசிரியத் தளையாய் வழூவாம். இவ்வாறே எல்லாவற்றோடும் ஒட்டி வழூக்காண்க. கலிக்குத் தளைவழுவின்று. நுந்தை மொழிமுதற்குற்றுகரமாதலின் இதற்கொத்த மொழிமுதற் குற்றுகரமின்மையிற் கட்டளைக்குத் தொடை கோடல் சிறப்பின்று. இச்சிறப்பின்மை கருதாது தொடைகோடலும் ஒன்று. நுந்தைக்கு இருபதடிக் கழித்து அறுநூற்றைந்தடியுள் ஐம்பத்தாறு தளை வழுக்களைந்து ஒழிந்தவடி ஐந்நூற்று நாற்பத்தொன்பதனுற் பெற்ற அடி மோனைத்தொடை ஐந்நூற்று நாற்பத்தொன்பது—௫௱௪௰௯. நுந்தை யொழிந்த நேர்பதின்மூன்றுங் குற்றெழுத்து ஒற்றெடுத்த நேரசையும் நெட்டெழுத்துத் தனியேவந்த நேரசையுமாக உதாரணங்காட்டிற்றேனும் அவற்றிற்குரிய மூவகையசையானும் வரும் உதாரணங்களையும் கூறிக்கொண்டு தொடை கொள்க. ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறே வேறுபடுமாறு அறிந்து சொற்களை வருவித்துத் தொடைகொள்க.

“ஒன்று தலையிட்ட வையைந்து சீரும், வழுவா யகவல் தொடைகொளல் கூறி, னேரா திச்சீர் பதின்மூன் றற்குத், தத்தமக் குரிய பன்னீ ரடிக்குண், முடிவில் வருமீ ரடிக ளெல்லாம், பின்வரு மடியின் முதற்சீ ரோடு, வெண்டளை யாகித் தளைவழூஉப் படுதலு, நிரையா திச்சீர் பதின்மூன் றற்குந், தத்தமக் குரிய பன்னீ ரடிகளுண், முதல்வரு மோரோவோ ரடிகளெல்லாம், பின்வரு மடியின் முதற்சீ ரோடு, வெண்டளை யாகி முற்கூறி யாங்குத், தளை வழூஉப் படுதலு, முடையவிவ் வடித்தொகை முப்பத் தொன்பதுந், தொடைகோ ளின்றெனத் துணிந்தனர் புலவர்” “ஒன்று தலையிட்ட வையைந்து சீரும், வழுவா வெள்ளைத் தொடைகொளல் கூறி, னேரா திச்சீர் பதின்மூன் றனு, முறழு நிலங்களுட் பெற்ற வடிகளுண், முதல்வரு மோரோவோ ரடிக ளெல்லாம், பின்வரு மடியின் முதற்சீர் தம்மோ, டாசிரி யத்தளை தட்டு வழுப் படுதலும், வரகு கடியாறு விறகுதீ வலியதெனு, நிரையாதி யாகிய சீர்க ணான்கா, னுறழு மடிகளு ளிறுதியடிகளு, மங்ஙனந் தளைவழுப் படுதலு முடைமையி, னிவற்றான் வந்த வடிபதி னேழுந், தொடைக்கியை பின்றெனத் துணிந்தனர் புலவர்” “வழூஉக் களைந்த முதற்பா விரண்டிற்கும், கலிக்கும் வரூஉ மடிமோனைத்தொடை, யைஞ்ஞூற்று நாற்பத் தொன்பதாகும்” “அவை பகுக்குங்கால், அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும், வெள்ளைக் கொருநூற் றைம்பத் தாறுங், கலிக்கு நூற்றிரு பஃது மாகும்” “வண்டு தேமா மின்னு ஞாயிறு, போதுபூ போரோறு பாதிரி மேவுசீர், நன்ணுணு பூமருது நீடுசொடி காருருமு, நாணுத் தளையிவை யொரோவொன்று பத்தாக, வகவல் பெற்ற விணைமோனைத்தொடை, யீரைம் பஃதொடு

முப்ப தாகும்”; நேராதி பதின்மூன்றுக்குத் தொடை ௱௩௰. “வரகு புளிமா வரவு வலியது, கடியாறு விறகுதீக் கணவிரி யுராறுபுலி, பெருவேணு உருமுத்தீ மழகளிறு விரவுகொடி, நரையுருமு ஒரோவொன்று பதினொன் றாக, வகவல் பெற்ற விணைமோனைத்தொடை, நூற்று நாற்பத்து மூன் றென நுவல்வர்” நிரையாதி பதின்மூன்றற்குத் தொடை ௱௪௩. ஆக அகவற்கு இணைமோனைத்தொடை ௨௭௩.

“வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றென்றிவை யொரோவொன் றெவ்வே ழாகத், தேமா மின்னுப் பாதிரி மேவுசீர், நன்ஞாணுப் பூமருது மாசெல் வாயிவை, யொரோவொன் றாகக் காருருமு மாவருவா, யொரோவொன் றைந்தாக வெள்ளைக் கிணைமோனை, யெண்ப தாக வியலு மென்ப;” நேராதி பதின்மூன்றுக்குத் தொடை ௮௦. “வரகு வலியது கடியாறு விறகுதீக், கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு, உருமுத்தீப் புளிமா விவையுவ் வாறு, நரையுருமுப் புலிவருவா, யொரோவொன் றைந்தாக வெள்ளை பெற்ற, விணைமோனைத்தொடை யெழுபத் தாறும்;” நிரையாதிச் சீர் பதின்மூன்றற்குத்தொடை ௭௰௬. ஆகவெள்ளைக்கு இணைமோனைத் தொடை ௱௫௬.

“நேராதிச் சீரானு நிரையாதிச் சீரானு, மொரோவொன் றைந்தாகக் கலிக்குவரு மிணைமோனை, நூற்றிரு பஃதா நுவன்றனர் புலவர்” ஆகக்கலிக்கு இணைமோனைத் தொடை ௱௨௰.

“மூவகைப் பாவிற்கு மொழிந்த விணைமோனை, ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்” ஆகத்தொடை ௫௱௪௰௯.

“நேராதி யாகிய சீர்பதின் மூன்று, றொரோவொன்று பத்தாக வகவல் பெற்ற, பொழிப்புமோனைத்தொடை நூற்றுமுப் பஃதே” நேராதி பதின்மூன்றுக்குத் தொடை ௱௩௰. “நிரையாதி யாகிய சீர்பதின் மூன்று, றொரோவொன்று பத்து மொன்று மாக, வகவல் பெற்ற பொழிப்புமோனைத்தொடை, நூற்று நாற்பத்து மூன்றென நுவல்ப” நிரையாதி பதின்மூன்றுக்குத் தொடை ௧௪௰௩. ஆக அகவற்குப் பொழிப்பு மோனைத் தொடை ௨௱௭௰௩.

“வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றென்றிவை யொரோவொன் றெவ்வே ழாகத், தேமா மின்னுப் பாதிரி மேவுசீர், நன்ஞாணுப் பூமருது மாசெல் வாயிவை, யொரோவொன் றிருமூன் றாகக் காருருமு, மாவருவாயிவை யொரோவொன் றைந்தாக, வெள்ளை பெற்ற பொழிப்புமோனைத்

தொடை, யெண்ப தாக வியம்பினர் புலவர்" நேராதி பதின் மூன்றற்குத் தொடை அ௰. "வாகு வலியது கடியாறு விறகுதீக், கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு, உருமூத் தீப்புளி மாவிவை யொரோவொன், றிரு மூன் றாக வியைந்த பின்னர், நரையுருமூப் புலிவருவா யொரோவொன் றைந்தாக, வெள்ளை பெற்ற பொழிப்புமோ னைத்தொடை, யெழுபத்தா றென வியம்பினர் புலவர்" நிரையாதி பதின்மூன்றற்குத் தொடை எ௰சு. ஆக வெள்ளைக்குப் பொழிப்புமோனை ராறு௰சு.

"நேரு நிரையு மாகிய சீர்க, ளிருபத்து நான்கா னொரோவொன் றைந் தாகத், துள்ளல் பெற்ற பொழிப்புமோ னைத்தொடை, யீரைம் பஃது மிரு பது மாகும்" ஆகக்கலிக்குப் பொழிப்புமோனை ரா௨௰.

"மூவகைப் பாவின் பொழிப்புமோ னைத்தொடை, ஐந்நூற்று நாற்பத் தொன்ப தாகும்" ஆகத்தொடை ருா௪௰கூ.

"நேராதி யாகிய சீர்பதின் மூன்று, னொரோஒவொன் றுபத் தாகவகவல், பெற்றவொரூஉ மோனைத்தொடை நூற்றுமுப் பஃதே" நேராதிபதின்மூன் றுக்குத்தொடை ராங௰. "நிரையாதியாகிய சீர்பதின்மூன்று, னொரோவொன் றுபத்து மொன்று மாக, வகவல் பெற்றவொரூஉமோ னைத்தொடை, நூற்று நாற்பத்து மூன்றென நுவல்வர்" நிரையாதி பதின்மூன்றுக்குத் தொடை ரா௪௰ங. ஆக அகவற்கு ஒரூஉமோனைத்தொடை உள௰ங.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றென்றிவை யொவ்வொன் றெவ்வே ழாகத், தேமா மின்னுப் பாதிரி மேவுசீர், நண்ணுப் பூமருது மாசெல் வாயிவை, யொரோவொன் றிருமூன் றாகக் காருருமு, மாவரு வாயிவை யொரோவொன் றைந்தாக, வெள்ளை பெற்ற வொரூஉமோ னைத்தொடை, யெண்ணொரு பஃது மெய்து மென்ப" நேராதி பதின்மூன்றுக்குத் தொடை அ௰. "வாகு வலியது கடியாறு விறகுதீக், கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு, உருமூத் தீப்புளி மாயிவை யொரோவொன், றிரு மூன் றாக வியன்ற பின்னர், நரையுருமூப் புலிவருவா யிவையொரேவொன் றைந்தாக, வெள்ளை பெற்ற வொரூஉமோ னைத்தொடை, யேழொரு பஃது மாறு மாகும்." நிரையாதி பதின்மூன்றுக்குத் தொடை எ௰சு. ஆகவெள்ளை ஒரூஉமோனைத்தொடை ராறு௰சு.

"கலிக்கு வருஞ்சீர் பத்து நான்கு, மொரோவொன் றைந்தாகப், பெற்ற வொரூஉ மோனை, யீரைம் பஃது மிருபது மாகும்." ஆகக்கலிக்கு ரா௨௰.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த வொரூஉமோனை, ஐந்நூற்று நாற்பத் தொன்ப தாகும்." ஆகத்தொடை ருா௪௰கூ.

"நேர்பதின் மூன்று னேரோவொன்று பத்தாக, வகவல்பெற்ற கூழை மோனைத்தொடை, நூற்றுமூப் பஃதென நுவன்றனர் புலவர்" ளசுடு. "நிரையாதி யாகிய சீர்பதின் மூன்று, னேரோவொன்று பத்து மொன்று மாக, வகவல் பெற்ற கூழைமோனைத்தொடை, நூற்று நாற்பத்து மூன் றென நுவல்வர்" ளசஙு. ஆக அகவற்குக் கூழைமோனைத்தொடை உளஎயஙு.

"வண்டு ஞாயிறு போதுபூப் போரேறு, எனவிவை ஒரோவொன் றெவ்வே ழாகத், தேமா மின்னுப் பாதிரி மேவுசீர், நன்னுணுப் பூமருது மாசெல் வாயிவை, யொரோவொன் றுகக் காருருமு மாவருவா, யொரோவொன் றைந்தாக வெள்ளை பெற்ற, கூழைமோனைத்தொடை யெண்பஃ தாகும்" அய. "வரகு வலியது கடியாறு விறகுதீக், கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு, உருமுத்தீப் புளிமா விவையொ ரோவொன், றீரா றுக வியன்ற பின்னர், நரையுருமுப் புலிவருவா யொரோவொன் றைந்தாக, வெள்ளை பெற்ற கூழைமோனைத்தொடை, யெழுபத் தாறு வியலு மென்ப." எயசு. ஆக வெள்ளைக்குக் கூழைமோனை கருயசு. "நேரு நிரையு மாகிய சீர்க, ளிரு பத்து நான்கா னேரோவொன் றைந்தாகத், துள்ளல் பெற்ற கூழைமோ னைத்தொடை, யீரைம் பஃது மிருபது மாகும்" கஉய.

"மூவகைப் பாவிற்குங் கூழைமோனைத்தொடை, ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்" ருளசயகூ.

"நேர்பதின் மூன்று னேரோவொன்று பத்தாக, வகவற் குவருமேற் கதுவாய் மோனை, நூற்று மூப்பஃ தென நுவன் றனரே" கடுய. "நிரை யாகியசீர் பதின்மூன் றுனேரோ, வொன்று பத்து மொன்று மாக, வகவல் பெற்ற மேற்கதுவாய் மோனை, நூற்று நாற்பத்து மூன்றென நுவல்வர்." கசயஙு. ஆக அகவற்கு மேற்கதுவாய்மோனை உஎயஙு. "வண்டு ஞாயிறு போதுபூப் போரேறு, என்றிவை யொரோவொன் றெவ்வே ழாகத், தேமா மின்னுப் பாதிரி மேவுசேர், நன்னுணுப் பூமருது மாசெல் வாயிவை, யொரோவொன் றுறுகக் காருருமு மாவருவா, யொரோவொன் றைந்தாக வெள்ளைக்கு மேற்கதுவாய், யோனை யெண்பஃ தாகு மென்ப" அய. "வரகு வலியது கடியாறு விறகுதீக், கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளிறு, உருமுத்தீப் புளிமா விவையொ ரோவொன், றீரா றுக வியன்ற பின்னர், நரையுருமுப் புலிவருவா யொரோவொன் றைந்தாக, வெள்ளை பெற்ற மேற்கதுவாய் மோனை, யேழொரு பஃது மாறு மாகும்" எயசு. ஆகவெள்ளைக்கு மேற்கதுவாய்மோனை கருயசு. 'நேரு நிரையு மாகிய சீர்க, ளிரு பத்து நான்கா னேரோவொன் றைந்தாகத், துள்ளல் பெற்ற மேற்கதுவாய் மோனை, யீரைம் பஃது மிருபது மாகும்" கஉய.

மூவகைப் பாவிற்கு முற்றுமோனைத்தொடை, ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்; ருசக.

"எண்வகை மோனைக்கு மியன்ற பெருந்தொகை, முந்நூற்றுத் தொண்ணூற் றிரண்டு தலையிட்ட, நாலா யிரமா நவின்றனர் புலவர்" ஆக மோனைத்தொடை சதுநாகூ௰உ.

## இனி எதுகை வருமாறு.

"அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும், வெள்ளைக் கொருநூற் றைம்பத் தாறுங், கலிக்கு நூற்றிரு பஃது மாக, மூவகைப் பாவிற்குந் தலையா கெதுகை, ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்" ருசகூ. "அடியெதுகைத்தொடை கொள்ளுங் காலு, மிம்மூ வகையா னதுபெ ருந்தொகை, யைஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்" ருசகூ.

"வண்டு தேமா மின்னிவை யொரோவொன், றீரைந் தெய்திய விணையெது கைதா, முப்ப தாக மொழிந்தன ரகவற்கு" ௩௰. "வலியது கடியாறு விறகுதீக் கணவிரி, யுராறுபுலி பெருநாணு வுருமுத்தீ மழகளிறு, விரவுகொடி நரையுருமு விவையொரோ வொன்றற், கொன்றுட னீரைந்தா வியன்ற விணையெதுகை, நூற்றொரு பஃதாக நுவன்றன ரகவற்கு" ௱௰. ஆகஅகவற்கு இணையெதுகை கசய. "ஞாயிறு போதுபூ வெட்டுமுத லேழும், போரோறு நன்ஞணுப் பாதிரி பூமருது, மாசெல்வா யொன்பான் முதலா மாறு, மேவுசீர் காருருமு மாவரு வாயிவை, யீரைந்து தொட்டே யீரொழிய்த, வெள்ளை பெற்ற விணையெது கைத்தொகை, யைம்பத் தொன்ப தாகு மென்ப" ருகூ. "வரகிரு நான்கு புளிமா வொன்பான், முதலா வொரோவொன் றிருமூன் றாக, வெள்ளைக் கிணையெதுகை மூவா றாகும்" கஅ. ஆக வெள்ளைக்கு இணையெதுகை எஎ. "நேர்நிரை யீற்றாற் கலிக்கிணை யெதுகை, யிருமுப் பஃதாக வியலு மென்ப" சூ0.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த விணையெதுகை, யிருநூற் றெழுபத் தேழா கும்மே" ஆக உஎஎ. "வண்டு நான்கு மின்னுத் தேமா, வைந்து ஞாயிறு போதுபூப் போரோ, றாறு பாதிரி மேவுசீர் நன்ஞணுப், பூமருது நீடு கொடி யேழு காருருமு, நாணுத்தளை யெட்டு முதலா வந்தவவை, யொரோவொன் றெவ்வேழ் நிலம்பெற வகவற்குத், தொக்க பொழிப்பெதுகை தொண்ணூற் றொன்றே" ககக. 'வரகிரு நான்கு புளிமா வரவொன்பான், வலியது விறகுதீக் கடியாறு பத்துக், கணவிரி யுருமுத்தீப் பெருநாணு வுராறுபுலி, மழகளிறு பதினொன்று நரையுருமு விரவுகொடி, யீராறு முதலா வந்தவை யொரோவொன், றொன்பது நிலம்பெற வகவற்குப் பொழிப்பெ

துகை, நூற்றே டொருபத் தேழென நுவல்ப" ககஎ. ஆக அகவற்குப் பொழிப்பெதுகை உ௱அ. "வண்டு ஞாயிறு போதுபூப் போரோ, றெட்டு முதலா வேழுந் தேமா, மின்னுப் பாதிரி மேவுசீர் நன்ஞணுப், பூமருது மா செல்வா யொன்பான் முதலாறுங், காருருமு மாவருவாய் பத்துமுத லைந்து, மாக வெள்ளைக்கு வந்த பொழிப்பெதுகை, யெண்ணொரு பஃதே யெய்து மென்ப" அ௰. "வரகு வலியது கடியாறு விறகுதீ, யெட்டுக் கணவிரி பெரு நாணுப் புலிசெல்வாய், மழகளி றுருமுத்தீப் புளிமா விவையொன்பது, நரை யுருமுப் புலிவருவாய் பத்து முதலா, வந்த வவையொரோ வொன்றைந் தாக, வெள்ளை பெற்ற பொழிப்பெது கைத்தொடை, யாறொரு பஃது மைந்து மா கும்" கூ௰ரு. வெள்ளைப் பொழிப்பெதுகை கூ௰ரு. "வலியது விறகுதீக் கடியா றெனுமிவை, யீரேழ் தொட்டுப் பதினெட் டளவுங், கணவிரி பெருநா ணு வுருமுத்தீ மழகளிறு, புலிசெல்வா யுராறுபுலிப் பதினைந்து முதலாப், பத் தொன் பானள வுயரவு நரையுருமு, விரவுகொடிப் புலிவருவாய் பதினாறு முதலா, விருபதின் காறு முயரவும் வருதலிற், றுள்ளல் பெற்ற பொழிப் பெ துகைதா, மறுபஃ தாக வறைந்தனர் புலவர்" கூ௰.

" மூவகைப் பாவிற்கு மொழிந்த பொழிப்பெதுகை, நானூற் றொரு பத்து மூன்றென நவில்ப" ௪கங.

"நேர்பதின் மூன்று னகவற் கொரூஉவெதுகை, வண்டு நான்கு மின் னுத் தேமா, வைந்து ஞாயிறு போதுபூப் போரே, ருறு பாதிரி மேவுசீர் நன் ஞணுப், பூமருது நீடுகொடி யேழு காருருமு, நாணுத் தளையெட்டு முதலா வொரோவொன், றெவ்வேழாக வியன்றதொகைதா, மேழொரு பஃதோ டிரு பத்தொன்றே" கூ௰க. "நிரைபதின் மூன்று னகவற் கொரூஉவெதுகை, வர கிரு நான்கு புளிமா வரவொன்பான், வலியது கடியாறு விறகுதீப் பத்துக், கணவிரி யுராறுபுலி பெருநாணு வுருமுத்தீ, மழகளிறு பதினொன்று விரவு கொடி நரையுருமு, வீராறு முதலா வொரோவொன் றென்பா, னகத்தொ கைநூற் றொருபத் தேழே" ககஎ ; ஆக அகவற்கொரூஉவெதுகை உ௱அ. "நேர்பதின் மூன்றன் வெள்ளைக் கொரூஉவெதுகை, விண்டுஞாயிறுபோது பூப்போரே, றெட்டுமுதலா வேழுந்தேமா, மின்னுப் பாதிரி மேவுசீர் நன்ஞ ணுப், பூமருது மாசெல் வாயிவை யொன்பான், முதலா வொரோ வொன் றுறுங் காருருமு, மாவரு வாய்பத்து முதலாக வொரோவொன், றை ந்து மாக வறைந்த தொகைதா, மெண்ணொரு பஃதே யெய்து மென்ப" அ௰. " நிரைபதின் மூன்றன் வெள்ளைக் கொரூஉவெதுகை, வரகு வலியது கடி யாறு விறகுதீ, யெட்டுக் கணவிரி பெருநாணு வுருமுத்தீப், புலிசெல்வாய் மழகளிறு புளிமாயிவை யொன்பது, நரையுருமுப் புலிவருவாய் பத்துமுத

லாக, வோரோவொன் றைந்து நிலம்பெற், ருமொரு பஃது மைந்து மாகும்” சுயஙு; ஆக வெள்ளைக்கு ஒரூஉவெதுகை கசரு. நேரீராறாற் கலிக்கொரூஉ வெதுகை, பெருகிய நிலத்தி லோரோவொன்று களையப், பெறுந்தொகைநா ற்பத்தெட்டுப்பின்னர், நிரையீ ராறாற் சுருங்கிய நிலத்திற், கோரோவொன் றுகளையப் பெறுந்தொகை யஃதா, மிருவகைத் தொகையுந் தொண்ணூற் றாறே’ கூயசு.

“மூவகைப் பாவிற்கு மொழிந்த வொரூஉவெதுகை, நாணூற்று நாற்பத் தொன்ப தாகும்” சாசயக.

“வண்டு தேமா மின்னிவை மூன்று, மோரோவொன்று சுருங்கிய நிலத் த தந்நான், சுகவல் பெற்ற கூழை யெதுகை, யீரா றாக வியலு மென்ப” யஉ. “வலியது கடியாறு விறகுதீப் பத்துக், கணவிரி யுரறுபுலி பெருநாணு வுரு மூத்தீ, மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு, வீராறு முதலாக வோரோவொன் றொன்பா, னுக வகவற்குக் கூழை யெதுகை, தொண்ணூ றாகத் தொகுத்தனர் புலவர்” கூய. ஆக அகவற்குக் கூழையெதுகை சாஉ. “ஞாயிறு போதுபூப் போரே றேழாப், பாதிரி மேவுசீர் நன்னுணுப் பூமருது, மாசெல் வாயிவை யொரோவொன் றாகக், காருருமு மாவருவா யொரோ வொன் றைந்தாக, வெள்ளை பெற்ற கூழை யெதுகை, யாறொரு பஃது மொன்று மாகும்” கூயக. “வரகிரு நான்கு புளிமா வரவொன்பான், முதலா வோரோவொன்று நந்நான் காக, வெள்ளை பெற்ற கூழை யெதுகை, யீரா றாக வியலு மென்ப” கஉ. ஆக வெள்ளைச்குக்கூழை யெதுகை எயங. “நிரை யீராறாற் கூழையெதுகை, யிருமூப்பஃதா வியலுங்கலிக்கே” கூய.

“மூவகைப் பாவிற்குக் கூழை யெதுகை, யிருநூற்று முப்பத் தைந்தா கும்மே” உசாஙயரு.

“நேராதியாகிய சீர்பதின் மூன்றாற், சுருங்கிய நிலத்தி லோரோ வொன்று நான்காக, வகவல் பெற்ற மேற்கதுவா யெதுகை, யையொரு பஃது மிரண்டு மாகும்.’ ருயஉ. “வரகீ ரைந்து புளிமா வரவு, பதினொன்று வலியது கடியாறு விறகுதீ, யீராறு கணவிரி யுரறுபுலி பெருநாணு, வருமூத்தீ மழகளி றிவைபதின் மூன்று, விரவுகொடி நரையுருமு வீரேழ் முதலா, வோரோவொன் றேழாக வகவல்பெற்ற, மேற்கதுவாயெதுகைதொண்ணூ ற்றொன்றே’ கூயக. ஆக அகவற்கு மேற்கதுவா யெதுகை ாசயங.. “வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றெட்டு முதலா வோரோவொன் றேழுந், தேமா மின்னுப் பாதிரி மேவுசீர், நன்னுணுப் பூமருது மாசெல்வாயிவை, யொன்பா ன்முதலா வோரோவொன் றாறுங், காருருமு மாவருவா யீரைந்து முதலா,

வொரோவொன் றைந்து மாக வெள்ளைக்கு, மேற்கதுவா யெதுகை யெண் பஃ தாகும்" ௮௰. "வாகு வலியது கடியாறு விறகுதீ, யெட்டு முதலா வொரோ வொன்று நான்குங், கணவிரி பெருவேணுப் புலிசெல்வாய் மழகளி, றுருமுத் தீப்புளி மாவிவை யொன்பா, னரையுருமுப் புலிவருவா யீரைந்து முதலா, வொரோவொன் றொருநான் காக வெள்ளைக்கு, மேற்கதுவா யெதுகை யை ம்பத் திரண்டே" ௫௰௨. ஆக வெள்ளைக்கு மேற்கதுவாயெதுகை ௱௩௰௨. "நிரையீ ராறுற் கலிக்கு மேற்கதுவா, யெதுகை நாற்பத் தெட்டா வெய்து ம்" ௪௰௮.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த மேற்கதுவா, யெதுகை மூந்நூற் றிரு பத்து மூன்றே." ௩௱௨௰௩.

"வண்டு நான்கு தேமா மின்னிவை, யைந்து முதலா வொரோவொன் றேழாக, வகவல் பெற்ற கீழ்க்கதுவா யெதுகை, யொன்று தலையிட்ட நாலைந் தாகும்." ௨௰௧. "வலியது கடியாறு விறகுதீப் பத்துக், கணவிரி யுராறுபுலிபெ ருநாணு வுருமுத்தீ, மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு, வீராறு முதலா வொரோவொன் றொன்பா, னாக வகவற்குக் கீழ்க்கது வாயெதுகை, தொண்ணூ றுசத் தொகுத்தனர் புலவர்" ௯௰. ஆக அகவற்குக்கீழ்க்கதுவா யெதுகை ௱௰௧. "ஞாயிறு போதுபூப் போரே றென்றிவை, யெட்டு முதலா வொரோவொன் றேழும், பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது, மாசெல்வா யொன்பான் முதலா வாறுங், காருருமு மாவருவா யீரைந்து முதலா, வொ ரோவொன் றைந்து மாகக் கீழ்க்கதுவா, யெதுகை வெள்ளைக் கறுபத் தொன் றே" ௬௰௧. "வரகிரு நான்கு புளிமா வொன்பான், முதலா வொரோவொன் றொருநான் காக, வெள்ளை பெற்ற கீழ்க்கதுவா யெதுகை, யீரா றுக வியலு மென்ப. ௰௨. ஆகவெள்ளைக்குக் கீழ்க்கதுவாயெதுகை ௭௰௩. "நிரையீராறுற் கலிக்குக்கீழ்க்கதுவா, யெதுகை நாற்பத் தெட்டே யாகும்." ௪௰௮.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த கீழ்க்கதுவா, யெதுகை யிருநூற்று முப்பத் திரண்டே." ௨௱௩௰௨.

"வண்டு தேமா மின்னிவை மூன்றுஞ், சுருங்கிய நிலத்தி லொரோ வொன்று நந்நான், காக வகவல் பெற்றமுற் றெதுகை, யீரா றுக வியலு மெ ன்ப" ௧௨. "வலியது கடியாறு விறகுதீ யீராறு, கணவிரி யுராறுபுலி பெருநா ணு வுருமுத்தீ, மழகளிறு பதின்மூன்று விரவுகொடி நரையுருமு, வீரேழ் முதலா வொரோவொன் றேழாக, வகவல் பெற்ற முற்றெ துகைதா, மேழொ ரு பஃதா வியலு மென்ப" ௭௰. ஆக அகவற்கு முற்றெதுகை ௮௰௨. "ஞாயி றுபோதுபூப் போரேறென்றிவை, யெட்டு முதலா வொரோவொன் றேழும்,

பாதிரி மேவுசீர் நன்னாணுப் பூமருது, மாசெல்வா யொன்பான் முதலாக வாறு, காருருமு மாவருவா யீரைந்து முதலா, வொரோவொன் றைந்தா முற்றெதுகை வெள்ளைக், காலொரு பஃது மொன்று மாகும்" ௬௰௧. "வரகிரு நான்கும் புளிமா வொன்பான், முதலா வொரோவொன் றொருநான்காக, வெள்ளை பெற்ற முற்றெதுகைதா, மீரா றாக வியலு மென்ப" ௧௨. ஆக வெள்ளைக்கு முற்றெதுகை ௭௩. நிரையீ ராறுற் கலிக்குமுற் றெதுகை, நாலொரு பஃது மெட்டு மாகும்" ௪௮.

"மூவகைப் பாவிற்கு மொழிந்தமுற் றெதுகை, மூன்றுதலை யிட்ட விருநூ றாகும்" ௨௱௩. "எதுகையென் பதனொ னியன்ற பெருந்தொகை, மூவா யிரத்தோ டிருநூற்று முப்பது" ஆகவே யெதுகைத்தொடை ௩௲௨௱௩௰.

"மோனைக்கு மெதுகைக்கு மொழிந்த தொடைத்தொகை, யிருபத் திரண்டு முடியி னிட்ட, வறுநூற் றுடனே ழாயிர மாகும்". ஆகமோனைக்கு மெதுகைக்கும் ௭௲௬௱௨௰௨.

இனி முரண்வருமாறு.

"அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும், வெள்ளைக் கொருநூற் றைம்பத் தாறுங், கலிக்கு நூற்றிரு பஃது மாகும்." "மூவகைப் பாவிற்கு மொழிந்த வடிமுரண், ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகும்" ௫௱௪௰௯.

"நேரா திச்சீர் பதின்மூன் றனு, மொரோவொன்று பத்தாக வகவற் கிணைமுர, ணீரைம் பஃது முப்பது மாகும்." ௱௩௰. "நிரையா திச்சீர் பதின் மூன் றனு, மொரோவொன்று பத்து மொன்று மாக, வகவல் பெற்ற விணைமுரண் டொடைதா, மீரைம் பஃதொடு நாற்பத்து மூன்றே" ௱௪௰௩. ஆக வகவற்கு ௨௱௭௰௩. "வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றெட்டுமுதலா வொரோவொன் றேழுந், தேமா மின்னுப் பாதிரி மேவுசீர், நன்னாணுப் பூமருது மாசெல் வாயிவை, யொன்பான் முதலா வொரோவொன் றனுங், காருருமு மாவருவா யீரைந்து முதலா, வொரோவொன் றைந்து மாக வெள்ளைக், கிணைமுர ணெண்பஃ தாகுமென்ப." ௮௰. "வாகு வலியது கடியாறு விறகுதீ, யெட்டுக் கணவிரி பெருநாணுப் புலிசெல்வாய், மழகளி றுருமுத் தீப் புளிமா வரவொன்பான், முதலா வொரோவொன் றிருமூன் றாக, நரையுருமுப் புலிவருவா யீரைந்து முதலா, வொரோவொன் றைந்தாக வெள்ளைக் கிணைமுர, ணேழொரு பஃது மாறு மாகும்," ௭௰௬. ஆக வெள்ளைக்கு ௱௫௰௬. "நேரு நிரையு மாகிய சீர்க,ளிருபத்து நான்காற கலிக்கிணை முரண்டொடை, யீரைம் பஃது மிருபது மாகும்." ௱௨௰.

"மூவகைப் பாவிற்கு மொழிந்த விணைமுர, ணைஞ்னூற்று நாற்பத் தொன்பது மாகும்" நூசயகூ.

ஈண்டிணைமுரணிற்குக் கூறிய சூத்திரங்களைப் பொழிப்புமுரணுக்கு மொரூஉமுரணுக்குங் கூழைமுரணுக்கும் மேற்கதுவாய்முரணுக்குங் கீழ்க் கதுவாய்முரணுக்கும் முற்றுமுரணுக்குங் கூறி இணைமுரணுக்குத் தொடை கொண்டிவ்வாறேகொள்ள ஒரோவொன்று ஐஞ்னூற்று நாற்பத்தொன்ப தாம். நுசகூ. "இணைமுரண் டொடையோ டேனைய கொள்ள, வொரோ வொன் றைஞ்னூற்று நாறபத் தொன்பதே"

"எண்வகை முரணு னியன்ற தொடைத்தொகை, மூந்நூற்றுத் தொண் ணூற் றிரண்டு முடிவிட்ட, நாலா யிரமா நவின்றனர் புலவர்." ஆச, சகூ நூகூயஉ.

## இனியியைபு வருமாறு.

"அகவற் கிருநூற் றெழுபத்து மூன்றும், வெள்ளைக் கிருநூற் றைம் பத் தாறுங், கலிக்கு நூற்றிரு பஃது மாக, மூவகைப் பாவிற்கு மெழுத்தடியி யையபே, யைஞ்னூற்று நாற்பத் தொன்ப தாகும்." நூசயகூ. "சொல்லடி யியைபு கொள்ளுங் காலு, மூவகை யானும் வந்த பெருந்தொகை, யைஞ்னூ ற்று நாற்பத் தொன்ப தாகும்" நூசயகூ.

"நேரா திச்சீர் பதின்மூன் ருனு, மொரோவொன்று பத்தாக வகவற்கி ணையியை, யீரைம் பஃது முப்பஃது மாகும்" ாநுய. இவ்வைந்திணையு மூன்றுபா விற்கும் பகுக்குமாறு—"ஐந்து தொடையா னகவற்கு வருந்தொகை, யொ ரோவொன் றிருநூற் றெண்பத்து மூன்ரு, வாயிரத்து நானூற் ருருபத் தைந்தே" ருசாயரு. "ஐந்து தொடையான் வெள்ளைக்கு வந்ததொகை, யொ ரோவொன் ருருநூற்றுப் பத்து மூன்ரு, வெண்ணூற் ருருபத் தைந்தென மொழிப" அாயரு. "ஐந்து தொடையாற் கலிக்கு வருந்தொகை, யொரோ வொன் ருருநூற் றிருபஃ தாக, நூறு தலையிட்ட ஐஞ்னூ ருகும்" கூா.

"கூறிய மூன்றின் ருடைத்தொகை கூறிறு, லைஞ்னூற் றுடனெண் ணூற்று முப்பது" ஆகவைந்து தொடையானும் பெற்றதொகை உகூ அாநுய.

இனி "ஐவகை முரணும் வருக்க மோனையும், வருக்க வெதுகையும் வழி மோனையும், உயிரெது கையு முரைத்தசெந் தொடையு, மறுநூற் றிருபத் தைந்தடி யோடுந், தொடைகொளும் வகையைத் தோன்றக் கூறி, னுந்தை

யெனுஞ்சீர் முதற்பா விரண்டிற்கு, முறழ்ந்த வடிக ளிருபது நீக்கி, யேனைச் சீரா னுறழ்ந்த வடித்தொகை, யறுநூற் றைந்தே யாகு மவற்றுள், வழுநிலை யைம்பத் தாறுங் களைய, வோரோவொன் றெய்திய தொடைத்தொகைகூறி, னைஞ்ஞூற்று நாற்பத் தொன்ப தாகப், பத்துத் தொடையும் பெற்ற தொகைதா, மையா யிரத்தொடு நானூற்றுத் தொண்ணூறு" ஆகப்பத்துத்தொடைக்கு மொரோவொன் றைஞ்ஞூற்றுநாற்பத்தொன்பஃதாகப் பெற்றதொகை ௫௲௪௱௯௰. நுந்தைக்கிரண்டு மரபிற்குமூன்றும் வழுப்போய் ஐம்பத்தாறு வழுவாயிற்று. இனி இத்தொகையை மூன்று பாவிற்கும் பகுக்குமாறு:— "ஒரோவொன் றிருநூற் றெழுபத்து மூன்றாப், பத்தி னானு மகவல் பெறுந் தொகை, யீரா யிரத்தோ டெழுநூற்று முப்பது" "ஒரோ வொன்றொருநூற் றைம்பத்தாறாப், பத்தி னானும் வெள்ளை பெறுந்தொகை, யாயிரத் தைஞ்ஞூற் றறுபஃ தாகும்" "ஒரோவொன் றொருநூற் றிருபஃ தாகப், பத்தி னானுந் துள்ளல் பெறுந்தொகை, யாயிரத் திருநூ றாகு மென்ப."

"தொடைமூ வைந்தா னியன்ற தொகைதா, மெண்ணா யிரத்தொடு முந்நூற் றிருபது."—முற்கூறியவைந்து மிதனாற்கூறிய பத்துமாகப் பதினைந் தானும் பெற்றதொகை ௮௲௩௱௨௰.

## இனி மூன்றாமெழுத்தொன்றெதுகை.

எழுத்தெண்ணப்படு மெழுத்துக்களிலும் எழுத்தாக வெண்ணாத வொற்றுக் குற்றுகரங்களிலுந் தொடைகொள்ளுமாறு:—

"வண்டு மின்னா நுந்தைசேற் றுக்கா, னீடுகொடி யிவ்வாற்றா னறுபது நீக்கி, யேனைச் சீரா னுறழ்ந்த வடிக, ளிருநூற் றறுபத்து நான்கா மவற்றுண், முப்பத் தொருவழுக் களைந்து கொள்ளப், பெற்ற வகவற் றொடைத் தொகை கூறி, னிருநூற்று முப்பத்து மூன்றா கும்மே"—இதனுட் களைந்த சீரைந்துநீக்கி யேனைநேராதியொன்பதிற்குப் பதினெட்டும் நிரையாதி பதின்மூன்றற்குப் பதின்மூன்றுமாக வழு முப்பத்தொன்றாயிற்று. "வண்டு மின்னா நுந்தைசேற் றுக்கா, லிவற்றான் முப்பத் தொன்று நீக்கி, யேனைச் சீரா னுறழ்ந்த வடிக, ணூற்றோ டைம்ப தாகு மவற்றுள், வழுப்பதி னான்குங் களைய வெள்ளை, பெறுந்தொடை நூற்று முப்பத் தாறே" இதனுட் களைந்த சீர் நான்குநீக்கி யேனைநேராதி பத்திற்குப் பத்தும் நிரையாதியுள் வரகு வலியது கடியாறு விறகுதீயென்னும் நான்கற்கு நான்குமாக வழுப்பதினான் காயிற்று. ஆக விரண்டற்கும் வழு நாற்பத்தைந்து. "சேற்றுக்கா னீடு கொடிச் சீரைந்து நீக்கி, யேனைச் சீராற் றுள்ளல் பெறுந்தொடை, யொரு நூற் றொருபஃ தாகு மென்ப." ௱௰

"மூவகைப் பாவின் மூன்று மெழுத்தொன், றெதுகை நானூற் றெழுபத் தொன்பது" ௪௱௭௰௯. அகவற்கைந்தும் வெள்ளைக்கு நான்குங் கலிக்கிரண்டுமாக இவ்வகையாற் களைந்தசீர்களைந்து மிரண்டா மெழுத்தும் மூன்றுமெழுத்துஞ் சேரவொன்றிற் றலையாகெதுகைப்பாற்படுதலானும் பிறசீர் குறைந்து வேறுபடுத்திற் பிறதொடைசிறந்து இத்தொடை சிறந்து காட்டாமையானும் அங்ஙனங் களையவேண்டிற்றெனவுணர்க.

### மெல்லினவெதுகை முதலியன.

இனி "மெல்லின வெதுகையு மிடையின வெதுகையு, மாசிடை யெதுகையு நெடின்மோனையு, நிறைமுதற் சீரு நுந்தையு நீக்கி, நேர்முதற் சீர்கள் பதின்மூன் றானு, மொரோவொன் றுறழு மடித்தொகை கூறி, னூற் றொ டைம்பத் தாறு மவற்றுள், வழுநில மிருபத் தாறுங் களைய, வொரோ வொன் றெய்துந் தொடைநூற்று முப்பஃது" "அந்நாற் றொடையா னகவல் பெறுந்தொகை, யைஞ்ஞூற் றிருபஃ தாகு மென்ப." "நேர்பதின் மூன்றன் முன்னர்க் கூறிய, நால்வகைத் தொடைக்கு மொரோவொன் றுறழ்ந்த, வடித்தொகை தொண்ணூற்று மூன்ற னுள்ளும், வழுப்பதின் மூன்று களைய வொரோவொன், றெய்திய தொடைதா மெண்ப தென்ப, தாகநாற் றொடை பெற்றவெண் டொடைதா, னெழுநூற் றிருபஃ தெனமொழிந் தனரே." அவற்றுள் "நுந்தை வந்த மெல்லின வெதுகை, முதற்பா விரண்டற்குந் தளைவழுக் களைந்து, கொள்ளப் பெறுந்தொடை பதினே ழாகும்." "நுந்தை தேமாக் களைந்துநேர் முதற்சீர், பன்னிரண் டானு முன்னர்க் கூறிய, நாற்றொடை யொரோவொன் றெய்துந் தொடைதா, மறுபஃ தாகக் கலிக்கு வருந்தொடை, யிருநூற்று நாற்பஃ தென்றனர் புலவர்." நாற்றொடை யானும் பெற்ற தொடைதா, மாயிரத் தோடு தொண்ணூற் றேழே" ஆகவிந்நான்கு தொடைக்கும் பெற்ற தொகை ௲௯௱௭.

### இனி வல்லினவெதுகை வருமாறு.

"வல்லின வெதுகை வகுக்குங் காலை, நிரைபதின் மூன்று மின்னு நுந்தையு, மேவு சீரு நானுத் தளையுங், களைய நோராதி பத்தா மவற்றிற், கிருபது வழுவுங் களைந்த பின்னர், அகவல் பெற்ற தொடைநூ றாகும்." "நிரைபதின் மூன்று மேவு சீரு, மின்னு நுந்தையுங் களைந்து நோராதி, பதினொன் றற்கும் பதினொரு வழுவுங், களைந்தபின் வெள்ளைக் கறுபத் தெட்டே, நிரையீ ராறு நானுத் தளையு, மேவு சீருங் களையநே ராதி, பத்தாற் கலித்தொடை யைம்பஃ தாகும்."

"மூவகைப் பாவிற்கும் வல்லின வெதுகை, யிருநூற் றிருபத் தெட்டென மொழிப." ௨௱௧௮.

### இனியுயிரளபெடை வருமாறு.

"அசைச்சீர் நான்குரி முதற்சீ ரெட்டு, நந்தை யெனப்பதின் மூன்று மொழிந்தது, நேரேழ் நிரையே ழாகிய சீராற், பெற்ற வடிநூற் றறுபத் தெட்டனுள், மூவேழ் வழுவு நீக்கிய பின்ன, ரகவல் பெற்ற வளபெடைத் தொடைதா, நூற்றெருடு நாற்பத் தேழென நுவல்ப" "கூறிய பதின்மூன் றொழித்த பின்னர், நேரொன் பானு நிரையொன் பானு, மாகிய சீராற் பெற்ற வடிதா, நூற்றோ டொருபத் தேழா மவற்றுள், வழுப்பதி னொன்று நீக்கி வெள்ளைக், களபெடை நூற்று ளாறு மென்ப." "உரிமுதற் சீரெட் டொழிந்த பின்னர், நேர்நிரை யீரொண் சீராற் றுள்ளற், களபெடை யெண்பஃ தாகு மென்ப." "மூவகை யாற்பெறு முயிரள பெடைதா, முந்நூற்று முப்பத்து மூன்றென மொழிப." ௩௩௩௰௩.

### இனி யொற்றளபெடை வருமாறு.

"தேமாப் புளிமா வெனுமிரண் டற்கும், வழுநில மூன்று களைய வகவற், கொற்றள பெடைதா மிருபத் தொன்றே." "மாசெல்வாய் தேமா வழு விரண்டு களைந்து, புளிமாப் புலிசெல்வாய் கூட்டநான் கானும், வெள்ளைக் கொற்றள பிருபத்து நான்கே" "முதற்பா விரண்டிற் கொற்றள பெடை தா, மைந்துதலை யிட்டநா லொருபஃ தாம்" சயடு. ஆகவிரண்டு அள பெடையுங் கூட்ட ௩௭௭௰அ. இனி, யொற்றளபெடை துள்ளலோசை யைத் தள்ளி நிற்றலாற் கலிக்கு வாராதென்றுணர்க. "எட்டுத் தொடையா னியன்ற தொகைதா, மொருநூற் றெழுபத் திரண்டுதலை யிட்ட, வீரா யிர மே யாகு மென்ப"

### இனி யசையந்தாதி வருமாறு.

தேமா முதனின்றுறழ்ந்த வடிக்கு, நான்காஞ் சீருந் தேமாவெனநின்று மேல்வருமடியோ டந்தாதிக்க வேண்டுமென்றுணர்க. அது, "தேமா வண்டு வண்டு காமர்' எனநின்று மாவென மதித்தென வருமென்று கொள்க. இஃது ஒழிந்தவடிகட்கும் மேல்வருஞ் சீரந்தாதிக்குமென்றுகொள்க. இது, முதற்பாவிரண்டற்குமே கொள்க. அங்ஙனம் கொள்ளுங்காற் போது பூவுக்குப் போதகளெனவும் விறகுதீக்கு விரிகாரெனவுங்கொள்க. ஒழிந்தனவற்றிற்கு மிவ்வாறே கூறவேண்டுவன கூறிக்கொள்க. "தேமா வாறு ஞாயிறு புளிமாப், போதுபூ வேழு பாதிரி பூமருது, நீடு கொடியெட் டுக்கா ருருமு, நாணுத்தளை யொன்பது முதலா வந்த, வசையந் தாதி யொரோவொன் றென்ப, தொன்ப தாக வகவல் பெறுந்தொகை, நாலொரு பஃது மெட்டு மாகும்" சஅ. இதற்குமேல் வருவனவற்றிற்கு "முதலா" வென்பதனை யெண்களோடுகூட்டிப் பொருளுரைக்க. "புளிமா வொன்

பான் வலியது விறகுதீப், பத்துக் கணவிரி யுராறுபுலி மழகளி, றீரா றுநரை யுருமு விரவுகொடி, யீரேழ் முதலா வந்தா தியொரோ, வொன்றே ழாக வ கவல் பெறுந்தொகை, யையொரு பஃது மாறு மாகும்'' ௫௬. ஆக, ௱௪. 'போதுபூப் போரே றிருநான்கு மேவுசீர், நன்ணு மாசெல்வா யீரைந்து முதலா, வொரோவொன் றைந்து மாவரு வாய்பன், னிரண்டு முதலாக மூ ன்று நிலமாக, வெள்ளை பெற்ற வசையந் தாதி, நாலைந் ததனோ டெட்டு மா கும்'' ௨அ. ''விறகுதீக் கடியா றென்பான் பெருநா, ணுருமுத்தீப் புலி செல்வாய் பதினொன்று முதலா, வொரோவொன்று நான்காக வெள்ளை பெ ற்ற, வசையந் தாதி நாலைந் தாகும்'' ௨௰. ஆக, ௪அ. இனிக், கலிக்கசையந் தாதி வருங்காற் றனக்குரிய இருபத்துநான்குசீரு முறழ்ந்தவடிகளுக்கு வெ ண்சீர் நான்கு மீற்றின்கண்வருவதல்ல தொழிந்தவியற்சீர் பதினாறு முரிச் சீர் நான்கு மீற்றின்கண் வந்த அந்தாதித்தொடை கொள்ளாவென்றுணர்க. ''நேரீ ராறு நிரையீ ராறு, மாகிய சீர்கட் கொரோவொன் றைந்தாத், துள் ளல்பெற்ற வசையந் தாதி, நூற்றே டிருபஃ தாகு மென்ப.'' ௱௨௰.

''மூவகைப் பாவிற்கு மசையந் தாதி, யிருநூற் றெழுபத் திரண்டா கும்மே.'' ௨௱எ௰௨.

இனிச் சீரந்தாதி வருமாறு.

''வண்டு நுந்தை நான்கு தேமா, மின்னிரு மூன்றா மு முதலா வொரோ வொன், றவ்வா றாக வகவல் பெற்ற, சீரந் தாதியிருபத்து நான்கே'' ௨௪. ''வலியது விறகுதீக் கடியா றீரைந்து, கணவிரி யுராறுபுலி பெருநாணு வருமு த்தீ, மழகளி றீரா றும் விரவுகொடி நரையுருமு, வீரேழ் முதலா வொரோவொ ன் றேழாக, வகவல் பெற்ற சீரந் தாதி, யேழொரு பஃதே யாகு மென்ப'' எ௰, ஆக ௯௪. ''ஞாயிறு போதுபூப் போரே றெட்டுப், பாதிரி மேவுசீர் நன் ணுப் பூமருது, பத்து முதலாக வொரோவொன் றையைந், தாகியுங் காரு ருமு வீராறு முதலா, மூன்று மரவு புளிமாப் பத்து, முதனான்கும் வரக்கெ ட்டு முதலா நான்கு, மாகியும் வெள்ளை பெற்றசீ ரந்தாதி, யையொரு பஃ தாமெட்டு மாகும்,'' ௫௰அ. ''மாசெல் வாயீ ரேழ்புலி செல்வாய், மாவரு வா யீ ரெட்டுப் புலிவரு, வாயீ ரொன்பது முதல வந்து, மும்மூன் றாகுஞ் சீரந் தாதி, துள்ளற் சீரா றாகு மென்ப'' இதற்கு வந்த சீர் வருதல் கொள்க. ௰௨.

''மூவகைப் பாவிற்குஞ் சீரந் தாதி, நூற்றே டறுபத்து நான்கென நு வல்ப, நானூற்று முப்பத் தாறீ ரந்தாதி'' ஆகவிரண்டந்தாதியும் ௪௱௩௰௬.

இனி யெழுத்துவிட்டிசையும் குறிப்புவிட்டிசையும் வருமாறு :—''தே மா வைந்து ஞாயிறு போரேறு, நன்ணுப் பாதிரி பூமரு தேழுகா, ருருமெ

ட்டு முதலா வந்தவை யொரோவொன், றைந்தா வகவல் பெற்ற விட்டிசை தா, மேலொரு பஃதே யாகு மென்ப” ௭௰. “ஞாயிறு போரே றிருநான்கு முதலேழ், பாதிரி தேமா நன்னாணுப் பூமருது, மாசெல்வா யொன்பான் முதலா வாறு, காருருமு மாவருவாய் பத்துமுத லைந்தா, வெள்ளைக்கு வந்த விட்டிசை தாமே, யையொரு பஃது நான்கு மாகும்” ௫௪. “ஞாயிறு போரேறு பதின்மூன்று நன்னாணுப், பாதிரி பூமருது மாசெல்வா யீரேழ், காருருமு மாவருவாய் மூவைந்து முதலா, வந்தவை யொரோவொன் றையைந் தாகத், துள்ளல் பெற்ற விட்டிசை தாமே, நாலொரு பஃதே யாகு மென்ப.” ௪௦.

“மூவகைப் பாவிற்கு மெழுத்து விட்டிசை, நூற்றோ டறுபத்து நான்கே பின்னர்க், குறிப்பு விட்டிசையு மவ்வா றுகு, மிருதொகை முந்நூற் றிருபத் தெட்டே” ஆகவிருவகை விட்டிசையும் ௩௱௨௰௮.

“மோனை முதலா விட்டிசை யீறு, வீரடித் தொடைகொளு மிருபத் தைந்தின், றொகைநிலை பதினோ ராயிரத் திருநூற், றைம்பத் தாறென வறைந்தனர் புலவர்” ஆகவீரடித்தொகை யிருபத்தைந்தனாலும் பெற்றதொகை ௰௧௲௨௱௫௰௬.

இனி, யோரடித்தொடை கொள்ளுங்கால் அவையும் பின்வருமடியொடு தளைவழுவப்படாமற் கோடும்.

அவற்றுட் பொழிப்பெதுகை வருமாறு.

“வண்டு நான்கு மின்னுத் தேமா, வைந்து ஞாயிறு போதுபூப் போரே, றாறு பாதிரி மேவுசீர் நன்னாணுப், பூமருது நீடுகொடி யேழுகா ருருமு, நாணுத்தளை யெட்டு முதலா வந்தவை, யொரோவொன் றெவ்வேழ் நிலம்பெற வகவற்குத், தொக்க பொழிப்பெதுகை தொண்ணூற் றொன்றே, வரகிரு நான்கரவு புளிமா வொன்பான், வலியது விறகுதீக் கடியாறு பத்துக், கணவிரி யுருமுத்தீப் பெருநாணு வுரறுபுலி, மழகளிறு பதினொன்று நரையுருமு விரவுகொடி, யீராறு முதலா வந்தவை யொரோவொன், றொன்பது நிலம்பெற வகவற் பொழிப்பெதுகை, நூற்றோ டொருபத் தேழென நுவல்ப.” இனி வருக்கப் பொழிப்பெதுகை வருமாறு :— “வண்டைந்து மின்னுத் தேமா வாறு, ஞாயிறு போதுபூப் போரே றேழு, பாதிரி நன்னாணுப் பூமருது நீடுகொடி, மேவுசீ ரெட்டுக் காருருமு நாணுத், தளையொன்பான் முதலா வொரோவொன் றாறு, வகவல் பெற்ற பொழிப்பெது கைத்தொடை, யெழுபத் தெட்டே யாகு மென்ப” இனி நிரையாதி வருக்கப்பொழிப்பெதுகைக்கு முன்னர் நிரையாதிப் பொழிப்பெதுகைக்குக் கூறினவுரைச் சூத்திரத்தைக்கூறிக்கொண்டு அதன்றொகையே இதற்குங்கொள்க.

நேராதி வல்லினப்பொழிப்பெதுகை வருமாறு :— "வண்டு நான்கு தேமா வைந்து, ஞாயிறு போதுபூப் போரே ருறு, நன்னுணுப் பாதிரி பூமருது நீடு கொடி, யேழு காருருமு வெட்டுமுதலா, வந்தவை யொரோவொன் றெவ்வே ழ் நிலம்பெற, வகவல் பெறும்வல் லினப்பொழிப் பெதுகை, யேழொரு பஃ தே யெய்து மென்ப" இனி நேராதி மெல்லினப்பொழிப்பெதுகைக்கு மு ன்னர் நேராதிப்பொழிப்பெதுகைக்குக் கூறிய உரைச்சூத்திரத்தைக் கூறிக் கொண்டு அதன்றொகையே யிதற்குங்கொள்க.

"நால்வகை யகவற் பொழிப்புத் தொகைதா, மைஞ்ஞூற் றெழுபத் தெட்டா கும்மே" ஆக ருாஎமஅ.

இனி வெள்ளைக்குப் பொழிப்பெதுகை வருமாறு :— "வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றெட்டு முதலா வேழுந் தேமா, மின்னுப் பாதிரி மேவு சீர் நன்ஞுணுப், பூமருது மாசெல்வா யொன்பான் முதலாறுங், காருருமு மாவருவாய் பத்துமுத லைந்து, மாக வெள்ளைக்கு வந்தபொழிப் பெதுகை, யெண்ணொரு பஃதே யெய்து மென்ப" "வரகு வலியது கடியாறு விறகு தீ, யெட்டுக் கணவிரி பெருநாணுப் புலிசெல்வாய், மழகளி றுருமுத்தீ பு ளிமா விவை யொன்பது, நரையுரு முப்புலி வருவாய் பத்து, முதலா வந்த வை யெரோவொன் றைந்தா, வெள்ளை பெற்ற பொழிப்பெது கைத்தொ டை, யாறொரு பஃது மைந்து மாகும்"

"இனி வருக்கப்பொழிப்பு வருமாறு :—"வண்டு ஞாயிறு போதுபூப் போரேறு, பாதிரி மாசெல்வா யொன்பான் முதலாறு, மின்னு நன்னுணுத் தேமா மேவுசீர், பூமருது பத்து முதலா வைந்து, மாவருவாய் காருருமுப் பதினொன் று முதலா, நான்கு மாக வந்த வாற்றான், வெள்ளை பெற்ற வருக் கப் பொழிப்பெதுகை, யாறொரு பஃது மொன்பது மாகும்" இனி நிரை யாதி வருக்கப் பொழிப்பிற்கு முன்னர் நிரையாதிப் பொழிப்பெதுகைக்குக் கூறிய வுரைச்சூத்திரத்தைக் கூறி யதன்றொகையே இதற்குங்கொள்க.

இனி வல்லினப் பொழிப்பெதுகை வருமாறு ;— "வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றெட்டு முதலா வொரோவொன் றேழு, மாசெல் வாய் பூ மருது தேமாப், பாதிரி நன்னுணு வொன்பான் முதலாறுங், காருருமு மாவருவாய் பத்துமுத லைந்து, மாக வந்த வாற்றான் வெள்ளை, பெற்ற வல் லினப் பொழிப்பெது கைதா, மாறொரு பஃதோ டெட்டு மாகும்."

இனி மெல்லினப் பொழிப்பெதுகைக்கு முன்னர் நேராதிப்பொழிப் பெதுகைக்குக் கூறிய வுரைச்சூத்திரத்தையே கூறி அதன்றொகையே இத ற்குக் கொள்க. "நால்வகை வெள்ளைப் பொழிப்பெது கைதா, நானூற்று நாற்பத் தொன்றென மொழிப" ஆக சாசச௧.

## இனிக் கலிக்குப் பொழிப்பெதுகையும் வருக்கப்பொழிப் பெதுகையும் வருமாறு.

"வலியது விறகுதீ கடியா றெனுமிவை, யீரேழ் தொட்டுப் பதினெட் டளவுங், கணவிரி பெருநாணு வருமுத்தீ மழகளிறு, புலிசெல்வா யுராறு புலி பதினைந்து முதலாப், பத்தொன் பானள வுயரவு. நரையுருமு, விரவு கொடி புலிவருவாய் பதினாறு முதலா, விருபதின் காறு முயரவும் வருதலி ற், றுள்ள லோசை பெற்றபொழிப் பெதுகை, யறுபஃ தாக வறைந்தனர் புலவர்" கூ௰. "மூவகைப் பாவிற்கு மொழிந்த பொழிப்பெதுகை, நானூற் றொருபத்து மூன்றென நவில்ப" சாா௰௩.

## முற்றெதுகையும் வருக்கமுற்றெதுகையும் வருமாறு.

"நந்தை வண்டு நான்கு தேமா, வைந்து முதலா வொரோவொன்று நான்கு, மின்னிரு நான்கா வொருநிலத்து வருதலு, மாக வகவல் பெற்ற முற்றெதுகை, யீராறு மொன்று மாகு மென்ப" ௰௩. இவற்றை யொரோ வொன்றாகக்கொள்ளின் மற்றை யடியொடு தளைவழுப்படும்; அது " மந்தி தந்த பைந்தாட் செந்தினை" எனநிற்ப மெல்லடி வந்தெனத் தொடை வந் தாற் றளைவழுவாமாறு காண்க. "வலியது விறகுதீக் கடியாறீ ராறுங், கணவிரி பெருநாணு மழகளி றுருமுத்தீ, யுராறு புலிபதின் மூன்று நரையு ருமு, விரவு கொடிபதி னான்கு முதலா, வொரோவொன் றேழாய் முற்றெ துகைபெறும்" "வருக்கமுற் றெதுகையு மவ்வா றேபெற், றொருநாற் பஃது மகவற் கெய்தும்" ஆக இருவகை முற்றும் ஈ௫௰௩. 'ஞாயிறு போதுபூப் போரே றென்றிவை, யெட்டு முதலா வொரோவென் றேழும், பாதிரி நன் ஞணுப் பூமருது மாசெல்வாய், மேவுசீ ரொன்பது முதலா வாறுங், காருரு மு மாவருவாய் பத்து முதலேங், துயரவும் புளிமா வொன்பது முதனான்கும், வரகெட்டு முதலா நான்கு மாகி, வந்த விவற்றான் வெள்ளை பெறுமுற், றெ ழுபத்து மூன்றே யாகு மிங்ஙனம், வருக்க முற்றும் வந்தவெண் ணுக, விர ண்டன் றொகைநூற்று நாற்பத் தாறே, நிரையீ ராறுறழ்ந்த வடியறு பஃ திற், சுருங்கிய கலத்தி லொரோவொன்று களையத், துள்ள லோசை பெற் றமுற்றுத்தொடைதா,நாற்பத் தெட்டே யாகும் வருக்க,முற்றுத் தொடை யு மவ்வா றாக, விரண்டன் றொகையுந் தெண்ணூற் றாறே." "மூவகைப் பாவி ற்கு மிருவகை முற்று, முந்நூற்றுத் தொண்ணூற் றைந்தென மொழிப" ஈாகூ௰௫. ஆக ௲ூாஈ௪.

## இனியோருஉவெதுகை வருமாறு.

"நேர்பதின் மூன்று னகவற் கொரூஉவெதுகை, வண்டு நான்கு மின் னுத் தேமா, வைந்து ஞாயிறு போதுபூப் போரே, றாறு பாதிரி மேவுசீர்

நன்னாணுப், பூமருது நீடுகொடி யேழு காருருமு, நாணுத்தளை யெட்டு முதலாவொரோவொன், றெவ்வே ழாக வியன்ற தொகைதா,மேழொரு பஃதோ டிருபத் தொன்றே.” ௯௰௧. “நிரைபதின் மூன்றா னகவற் கொரூஉவெதுகை, வரகிரு நான்கு புளிமா வொன்பான்,வலியது கடியாறு விறகுதீப் பத்துக், கணவிரி யுராறுபுலி பெருநாணு வருமுத்தீ, மழகளிறு பதினொன்று விரவுகொடி நரையுருமு, வீராறு முதலா வொரோவொன் றொன்பா, னாகத் தொகைநூற் றொருபத் தேழே” ௱௰௭. ஆக ௨௱௮. “ நேர்பதின் மூன்றான் வெள்ளைக் கொரூஉவெதுகை, வண்டு ஞாயிறு போதுபூப் போரே, றெட்டு முதலா வேழுந் தேமா, மின்னுப் பாதிரி மேவுசீர் நன்னாணுப், பூமருது மாசெல் வாயிவை யொன்பான், முதலா வொரோவொன் றானுங் காருருமு, மாவருவாய் பத்து முதலா வொரோவொன், றைந்து மாக வறைந்த தொகைதா, மெண்ணொரு பஃதே யெய்து மென்ப.”

“ நிரைபதின் மூன்றான் வெள்ளைக் கொரூஉவெதுகை, வரகு வலியது கடியாறு விறகுதீ, யெட்டுக் கணவிரி பெருநாணுவருமுத்தீப், புலிசெல்வாய் மழகளிறு புளிமா வரவிவை, யொன்பது நரையுருமுப் புலிவருவாய் பத்து, முதலா வொரோவொன் றைந்து நிலம்பெற்,றொரு பஃது மைந்து மாகும்.” ௯௰௫. “ நேரீ றாறாற் கலிக்கொரூஉ வெதுகை, பெருகிய நிலத்தி லொரோவொன்று களையப், பெறுந்தொடை நாற்பத் தெட்டுப்|பின்னர், நிரையீ றாறிற் சுருங்கிய நிலத்தி, லொரோவொன்று களையப் பெறுந்தொடை யஃதா, மிருவகைத் தொடையுந் தொண்ணூற் றாறே.” ௯௬.

“ மூவகைப் பாவிற்கு மொழிந்த வொரூஉ வெதுகை,நானூற்று நாற்பத் தொன்ப தாகும்.” ௪௱௪௰௯.

இனிவருக்கவொரூஉவருமாறு.

“ வண்டைந்து மின்னுத் தேமா வாறு, ஞாயிறு போதுபூப்பேரோ றேழு, மேவுசீர் பூமருது நன்னாணு நீடுகொடி, யெட்டுக் காருருமு நாணுத்தளை யொன்பான், முதலா வந்தவை யொரோவொன் றானும்,பாதிரி யேழு முதலா வேழு, மாக வகவற்கு வருக்க வொரூஉத்தொகை, யேழொரு பஃது மொன்பது மாகும்.” இனி நிரையாதி வருக்கவொரூஉவிற்கு முன்னர் நிரையாதி யொரூஉவிற்குக்கூறிய உரைச்சூத்திரத்தையேயிதற்குங்கொள்க. ஆக-௱௯௬.

இனி வெள்ளைக்கு நேராதி வருக்கவொரூஉ நந்தை யொழியமுன்னர் நேராதியொரூஉவிற்குக்கூறிய உரைச்சூத்திரத்தைக்கூறியதன்றொகையி லிதற்கேழுகுறைத்துக்கொள்க. ௮௰. இனி வெள்ளைக்கு நிரையாதி வருக்க வொரூஉவிற்கு முன்னர் நிரையாதி யொரூஉவிற்குக் கூறிய வுரைச்

சூத்திரத்தைக்கூறியதன்றொகையே யிதற்குங் கொள்க. சுரு. ஆக ஈசுயிரு. இனிக்கலிக்கு வருக்கவொரூஉவிற்கு முன்னரொரூஉவிற்குக் கூறியவுரைச் சூத்திரத்தையே கூறி யதன்றொகையே யிதற்குங் கொள்க. கூசு. ஆக சாஙயஎ.

"மூவகைப் பாவிற்கு மிருவகை யொரூஉத்தொகை, தொள்ளா யிரமே யாகு மென்ப." ஆக கூா. "அளவடிக்களவரும் விகற்பத்தொடைதா, நானூற் றுமுப்பத்து நான்கு தலையிட்ட, வீரா யிரமே யாகுமென்ப" ஆக ஓரடித்தொடை. உதுசாஙச. "இருவகைத் தொடையா னியன்ற தொகைதாம், பதின் மூவாயிரத் தறுநூற்றுத்தொண்ணூ, றீரடித் தொடையு மோரடித் தொடையும்" யிஙதுகூாகூ. இனி, இச்சூத்திரத்திற்குத் 'தொண்டுதலையிட்ட பத்துக் குறை யெழுநூற்றொன்றுமென்ப' வென்று பாடமோதிப் பதின்மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூறென்பாரு மினிப்பத்துக்குறை யெழுநூற்றொன்றுமென்ப வென்று பாடமோதித் தொண்டுதலையிட்ட பத்துப்பத்தொன்பதென்பாருமினித்தொண்டுதலையிட்ட பத்துக்குறை யெழுநூற்றொன்றுமென்ப வென்றுபாடமோதிப் *பதின்மூவாயிரத்தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதென்பாரும் இனிப்பத்துக்குறைய யெழுநூற்றொன்பஃதென்ப வென்றுபாட மோதி யிதனைமிகவுநலிந்து பொருள்கொண்டு†பதின் மூவாயிரத் தெழுநூற்றெட்டென்பாருமெனப் பல பகுதியாசிரியர், இவற்றுணல்ல துய்த்துணர்ந்துகொள்க. இனிமெய்பெறுமரபிற்றொடையெனவே விளங்கத்தோன்றுதனவுஞ் சிலதொடையுளவாயிற்று. அவை ஆசிடை யெதுகை வேறுபாடு மிரண்டடி யெதுகையுஞ் செந்தொடை வேறுபாடு மிரட்டையு மந்தாதி வேறுபாடு மிணைகூழை மேற்கதுவாய் கீழ்க்கதுவாய் முற்றுக்கடையிணை கடைக்கூழை யிடைப்புணர்பின் என்பனவும் பிறவும் வேறுபாடாகக் கூறுவார் கூறுந்தொடைகளுமெல்லா மிதனுளேதழீஇக்கொள்க. அவை மேற்கூறுதும். இனி, "அடிதொடைமிசைபல விரவின வரினு, முதல்வரு மதனது பெயர்கொளன் முறையே" எனச்சூத்திரஞ்செய்து பலரும் §முதல்

*கஙசுகக என்பர் உரையாசிரியர்.

†கஙஎாஅ என்பர் பேராசிரியர்; இவற்றை இந்நூல் கக-ஆம் பக்கக்கீழ்க் குறிப்பிற் காண்க. இவ்வாறு நான் குரைப்பேதங் காட்டுதலால் நச்சினார்க்கினியர் இந்நூற்குரை செய்தற்கு முன்னமே நால்வர் இந்நூற் குரை செய்தனர் என்பது உய்த்துணரப்படும். யாப்பருங்கலவிருத்திகாரரும் கஙசுகக, என்பர். (உக) "செந்தொடையிரட்டை."

§இதனைத், "தொடைபலதொடுப்பினுந் தளைபல விரவினு, முதல் வந்ததனுன் மொழிந்திசிற் பெயரே" (ருங) என்னும் யாப்பருங்கலச்சூத்திரவுரையிற்காண்க,

வந்ததொடையே தளையே முதலியனவே கொள்வர் பின்னுள்ளோர், அவரறியார். என்னை? "செங்காற் பைந்தினை யிதணமேறிப், பைங்காற் சிறுகிளி கடிவோடந்தை" யென்புழி எதுகையு முரணும் வந்துழி முதற்கண்ணதின்ன திறுதிக்கண்ணதின்னதென்று துணியலாகாமை கொள்க. இன்னுஞ் செய்யுட்செய்த சான்றோர் பலதொடையும் பலவித கணமும் படவேண்டுமெனக் கருதிச் செய்தவற்றுட் சிலகளைத்தொன்றுகோடற்குக் காரணமின்மையு முணர்க. (௱க)

*௱௨. தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும்.

இது கட்டளையடிக்கோர் புறனடை.

இ-ள்: அறுநூற்றிருபத்தைந்துள் ஒன்றைநிறுத்தி யதனோடைறுநூற்று நான்கனையுங்கூட்டியு மதனோடு சீர்வகையடிகளையும் விகற்பத்தொடைகளையுங் கூட்டியுந் தொடுக்குந் தொடைப்பகுதிகளை விரிப்பினெண்ணிறந்து பலவாம் எ-று.

எனவே, இங்ஙனங் கூறாமல் வரையறைப்படுத்தி யிலக்கணங்கூறினார் என்றார். (௱௨)

---

*எ-து எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட தொடையினை ஆராய்ந்து விரிப்பின் வரம்பிலவாகி விரியும். எ - று. அவையாவன, மோனை எதுகை முரண் இயைபு அளபெடை என்பனவற்றின்கண் இணைகூழை முற்று மேற்கதுவாய் கீழ்க்கதுவாய் கடையிடை கடையிணை பின்கடைக்கூழை இடைப்புணர் என வேறுபடுத்துறழ்ந்து எழுத்தந்தாதி அசையந்தாதி, சீரந்தாதி, அடியந்தாதி எனவும் உயிர்மோனை உயிரெதுகை நெடில்மோனை நெடிலெதுகை வருக்கமோனை வருக்கவெதுகை இனமோனை இனவெதுகை எனவும் மூன்றாமெழுத்தொன்றெதுகை இடையிட்டெதுகை ஆசெதுகை எனவும் இவ்வாறு வருவனவற்றை மேற்கூறிய வகையினான் எழுத்து வேறுபாட்டினானுறழவும் நிரனிறையாகிய பொருள்கோள்வகையானும் ஏகபாதம் எழுகூற்றிருக்கை முதலாகிய சித்திரப்பாக்களானும் உறழவும் வரம்பிலவாகிவிரியும். அவற்றுட் சிலவருமாறு—இணையாவது முதலிருசீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது. கூழையாவது முந்துற்ற மூன்று சீரினும் வந்து இறுதிச்சீரின்வாராதது. உ-ம் "அணிமலரசோகின் றளிர்சிறங் கவற்றி" இது இணைமோனை. "பொன்னின்ன பொறிசுணங் கேந்தி" இது இணையெதுகை. "சீறடிப்பேரகலல்குலொல்குப்" இது இணைமுரண். தாஅட் டாஅமரை மஃருழக்க, இது இணையளபெடை. "மொய்த்துடன்றவழுமுகிலேபொழிலே" நிது இணை யியைபு: எனவரும். இனிக்கூழை; "அகன்றவல்கு லந்நுண் மருங்குல்" இது கூழை மோனை. "நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி" இது கூழையெதுகை. "சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்." இது கூழைமுரண்

௯௩. தொடைவகை நிலையே யாங்கென மொழிப.

"மா அத்தாண் மோஓட்டெருமை" இதுகூழையளபெடை;எனவரும். இனி மேற்கதுவாயாவது நான்கு சீரினும் இரண்டாஞ்சீரொழிய ஏனையவருவது; அவை "அரும்பிய கொங்கை யவ்வளை யமைத்தோள்" இதுமேற்கதுவாய் மோனை. பிறவுமன்ன. கீழ்க்கதுவாயாவது மூன்றாஞ் சீரொழிய ஏனையசீரின் வருவது; "அவிர்மதி யனைய திருநுத லரிவை" இது கீழ்க்கதுவாய்மோனை. பிறவுமன்ன. முற்றுவது நான்குசீருமொத்துவருவது; அது "அயில்வே லனுக்கிய வம்பலைத் தமர்த்த" எ-து. பிறவுமன்ன. அந்தாதித் தொடைக்குதாரணம்:—"உலகுடன் விளங்கு மொளிதிக ழவிர்மதி, மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை, முக்குடை நீழற் பொற்புடையாசன, மாசனத் திருந்த திருந்தொளி யறிவனை, யறிவுசே ருள்ளமோ டருந்தவம் புரிந்து, துன்னிய மாந்தரஃ தென்ப, பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே" எனவரும். இவ்வகையினான் ஒருபாட்டிறுதி மற்றைப்பாட்டின்ஆதியாக வந்தாற்கொள்க. இத்துணையுங்கூறப்பட்டன சிறப்புடைய என ஒருநிகராகக்கூறுப. இனி "மீன்றேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு" இது கடையிணை முரண். இனிப் பின் முரணாவது நாலாஞ்சீரு மிரண்டாஞ்சீரும் ஒன்றத் தொடுப்பது. அது "கொய்ம்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து" எனவரும். கடைக்கூழை முரணாவது முதற்சீரொழித்து மூன்றுசீரும் ஒத்துவருவது. உதாரணம் வந்தவழிக்கண்டு கொள்க. இடைப்புணர்முரணாவது இடையிருசீரும் ஒன்றத்தொடுப்பது. "தேம்படு குறுஞ்சுனை நெடுந்தண் மால்வரை" எனவரும். இனிமோனையெதுகை யியைபு அளபெடையினும் அவ்வழிவருவன வந்தவழிக்கண்டு கொள்க. உயிர்மோனையாவது முதலெழுத்தாகிவந்த உயிரெழுத்து மற்றையடியினும் வருவது; அது "கயலே ருண்கண் கலுழ நாளுஞ், சுடர்புனை திருநுதல் பசலை பாய" எனவரும். எதுகைக்கும் இதுதானேயாம். நெடின்மோனையாவது நெட்டெழுத்து ஒத்துவருவது. "தாமின்புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்" எனவரும். நெடிலெதுகையாவது "ஆவாவென்றே யஞ்சின ராழ்ந்தா ரொருசாரார், கூகூவென்றே கூவிளி கொண்டா ரொருசாரார்" எனவரும். இனவெதுகைமூன்றுவகை; அவை "தக்கார் தகவில ரென்ப தவரவ, ரெச்சத்தாற் காணப் படும்" இதுவல்லினவெதுகை. "அன்பீனு மார்வ முடைமை யதுவீனு,நண்பென்னு நாடாச் சிறப்பு." இதுமெல்லினவெதுகை. "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப், பொய்யா விளக்கே விளக்கு" இது இடையினவெதுகை. மோனையுமிவ்வாறு வருவன பாகுபடுத்திக்கொள்க. ஆசெதுகையாவது இடையினவொற்றிடை வரத்தொடுப்பது; அது "காய்மாண்ட தெங்கின் பழம்வீழக்க

இஃது ஐயமறுக்கின்றது.

இ-ள். சீர்வகையடியின் றொடைப்பகுதி வரையறைப்படாவேனும் அவைசெய்யுட்கணிற்கும் நிலைமை முற்கூறிய கட்டளைபோனின்று தொடைகொள்ளப் பெறுமென்று கூறுவர் புலவர்; எ-று. *

என்றது வரையறையின்றேனுந் தொடைச்சுவடுபடுமென்றவாறு. (௱௩)

௱௪ §மாத்திரைமுதலா வடிநிலை காறு

---

முகி னெற்றி, பூமாண்ட தீன்றேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து" என வரும். இனி இரண்டடியெதுகையாவது "உலகமூன்று மொருங்குடனேத்துமாண், டிலகமாயதிறலறிவன்னடி, வழுவினெஞ்சொடு வாலிதினுற்றவுந், தொழுவறொல்வினை நீங்குக வென்றியான்" எனவரும். இடையிட்டெதுகையாவது "தோடா ரெல்வளை நெகிழ நாளு, நெய்தலுண்கண் பைத லுழப்ப, வாடாப் புலர்புதைஇப் பசலையும், வைகறோறும் பையப் பெருகி, நீடாரல ரென் னீர்மனங்கொண்டார், கேளார் கொல்லோ காதலர்தோழீஇ, வாடாப்பவ்வ மறமுகந்தெழிலி, பருவஞ்செய்யாது வலனேர்புவளைஇ, யோடாமலையன் வேலிற், கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே" எனவரும். இவ்வகையினான் மோனைவருவனவுங்கொள்க. பிறதொடையும் இவ்வகையினான் வருவனவுங் கொள்க. மூன்றாமெழுத்தொன்றெதுகையாவது இரண்டாமெழுத்தொன்றாது மூன்றாமெழுத்து முதலொன்றுவது. ஏனையவுமிவ்வாறு உதாரணம் வந்தவழிக்கண்டுகொள்க. இவையெல்லாம் மேலெடுத்தோதப்பட்ட தொடைக்கட்படும் நாற்சீரொழிந்த வடிக்கண்ணும் இப்பாகுபாடெல்லாம்விரிவன வரம்பிலவாகும்." என்பது உரையாசிரியநுரை.

* "என்பது தொடைக்குரியதோர் மரபுணர்...ற்று. தொடை நிலைவகை மேற்சொல்லப்பட்ட பாகுபாட்டன எ-று. வேறுவந்துணர்த்து வார்க்கெல்லாமிடனுடைத்து எ-று; அஃதாவது எழுத்தான் வேறுபடுதலும் சொல்லான் வேறுபடுதலும் பொருளான் வேறுபடுதலும் ஆம். இத்துணையுந் தொடை கூறப்பட்டது" என்பது உரையாசிரியநுரை.

§ "மாத்திரை முதலாக அடிநிலையளவும் நோக்குதலாகியகருவி நோக்கென்று சொல்லப்படும். காரணமெனினுங் கருவியெனினுமொக்கும். நோக்குதற் காரணமென்பதனை உண்டற்றொழிலென் முற்போலக் கொள்க: அஃதாவது யாதானும் ஒன்றைத் தொடுக்குங்கால் கருதிய பொருண் முடியுங்காறும் பிறிதுநோக்காது அதுதன்னையே நோக்கி நின்றநிலை. அடிநிலைகாறும் என்றதனான் ஓரடிக்கண்ணும் பலவடிக்கண்ணும் நோக்குதல் கொள்க. அஃது ஒருநோக்காக ஓடுதலும் பலநோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்குதலும் என மூன்றுவகைப்படும். உ-ம். "அறுசுவையுண்டியமர்ந்தில்லாளூட்ட, மறுசிகைநீக்கியுண் டாரும்—வறியராச், சென்றிரப்பரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன், றுண்டாக வைக்கற்பாற்றன்று." இஃது ஒருநோக்காகியோடிற்று. "அறிமினறநெறியஞ்சுமின் கூற்றம், பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம், வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும், பெறுமின் பெரியார்வாய்ச் சொல்" இதுபல நோக்காகிவந்தது. "உலகமுவப்பவலனேர்புதிரிதரு, பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாஅங், கோவற விமைக்குஞ்சேண்விளங் கவிரொளி...... மறுவில் கற்பின் வாணுதல் கணவன், கார்கோண் முகந்த" என்றவழி ஒளி என்பது அதனயற்கிடந்ததனை நோக்காது கணவனை நோக்குதலின் இடையிட்டு நோக்கிற்று. பிறவுமன்ன" என்பது உரையாசிரியநுரை.

நோக்குதற் காரண நோக்கெனப்படுமே.

இது நிறுத்தமுறையானே நோக்குணர்த்துகின்றது. இது மேல்நாற் சொல்லாற் செய்யுஞ் செய்யுள் வழக்கியல்பின்வாய் வெள்ளைமைகலந்து நிற் றலாகா தென்பதோரிலக்கணம்.

(இ-ள்) மாத்திரை.........காறும். எ-து. மாத்திரைமுதலிய வுறுப்புக் கொண்ட வடிநிரம்புந்துணையும். நோக்கு.........காரணம். எ-து கேட்டோர் மீண்டுநோக்கிப்பயன்கோடலையுடையவாகச்செய்யுங் கருவியை. நோக்கு... படுமே. எ-துநோக்கென்று பெயர்கூறப்படுமென்றவாறு.

அடி நிறைகாறுமென்றது ஓரடிக்கணன்றிச் செய்யுள் வந்தவடி யெத் துணையானும் நின்று முடிகாறும். எ-று.

உ-ம். "முல்லை வைந்நுனை தோன்றவில்லமொடு, பைங்காற்கொன்றை மென்பிணியவிழ, விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற், பரலவ லடைய விரலை தெறிப்ப, மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக், கருவி வானங் கதழுறை சிதறிக், கார்செய் தன்றே கவின்பெறு கானங், குரங்குளைப் பொ லிந்த கொய்சுவற் புரவி, நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப், பூத்தபொங் கர்த் துணையொடு வதிந்த, தாதுண் பறவை பேதுறலஞ்சி, மணிநா வார்த்த மாண்வினைத் தேர, னுவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன், கறங்கி சை விழவி னுறந்தைக்குணாது, நெடும்பெருங் குன்றத்தமன்ற காந்தட், போ தவி ழலரினுறு, மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே." (அகம்-ச)

வைந்நுனை யென்றதனு லலருந்துணையு மெல்லென்னுது வன்மைய வாய்க் கூரிதாய் நிற்றலினரும்பியணித்தென்பது கூறிற்று. இல்லமுங்கொன் றையும் பிணி யவிழ்ந்தனவென்றது, அவையு மரமாதலிற் கடிதிற்கரியாவா கலிற் கடிதிற்கரிந்த முல்லைக்கு முன்னே மெல்லிய பிணியவிழ்ந்தமை கூ றிற்று. காய்ந்த விரும்பு முறுக்கிவிட்டவழியும் வெப்பமாறுதவாறுபோல நீர் தோய்ந்தும் வெயிலுழந்த வெப்பமின்னுந்தணிந்தில வென்பதுதோன்ற இரும்புதிரித்தன்னமருப்பென்றார். இரலை குழிதோறுந் தெளிந்து நின்ற நீர்க்கு விருந்தினவாதலிற் பலகால் நீர்பருகுதற்குப் பரலையுடைய பள்ளத் தைச்சேர நின்றது என்றதாம். இத்துணையும் பருவந்தொடங்கியதுணையே வற்புறுத்திக் கூறிற்று. புலம்பு முழுவது நீங்கிற்றென்னுது ஒருபுடை தோன்றப்புறக் கொடுத்ததென்றமையின் அதுவும்பருவந்தொடங்கியதுணை யே கூறிற்று. தொகுதியையுடைய மேகங் காற்றின் விசையான் விரைந்த கொடுந்துளியைச் சிதறிற்றெனவே புதுமைகூறிற்று. இத்துணையும் பருவ ந்தொடங்கி யணித்தென்றலின் வற்புறுத்தற்கிலேசானமை நோக்கிற்று.

கொய்யாத வுளை பெருகுதலுங் கொய்த வுளை பல்காற் கொய்யப் பெருக வேண்டுதலுங் கூறவே குதிரை மனச்செருக்குக் கூறிற்றும். அதன் கழுத்து வளையும்படி விசித்தவாரொலி நரம்பிற்கு ஓதிய நால்வகைக் குற்றத்தினு மார்ப்பென்னுங் குற்றமெய்திய நரம்போசைபோல விசைப்பவென்க. பூத்தபொங்கரென்பதனாற் பசிப்பிணிதீர நுகரும் பொருளை யதுகுறைவறக் கொடுப்ப வுண்டு மகிழ்ந்து பின்புதாம் நுகராநின்று வதியுமெனவே, யாழுமில்லற நிகழ்த்துதற்கு நுகர்தற்குமேற்ற பொருள்களைக் குறைவறப் பெற்றுப் பின்னின்பநுகர்தல்வேண்டுமென்பது கூறினாம். பொங்கரிற் பசி தீர்ந்து துணையொடுவதியும் பறவையுந் தாதையுண்கிறபறவையுங் கலக்கமுறுதற்கஞ்சி மணியொலியை வீக்கிய தேரனென்றதனாற் காதலு மருளுமுடைமையின் அவற்றின்பிரிவிற்கும்பசிக்கு மிரங்கினனெனக் கூறவேயவையவற்குநின் கண்ணும் பெருகுமென்றாளாம். வதியும்பறவைவண்டுந் தேனு மென்பதுந் தாதுண்பறவை சுரும்பென்பதும், "எங்குமோடி யிடறுஞ் சுரும்புகாள், வண்டுகாள் மகிழ் தேனினங்காள்." (சிந். குண. சஉ) எனப் பின்னுள்ளோர் கூறியவாற்றானுமுணர்க. இதனாற் சேணிடை வரவையுணர்த்தும் மணியொலியை வாரொலிகேட்கு மணிமைக்கண்ணுங் கேளாயாயினையெனவு மவ் வாரொலி தாதுண்பறவை யொலிக்கணடங்குதலின் கேட்கின்றிலையெனவுங் கூறினாளாயிற்று. வாரொலி நரம்போசை போறலின் பெருவரவாயிற்று. மாண்வினைத்தேரனென்றாள், அவன்றன் கருத்திற்கேற்ப வினைமுடித்தமை தோன்ற; எனவே வன்புறைக்கேதுவாயின தெய்வந்தங்கு மலையாதலிற் றெய்வமணநாறுங் காந்தளினுடைய போதவிழா நின்ற மலர்போல அவர் புணர்ந்தகாலத்துப் புதுமணநாறும் மரிவையெனவே யவர்பிரிந்து சேய்த்தன்றென வன்புறைக்கேதுவாயிற்று. ஆய்தொடி யென்றது, தோண்மெலிந்துழி அயலார்க்குப்புறமறைத்தல் வேண்டிச் செருகுந்தன்மையின்றி யணிந்தநிலையே கிடக்குந்தொடியென்றவாறும். இதுவும்பிரிந்துசேய்த்தன்றென்றவாறதாம். ஈண்டுமோணலமென்றது அவன் பிரிவுணர்த்திய காலத்துப் பிரிவிற்குடம்பட்டாள் போன்றுடம்படாது நின்ற நலத்தை: அது மெய்ப்பாடாம். இங்ஙனம் கோடல்நோக்கென்றுணர்க. (௱சஉ)

கoரு. ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே.

இது நிறுத்த முறையானே பாவென்னு றுப்புணர்த்துகின்றது.

இ-ள். ஆசிரியப்பாவும், வஞ்சிப்பாவும், வெண்பாவும், கலிப்பாவுமென நான்கு கூற்றது பாக்கூற்று விரி. எ-று.

வகை யென்றதனாற் றூக்கின் றொடர்ச்சியாகியஇப்பாவென்னு றுப்பு நிகழுமோசையையும் அது நிகழுஞ்செய்யுளின் வேறுபட நோக்கிச் செய்யுட்கோ ருறுப்பென்றுணர்க வென்பதூஉம் வழக்கிற்குரியன செய்யுட்கு முரியவாமென்பதூஉ மோரோர்செய்யுட்க ணொரோவுறுப்புவருமாறுமொன் றொன்றனோடு விராஅய்ப்பிறக்கும்பகுதியும் பொருள்வரையறையு மடிவரை யறையு மெல்லாங்கொள்க. பாநான்கெனவே, பாவினையுறுப்பாகவுடைய செய்யுணான்கென்னும் வரையறையு மவற்றாற் பெயர் கோடலு மச்சூத் திரங்களாற்பெறுதும். "தூக்கே பாவே" யென்பதற்குப் "பாவெனமொழி யினுந் தூக்கினது பெயரே"யென்றாரிதன்வழிநூலோரும். (உ-ம்)" உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை, யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய், துகில்பொதி பவள மேய்க்கு, மகில்படு கள்ளியங் காடிறந் தோரே." இஃ தாசிரியப்பா வுறுப்பாகிய செய்யுள். 'வசையில்புகழ் வயங்குவெண்மீன்' இது வஞ்சியுறுப்பாகிய செய்யுள். 'வாரியபெண்ணை வளர்குரும்பை வாய்த் தனபோ, லேரிய வாயினு மென்செய்வ-கூரிய, கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்,கோட்டுமண் கொள்ளா முலை.' இது வெண்பா வுறுப் பாக வந்தசெய்யுள். 'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்' இது கலியுறுப்பாக வந்த செய்யுள். இவற்றின் பாவைத்தூக்கி யடிவரையறுத்த வாறு காண்க. ஆசிரியப்பா வெண்பாவென முன் றூக்கிற்கூறியவாறன்றி ஆசிரியம் வஞ்சி யென்றுகூறினார், வழக்கிற்குஞ் செய்யுட்குமுரிய வாசிரிய மும் வெண்பாவும் போலச் செய்யுட்குரிய கலியும் வஞ்சியுஞ் சிறப்பிலவோ வென்றையுருமைக்கும் அவற்றிற்கவ் வையுறவுடைய வென்றற்கு மென்க.

கoசு. அந்நிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப.

இது பாப்பொருட்குரிமை கூறுகின்றது.

இ-ள். மேலைச்சூத்திரத்திற் றோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளிடத் துவரு மறம்பொருளின்பமென்னும் மூன்றுமுதற்பொருட்கு மந்நான்கு பாவு முரியன. எ-று.

*

மும்முதற் பொருளெனவே, அவற்றது துணைப்பொருளாகிய அறனிலை யின்மையும் பொருணிலையின்மையும் இன்பநிலை யின்மையுமடங்குமென்ப. உலகியற் பொருண்மூன்றனையு மிவையெனக்கூறி அவற்றைவிடுமாறுங் கூறவே வீடுங்கூறிற்றாம். அது கூறுதற்குரியசெய்யுளும் மேற்கொச்சக மென்று கூறுமாறுணர்க. (க0சு)

க0எ. பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பி
னாசிரி யப்பா வெண்பா வென்றாங்
காயிரு பாவினு ளடங்கு மென்ப.

க0அ. ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப.

இவை யிரண்டும் உரையியைபு நோக்கி உடன் கூறினார். இவை விரிந்தது தொகுத்தல்.

இ-ள். பாவிரி......தொகுப்பின் எ-து, பாக்கள் விரிந்த பகுதியை யுண்மைத்தன்மைநோக்கித் தொகுப்பின்; ஆசிரியப்பா...மென்ப. எ-து, ஆசிரியப்பாவும் வெண்பாவுமென்றவ்விரண்டு பாவினுளடங்கு மென்று கூறுவர். அதற்குக்காரண மென்னையெனின், ஆசிரிய......வஞ்சி. எ-து, ஆசிரியவிகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும். ஏனை-மொழிப. எ-து, ஒழிந்த வெண்பாவின் விகற்பமாகித் துள்ளலோசை விரிந்தடங்குமென்று முதனூலாசிரியர் கூறுதலின். எ-று.

(உ-ம்.) "வீடுபேறுமிகவிழைந்து நீடுநினைந்துநெடிதிருந்து" என அகவற்சீரான் வஞ்சித்தூக்குப் பிறந்தது. மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என வெண்பாவினுட் கலிப்பாப் பிறந்தது. பண்புற வென்றதனான் ஆசிரியமும் வெண்பாவு மியல்பெனவும் ஒழிந்தன விகார மெனவுங்கொள்க. ஏனையென்றதனான் மூன்றுபாவினுந் துள்ளிய கலியோசையு மொருவகையான் வெண்பா நடைத்தேயாம், இலக்கணக்கலியோசையன்றாயினு மென்பது. (க0எ, க0அ)

க0கூ. வாழ்த்தியல் வகையே நாற்பாக்கு முரித்தே.*

இது முற்கூறிய மும்முதற்பொருட்கண் அறமானது வாழ்த்துதற் பொருட்டாய் நாற்பாவிற்கு முரித்தாமென்கின்றது.

இ-ள். வாழ்த்தியலின் கூறுபாடு நான்குபாவிற்கு முரித்து எ-று.

வகை யென்றதனாற் கடவுளரும், முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடுமென்னு மறுமுறைவாழ்த்து வருதலே பெரும்

* 'நாற்பாற்கு முரித்தே' என்ற பாடம் பிழையாதல் காண்க.

பான்மைய என்பதூஉம், அங்ஙனம் வாழ்த்துங்காற் றனக்குப்பயன்படுதலும் படர்க்கைப்பொருட்குப் பயன்படுதலுமென இருவகையான்வரும் வாழ்த்துமென்பதூஉம், முன்னிலையாகவும் படர்க்கையாகவும் வரும் வாழ்த்துமென்பதூஉங்கொள்க.

(உ-ம்.) "மாநிலஞ் சேவடி யாகத் தூநீர், வளைநரல் பௌவ முடுக்கை யாக, விசும்புமெய் யாகத் திசைகை யாகப், பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக, வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய, வேத முதல்வ னென்ப, தீதற விளங்கிய திகிரி யோனே" (நற்றிணைவாழ்த்து) இது தனக்குப் பயன்பட வாழ்த்தியது. 'நீல மேனி வாலிழை யாகத், தொருவ னிருதா ணிழற்கீழ், மூவகை யுலகமு முகிழ்த்தன முறையே' (ஐங்குறுநூற்றுவாழ்த்து) இஃது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது. 'முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா, பொற்பனை வெள்ளையை யுள்ளா தொழுகின்னா, சக்கரத் தானை மறப்பின்னா வாங்கின்னா, சத்தியான் றாடொழா தார்க்கு.' (இன்னா நாற்பதுவாழ்த்து) "வானிடு வில்லின்......முடிகவென்று" (நாலடிவாழ்த்து) 'ஆறறியந் தணர்க்கு' (கலித்தொகை வாழ்த்து) இவற்றின் வேறுபாடுமுணர்க. இவற்றைக் கடவுள் வாழ்த்தென்று பெயர் கூறப்படும். 'உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து' (திருக்குறள்-உச) இது முனிவரை வாழ்த்தியது. 'ஆயிர வெள்ள வூழி, வாழி யாக வாழிய பலவே' இஃது அரசரை வாழ்த்தியது. 'விசும்பிற் றுளி வீழி னல்லான்மற் றாங்கே, பசும்புற் றலைகாண் பரிது' (திருக்குறள்-கசு) இது மழையை வாழ்த்தியது. ஒழிந்தன வந்துழிக்காண்க. இவை அறுமுறைவாழ்த்தெனப் பெயர் கூறப்படும். இயலென்றதனான் இயற்கையாய வாழ்த்திவையெனவும், மேல்வரும் புறநிலைவாழ்த்து முதலியன இயற்கையன்றி வாழ்த்தின்பாற் சார்த்தப்படுவன எனவுங்கொள்க. வஞ்சிக்குதாரணம் வந்துழிக்காண்க. * 'அங்கண் வானத் தமரரரசர்' என்பது பின்னுள்ளோர் கூறிய வாழ்த்தியல். (கoக)

---

* "அங்கண்வானத் தமரரரசரும், வெங்களியானைவேல்வேந்தரும், வடிவார்கூந்தன் மங்கையருங், கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச், சிங்கஞ் சுமந்தமணியணிமிசைக், கொங்கிவரசோகின் கொழுநிழற்கீழ்ச், செழுநீர்ப் பவளத் திரள்காம்பின், முழுமதிபுரையு முக்குடைநீழல், வெங்கண்வினைப் பகை விளிவெய்தப், பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப, வானந்தச்சுதட்டய மவையெய்த, நனந்தலையுலகுட னவைநீங்க, மந்தமாருத மருங்கசைப்ப, வந்தாதுந்துபி நின்றியம்ப, விலங்குசாமரை யெழுந்தலமர, நலங்கிளர்பூமழை நனிசொரிதர, வினிதிருந் தருணெறி நடாத்திய வாதிதன், றிருவடி பரவுதுஞ் சித்திபெறற் பொருட்டே" இது பொதுச்சீரான் வந்த குறளடி வஞ்சிப்பா" என்றார் யாப்பருங்கலவிருத்திகாரர். (கo-தூங்கலிசையன.)

௧௧0. வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.*"

இது, நான்கு பாவிற்கு முரித்தேயன்றி வரையறைப்படும் வாழ்த்து வேறுபாடு கூறுகின்றது.

இ-ள். வழி............காப்ப-எ-து, நீவழிபடும் நின்குலதெய்வம் நின்னைப் புறத்தேநின்று காப்ப. பழி.. ...சிறந்து. எ-து, இல்லறத்தாற் பொலிந்த செல்வத்தோடே நீ பெறும்புதல்வரும் அவர் பெறும்புதல்வருஞ் சிறப்பெய்தி. பொலி.........வாழ்த்தே. எ-து. எல்லீரும் நீடுவாழ்வீராமினென்று தெய்வத்தைப் புறத்தே நிறுத்தி வாழ்த்தும் வாழ்த்து. கலி...பெறாஅ. எ-து, கலிப்பாவுறுப்பாகவும் வஞ்சிப்பா வுறுப்பாகவும் பாடப்பெறா. எ-று.

எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏதுவாகிய தெய்வத்தினைப் படர்க்கையாக்கி அத்தெய்வத்தாற் பயன்பெறுநின்றுனொருவனை முன்னிலையாக்கிக் கூறலிற் புறநிலையாயிற்று. வகையென்றதனாற் கலியின் கூறாகிய பரிபாடற்குமொக்கும். (உ-ம்) 'அறிதுயி லரவணை யமர்ந்தோன் காப்ப, வருட்கடம் பூண்ட வகலாச் செல்வமொடு, நீயுநின் புதல்வருஞ் சிறந்து, வாழிய பெருமபூழியர் கோவே" 'திங்க ளிளங்கதிர்போற் றேந்திங்க ளூர்த்தேவன், மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து—திங்கட், கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப, நிலைபெற்று வாழியரோ நீ" எனவரும். இது பாவென்னுமுறுப்பிற்குப் பொருள்வரையறுத்தது. நின்னென ஒருமைகூறிப் பொலிமினெனப் பன்மை கூறியது,புதல்வரோடு கூடப் பாடுதற்கமையுமென்றற்கு.(௧௧0)

௧௧௧. வாயுறை வாழ்த்தே யவையடக் கியலே
செவியறி வுறாஉவென் றவையு மன்ன.

இதுவும் பாக்களைப் பொருண்மேல் வரையறுக்கின்றது.

இ-ள். வாயுறைவாழ்த்தும் அவையடக்கியலுஞ் செவியறிவுறூஉவுமென்றம்மூன்றும் மேலைப்புறநிலைவாழ்த்துப்போல வாழ்த்துப்பகுதியவாகலுங் கலிநிலைவகையும் வஞ்சியும் பெறாமையுமுடைய. எ-று.

அவையாமாறு மேற்கூறுதும். வாயுறையென்றது வாய்மை மொழியாகிய மருந்தெனப் பண்புத்தொகை. மருந்துபோறலின் மருந்தென்றார். ஒரு

* எனவே வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இரண்டும் புணர்ந்த மருட்பாவினும் வரப்பெறும் எ-று. என்பது உரையாசிரியருரை.

வன் சிறப்புக்கூறி வழுத்தி அவற்குப் பயன்படக்கூறலின் வாயுறைவாழ்த் தென்றார். மாட்டேற்றானே நிற்புறங்காப்ப என இடநியமித்தாற்போல இடநியமமுங்கொள்க.

அவையடக்கியலென்பது அவையடக்கியவியலெனவிரியும்; அஃது அவ ரடங்குமாற்றாற் றன்னையிழித்துக்கூறி அவரைப் புகழ்தல். அவைக்கட் டானடங்குதலாயின், அவையடங்கியலென்பது பாடமாதல் வேண்டும்.

செவியறிவுறூஉவாவது ஒருவர்க்குக் கேள்வியறிவு படுத்து அவரை வாழ்த்துதல்; என்று கூறப்பட்டவவையும் ஆசிரியத்தானும்வெண்பாவானுங் கூறப்பெறும். எ-று.

எனவே, இந்நான்கு பொருண்மேலும் ஆசிரியமும் வெண்பாவும் வரு மென்பதூஉம் ஒழிந்தன வாரா வென்பதூஉம் மருட்பா அவ்விரண்டினு லும் வருதலின் இப்பொருண்மேல் வருமென்பதூஉம் பெற்றாம். தெய்வத் தோடுபட்டமையிற் புறநிலைமுற்கூறி, முன்னிலைக்குரிமையின் வாயுறைய தன்பின்கூறி, வரையறையின்மையின்அதன்பின் அவையடக்கியல்கூறி,முன் னிலைக்கண்வருமேனும் இன்னகுணத்தையாவாயெனப் புகழ்படவாழ்த்திப் பிற்கூறுதல் வேறுபாடுடைமையின் அதன்பின் செவியறிவுறூஉக்கூறி இம் முறையேவைத்தார். இங்ஙனங்கூறிய பாவுறுப்பினை யுடைய நால்வகைச் செய்யுட்கும் இவ்வுறுப்பினதிலக்கணமெய்துவிக்க. (ககக)

ககஉ. வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.*

இது முறையானே வாயுறை கூறுகின்றது.

இ-ள். வேம்புங்...சொல். எ-து, முற்பருவத்துக் கைத்துங் கடுத்தும் பிற்பருவத்துறுதிபயக்கும் வேம்புங் கடுவும்போல வெய்யசொல்லினை. தாங்—மென்று. எ-து, ஒருதடையின்றிப் பிற்பயக்குமெனக்கருதி. ஓம் படை.. தற்றே. எ-து, பாதுகாத்த சொல்லினானே மெய்யாகஉறுத்துவது. வாயுறைவாழ்த்தே எ-து, வாயுறைவாழ்த்தாம். எ-று.

* "வாயுறை வாழ்த்தை விளங்க வாராயின் வேம்பினையுங் கடுவினையும் போல வெஞ்சொலடக்காது பிற்பயக்கு மெனக்கருதிப் பாதுகாவற் கிளவி யானே மெய்யறிவித்தல் எ-று. உ-ம் "இருங்கடற்றானையொடு பெருநிலங் கவைஇய" என்னும் பாட்டு. என்பது உரையாசிரியருரை.

*

உ-ம். 'இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநில, முடையிலை நடு வண திடைபிறர்க் கின்றித், தாமே யாண்ட வேமங் காவல, ரிடுதிரை மண லினும் பலரே சுடுபிணக், காடுபதி யாகப் போகித் தத்த, நாடுபிறர் கொள் ளச் சென்றுமாய்ந் தனரே-யதனு, னீயுங் கேண்மதி யத்தை வீயா, துடம் பொடு நின்ற வுயிரு மில்லை, மடங்க லுண்மை மாயமோ வன்றே, * முளி கள்ளி நளிசுடலை,வெள்ளில்போகிய வியலு ளாங்க,ணுப்பிலா வவிப்புழுக்கல், கைக்கொண்டு பிறக்குநோக்கா, திழிபிறப்பினோ னீயப்பெற்று, நிலங்கலனாக விலங்குபலி மிசையு, மின்னா வைகல் வாரா முன்னே, செய்ந்நீ முன்னிய வினையே, முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே'' (புறம் நசுந.) எனவரும்.

கககூ. அவையடக் கியலே யரிறபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.†

இது முறையே அவையடக்கியல் கூறுகின்றது.

இ-ள். அவை......யின். எ-து. அவையடக்கியலியலைக் குற்றமற ஆரா யின். வல்லா......னென்று—எ-து. வல்லாதவற்றைக்கூறினும் அவற்றை ஆராய்ந்து கொள்க என்று. எல்லா—தன்று. எ-து. எல்லார்க்கும் வழிபடு கிளவி கூறியதாம். எ-று.

வல்லுதல் என்பது ஒன்றுவல்லனாதல்; அஃது ஒருவன் வல்லனவற் றை வல்ல என்பவாகலின் அதனெதிர்மறை 'வல்லா' என்றாயிற்று. (உ-ம்.) "திரைத்த விரிக்கிற் றிரைப்பினு வாய்போ-லுரைத்த வுரைபோகக் கேட்டு -முரைத்த, பயின்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சத், தியன்றவா செய்வார் பலர்" இது பூதத்தாரவையடக்கு. அரிறப என்றதனாற் சிறுபான்மை யாப் பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சகத்தாற் கூறுந் தொடர்நிலைச் செய்யுட்கும் அவையடக்கியல் கொள்க. அது "கற்பா லுமிழ்ந்த மணியுங் கழு வாது விட்டா, னற்பா லழியு நகைவெண்மதி போனி றைந்த, சொற் பா லுமிழ்ந்த மறுவு மதியாற் கழூஉவிப்,பொற்பாவிழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்" (சிந்தாமணி - பாயிரம்.) எனவரும். (கககூ)

* "கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு" என்றும் பாடமுண்டு.

† "அவையடக்கியலைக் குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும் பாகுபடுத்துக் கோடல்வேண்டு மென்று எல்லாமாந்தர்க்குந் தாழ்ந்து கூறல் எ-று—எ-து உரையாசிரியருரை.

கசஅ. செவியுறைதானே,
பொங்குத லின்றிப் புரையோர் நாப்ப
ணவிதல் கடனெனச் செவியுறுத் தற்றே.*

இது முறையே செவியுறை கூறுகின்றது.

இ-ள். செவிமருந்து போறலிற் செவியுறை யென்றார். பெருக்கமின்றிப் பெரியோர்நடுவெணடங்கி வாழ்தல் கடப்பாடு எனக்கூறிச் செவிக்கு அறிவுறுத்துவது செவியறிவுறூஉ. எ-று.

தானே என்னும் ஏகாரம் பிரிநிலை; அஃது அடங்கிவாழ்வார்க்குப் புகழாதலின் வாழ்த்தின்பாற் பட்டது. அது— "வடாஅது பனிபடு நெடுவரை வடக்குந், தெனாஅ துருகெழு...........மன்னுக பெருமநீ நிலமிசையானே" (புறம்-கு) "என்று-மின்சொ லெண்பதத்தை யாகுமதி பெரும" (புறம்-சo) எனவரும். தானே என்றதனான் இன்னகுணத்தையாவாயென்று வாழ்த்திப் பின் செவியறிவுறுத்தல் கொள்க. இத்துணையும் பாவின்பெயரும், எண்ணுமுறையும், வரையறையும், அவைபொருட்குரிமையுங் கூறிற்று. (கசஅ)

கசரு. ஒத்தா ழிசையு மண்டில யாப்புங்
குட்டமு நேரடிக் கொட்டின வென்ப.†

இதுவும் பாவிலக்கணங் கூறுகின்றது.

---

* செவியறிவுறூஉவாவது பெரியோரானகுதலின்றித் தாழ்ந்தொழுகுதல் கடனெனச் செவியறிவுறுத்தல் எ-து. உரையாசிரியருரை. பேராசிரியர் பொங்குதலின்றி என்பதற்குப் பெருக்கமின்றி என்பர்.

† இது செய்யுட்கு அடிவரையறுத்தலை நுதலிற்று. ஒத்தாழிசைக்கலிக்குறுப்பாகிய ஒத்தாழிசையும், ஆசிரியப்பாவின்கண் நிலைமண்டிலம் அடிமறிமண்டிலம் என்பனவும், ஒத்தாழிசைக்குக் கொச்சகத்திற்கும் பொதுவாகிய குட்டமும் நாற்சீரடிக்கும் பொருந்தின எ-று. மேல் ஆசிரியப்பாவினீற்றயலும் இடையினும் முச்சீரும் இருசீரும் ஐஞ்சீரும் அறுசீரும் வருமென்றதனானே எல்லாவடியும் ஒத்துவருவனவுமுளவென மண்டிலங் கூறவேண்டிற்று. கலிப்பாவிற் சுரிதகம் ஈற்றடிமுச்சீரானும் ஈற்றயலடி முச்சீரானும் வருமென்றமையால் தாழிசையும் தரவும் நாற்சீரானல்லது பிறவாற்றான் வாராவெனக்கூறல் வேண்டிற்று. குட்டமெனினும் தரவெனினும் ஒக்கும். இனிக்கலிக்குறுப்பாகிய சின்னங்கள் இருசீரானும் முச்சீரானும் வருதலானும் தனிச்சொல் ஒருசீரான் வருதலானும் வேறோத வேண்டிற்று. உதாரணமுன்னர்க் காட்டுதும்" எ-து உரையாசிரியருரை.

இ-ள். ஒத்தாழிசையும் - ஒத்தாழ்ந்த வோசையும். மண்டிலயாப்பும்- மண்டலித்துவரும் யாப்பும். குட்டமும் - இருசீரும் முச்சீருமாகிக் குறைந்துவருவனவும். நேரடி...என்ப - நாற்சீரடிக்குப் பொருந்தின என்று கூறுவராசிரியர் எ-று.

என்றதனால், நாற்சீரடி மூாற்கைபடத் துள்ளிவருதலேயன்றித் தாழம்பட வோசைபெற்றும் வருமென்றார். அதுவே ஒத்தாழிசையை ஒத்து மூன்றாய்வருமென்று "ஒத்துமூன் றாகு மொத்தா ழிசையே" (கசக) என்புழிக் கூறுமாற்றா னுணர்க. இனி நாற்சீரடியாய் வருமாசிரியமும் வெண்பாவும் ஈற்றயலடியும் ஈற்றடியும் முச்சீராய்வருமென முன்விதித்தவை ஒருகால் நாற்சீராயும்வருமென்றற்கு மண்டிலயாப்பென்றார்; அது மண்டிலவாசிரியப்பாவும் மண்டிலவெண்பாவுமாம். உ-ம். * "வேரல்வேலி......பெரிதே" எனவும் † "அறையருவி யாடா டினைப்புனமுங் காவாள்......குன்று" எனவும் மண்டலித்து வந்தன. இனி நாற்சீரடியாய் வரும் ஆசிரியப்பாவும் குட்டம்பட்டுவருமென்றார். ஆசிரியப்பாவிற்குக் குட்டமாவது குறளடிவஞ்சியும் சிந்தடிவஞ்சியும் பொருந்திவருதல். வெண்பாவிற்குக் குட்டமாவது ஈற்றயலடியேயன்றி எனையடியுங் குறைதல். உ-ம். "வளித்தலைஇய தீயும், தீமுரணிய நீருமென்றாங்கு" (புறம்-உ) என நாற்சீரடிக்கு இருசீரும் முச்சீரும் பொருந்தி ஆசிரியம் வந்தது. ‡ "அட்டாலும்பால்" "வஞ்சிவெளிய" ¶ "நகா அ" $ "நாளும்" § "கறைப்பற்பெரு" × இவையே எழுதுக. இவை வெண்பாக் குட்டம்பட்டு வந்தன. (கக௫)

கககூ. குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்.@

இது முற்கூறிய குட்டம் தாவுக்கும் உரித்தென்கின்றது.

---

* வேரல் வேலி வேர்க்கோட் பலவின், சாரனட செவ்வியை யாகுமதி, யாரஃ தறிந்திசி னோரே சாரற், சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவ, ளுயிர்தவச் சிறிது காமமோபெரிதே" (குறுந்தொகை. கஅ).

† எஉ-ஆம் சூத்திர வுரையிற் காண்க.

‡ ¶ $ § × இவ்வடையாளமிட்டசெய்யுட்களை கூகூ- ஆம்பக்கத்திற்காண்க.

@எ-து "மேலதற்கோர் புறனடை யுணர்...ற்று. ஈற்றயலடி முச்சீரான் வரவும் பெறும் எ-று. எருத்தடியுடைத்து என்றதனானே ஈற்றயலடி முச்சீரெனப் பொருள்படுமோவெனின், ஆசிரியப்பாவி னீற்றயலடி முச்சீரான் வருதலானும் தூக்கியலெனவோதலானும் அவ்வாறு பொருள் படுமென்று கொள்க. உ-ம் முன்னர்க்காட்டுதும். இன்னும் குட்டமென்பதனைத்தரவு கொச்சகமாகிய கொச்சகவொருபோகிற்கும் பெயராக வழங்கினுமமையும். அவ்வழி ஒத்தாழிசை என்பதனை ஒத்தாழிசைக்கலி யென்கவெனத் தரவையுங் கூட்டிப் பொருளுரைக்கப்படும்" எ-து உரையாசிரியருரை.

இ-ள். தரவினது ஈற்றடி குறைந்துவருதலை யுடைத்தாம். எ-று.

எருத்து என்றது தரவை; அஃது " எருத்தே கொச்சகம்" (கடுரு)என்பதனானுணர்க. "மெல்லிணர்க் கொன்றையும்" (முல்லைக்கலி. ௩.) "மலிதிரையூர்ந்துதன்" (ஷை- ௪) எனவும் வரும். (ககசு)

**ககஎ.** மண்டிலங் குட்ட மென்றிவை யிரண்டுஞ்
செந்தூக் கியல வென்மனார் புலவர்.*

---

* எ-து, "மேற்சொல்லப்பட்டவற்றுள் மண்டிலங் குட்டம்என்பனவற்றுக்குரியதோ ரோசைவேறுபாடுணர்......ற்று. மண்டிலமாகக் கூறப்படும் பாவும் குட்டமெனக்கூறப்படும் பாவும் அகவலோசை யியல்பின; எ - று. உ-ம். முன்னர்க்காட்டுதும். இனி நான்குபாவின் வெண்பாவுங் கலிப்பாவும் முன்னெடுத்தோதுகின்ற ராதலினானும் ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் இத்துணையும் ஓதிய இலக்கணத்தான் முடிதலானும் அவையிற்றுக்குதாரணம் ஈண்டேகாட்டுதும். ஆசிரியப்பாவாவது, பெரும்பான்மை இயற்சீரானும் ஆசிரியவுரிச்சீரானும் ஆசிரியத்தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளையானும் அடியானும் வருவது; அவற்றுதன்மேற்கூறப்பட்ட சூத்திரத்தானுணர்க. இப்பாவிற்கீற்றெழுத்துவரையறுத்துணர்த்தாமையின் எல்லா வீறுமாம். "அகவ லிசையன வகவன் மற்றவை, யேயோ வீயா வெனவையென் றிறுமே"என வரைந்து கூறினருளராலெனின், உ-ம். "கோண்மா கொட்குமென் றஞ்சுவ லொன்னார்க், கிருவிசும்பு கொடுக்கு நெடுவேல் வானவன், கூட லன்ன குறுந்தொடியரிவை, மென்றோ ணசைஇ நாடொறும், வடிவமை யெஃகம் வலவயி னேந்திக், கைபோற் காந்தட் கடிமலர் கமழு, மைதோய் வெற்ப னல்கிருள்வருமிடம்" எனப் பிறவாற்றானும் வருதலின் ஈறுவரையறுக்கப்படா தென்றுகொள்க. இனி இவ்வாசிரியப்பாவினை அடிநிலையாற் பெயரிட்டு வழங்கப்படும். அஃதாமாறு:—ஈற்றயலடி முச்சீரான்வருவதனை நேரிசையாசிரியமென்ப. உ-ம்."முதுக்குறைந்தனளே முதுக்குறைந்தனளே,மலையனொள் வேற்கண்ணி, முலையும் வாரா முதுக்குறைந் தனளே" என வரும். இடையிடை முச்சீர்வரின் இணைக்குறளாசிரிய மென்ப. உ-ம். "நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ், சாரச் சார்ந்து தீரத் தீருஞ், சார னாடன் கேண்மை, சாரச் சாரச் சார்ந்து, தீரத் தீரத் தீர்பொல் லாவே" எனவரும். எல்லாவடியும் ஒத்து வருவதனை நிலைமண்டிலவாசிரியப்பா என்ப; இது வந்ததற்கிலக்கணம் முன்னர்க்காட்டுதும். "வேரல் வேலி......பெரிதே" எனவரும். இனி எல்லா வடியுமொத்துவரும் பாட்டினையே அடிமறிமண்டில வாசிரியப்பா வென்றும் வழங்குப; அது சொல்லதிகாரத்துள், "நிரனிறை சுண்ணம்" என்னும்

*

இது முற்கூறிய மண்டிலமுங் குட்டமும் ஆசிரியத்துக்குப் பெரும்பான்மை வருமென்கின்றது.

இ-ள். மண்டிலங்...யிரண்டும். எ - து. மண்டிலங் குட்டமென்று முற்கூறியவையிரண்டும். செந்தூக்...புலவர். எ-து. ஆசிரியப்பாவின் கண்ணே பயில நடக்குந் தன்மையையுடைய என்று கூறுவர் புலவர். எ-று.

---

சூத்திரத்தாற்கொள்க. அது "சூரல்பம்பிய சிறுகான்யாறே, சூரரமகளி ராரணங் கினரே, வார லெனினே யானஞ்சுவலே, சார லுடை நீவர லாறே" என வரும்; இதனுள், யாதானுமோரடியை முதலுமுடிவுமாக வுச்சரித்தாலும் ஓசையும் பொருளும் வழுவாமல் வருதலின் அடிமறியாயிற்று. இனி முச்சீரடி முதலாக அறுசீரடியீறாக மயங்கிய ஆசிரியத்தினை அடிமயங்காசிரியமெனவும் வெண்பாவடி மயங்கிய ஆசிரியத்தினை வெள்ளடிமயங்காசிரியமெனவும் வஞ்சியடிமயங்கிய ஆசிரியத்தினை வஞ்சி மயங்காசிரிய மெனவும் வழங்கப்படும். "வெண்டளை விரவியும்.........மொழிப"எனவும், "அறுசீரடியே...முன்னே" எனவும்,"இயற்சீர் வெள்ளடி...பெறுமே" எனவும் வரும். "ஆசிரியநடைத்தே வஞ்சி" என வேற்றுமைப்படவோதுதலானுங் கொள்க. உ-ம். "சிறிய கட்பெறினே...தவப்பலவே" இப்பதினேழடி ஆசிரியத்துள், ஏழாமடியும் பன்னிரண்டாமடியு முச்சீரான் வந்தன. மூன்றுமடி முதலாக ஆறுமடியீறாகிய நான்கடியும் பதினாலாமடியும் ஐஞ்சீரான் வந்தன. இரண்டாமடியும் பதினொன்றுமடியும் அறுசீரான் வந்தன. ஏனைய நான்குசீரான் வந்தன; இவ்வாறு வருதலின் அடிமயங்காசிரியமாயிற்று. "எறும்பியளையிற் குறும்பல் சுனைய, வுலக்க லன்ன பாறை யேறிக், கொடுவி லெயினர் பகழி மாய்க்குங்,கவலைத்தென்ப வவர்சென்றவாறே,யதுமற் றவலங் கொள்ளாது நொதுமலர்க் கலுழுமிவ் வழுங்கலூரே" இது முதலடி யியற்சீர்வெள்ளடியாதலின் வெள்ளடிவிரவிய வாசிரியமெனப்படும். "இருங்கட லுடுத்த...துறந்தே" இதனுள், "உப்பிலா வவிப்புழுக்கல்" என்பதுமுதலா மூன்றடியும் வஞ்சி. இனிவஞ்சிப்பாவாவது வஞ்சியுரிச்சீரானும் ஏனைச்சீரானும் இருசீரடியானும் வந்து தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத் தானிறுவது. இதற்கிலக்கணம், "வஞ்சிச் சீரே" "தன்பாவல்வழி" "வஞ்சிமருங்கின்" "வஞ்சியடியே" "முச்சீரானும்" "வஞ்சித்தூக்கே" என்பனவற்றுற்கொள்க. இப்பா இருசீரடிவஞ்சிப்பா முச்சீரடிவஞ்சிப்பா என இருவகைப்படும். உ-ம். "பூந்தாமரைப் போதலமரத், தேம்புனலிடை மீன்றிரிதரும்,வளவயலிடைக் களவயின்மகிழ், வினைக்கம்பலை மனைச்சிலம்பவு, மனைச்சிலம்பிய மணமுரசமும், வயற்கம்பலைக்.கயலார்ப்பவு, நாளு, மகிழின் மகிழ்தூங் கூரன், புகழ்தலாணுப் பெருவண் மையனே" இதுகுறளடியான் வந்து தனிச் சொற்பெற்று ஈற்றயலடி முச்சீரான் ஆசிரியச்சுரிதகத்தாலிற்ற இருசீரடிவஞ்சிப்பா.

எனவே, வெண்பாவின்கண் சிறுபான்மை வருமென்றவாறாயிற்று. இரண்டுமெங்ஙனம் வருதல் சான்றோர் செய்யுளுட் காண்க. (ககஎ)

ககஅ. நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின. *

---

தனிச்சொற் பெறுதலெடுத் தோதிற்றிலரேனும் உரையிற்கோடலென்பதனாற் கொள்க. "கொடிவாலன குருநிறத்தன குறுந்தாளன, வடிவாளெயிற் றழலுளையன வள்ளுகிரன,பணையெருத்தி னிணையரிமா னணையேறித், துணையில்லாத் துறவுநெறி யிறைவனாகி, யெயினடுவ ணினிதிருந்தெல்லோர்க்கும், பயில்படும்வினை பத்தியினாற் செப்பினோன் புணையெனத், திருவுறு திருவடி கைதொழ, வெருவுறு நாற்கதி வீடுநனி யெளிதே" இது முச்சீரடியான்வந்த வஞ்சிப்பா. இனி, "வஞ்சிமருங்கி னெஞ்சியவுரிய"என்றோதியதனால், வெண்பாவடியோடுங் கலியடியோடு மயங்குவன கொள்க. "நேரிழை மகளிருணங்குணுக்கவரும்"என்பதாசிரியவடி."கோழி யெறிந்தகொடுங்காற் கனங்குழை" என்பது வெண்பாவடி. "வயலாமைப்புழுக்குண்டும் வறளடம்பின் மலர்மலைந்தும்"என்பது கலியடி. இனிவெண்பா வாமாறுங் கலிப்பாவாமாறும் முன்னர்க்காட்டுதும்." எ-து. உரையாசிரியருரை.

* எ - து, வெண்பாவாமாறுணர்..... ற்று. வெண்பா யாப்பாவது: வெண்சீரானுமியற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசையானும்அளவடியானும் முச்சீரீற்றடியானும் வருவது. இவற்றிற் கிலக்கணமோதப்பட்டன. ஈண்டோதப்பட்டனவெல்லாம் அவ்வாறு வரும்; எ - று. இவையெல்லாமோசையானொக்குமாயினும் அளவானும் தொடையானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்திக் குறியிடுகின்றாரென்று கொள்க. நெடுவெண்பாட்டாவது அளவடியினெடியபாட்டு. குறுவெண்பாட்டாவது அளவடியிற் குறியபாட்டு. கைக்கிளை யென்பதூஉம் அங்கதமென்பதூஉம் பொருளாலாகியபெயர். பரிபாட்டாவது பரிந்தபாட்டு பரிபாட்டெனவரும்; அஃதாவது: ஒருவெண்பாவாக வருதலின்றிப் பலவெண்பாவுமாகிப் பலவுறுப்புக்களோடு தொடர்ந்து ஒருபாட்டாகி முற்றுப்பெறுவது. ஒத்தவையென்றது, அளவானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத சமநிலைவெண்பாக்கள்;அவையாவன:நான்கடியான் வருவன. இவ்வாசிரியர்நான்கினை அளவென்றும் ஏறினவற்றை நெடிலென்றும் குறைந்தனவற்றைக் குறள்சிந்து எனவும்வழங்குவராகலின் வேற்றுப்பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத நெடுவெண்பாட்டும்குறுவெண்பாட்டும் சமநிலைவெண்

இது வெண்பாவென்னு முறுப்பினை இன்னுழியாமெனப் பொருளு ஞ் செய்யுளும்பற்றி வரையறுக்கின்றது.

இ-ள். முற்கூறிய நெடுவெண்பாட்டுங் குறுவெண்பாட்டுங் கைக்கிளை ப்பொருண்மேல் வருஞ் செய்யுளும் பரிபாடற் செய்யுளும் வசையாகிய பொருண் மேல்வருஞ் செய்யுளுமென்ற ஐந்துந் தம்மினொத்த செய்யு ளெல்லாம் வெண்பாவென்னு முறுப்பினான் யாக்கப்படுந் தன்மையையு டைய. எ-று.

---

பாட்டும் எனமூவகையானும் வரும். குறுவெண்பாட்டாவன; இரண்டடியா னும் மூன்றடியானும் வரும். உ-ம். "அறத்தாறிதுவென வேண்டா" இஃது இரண்டடியும் ஒருதொடையான் வருதலின் குறள்வெண்பாவென்ப; 'உருவுகண்டெள்ளாமை" இது விகற்பத்தொடையான் வருதலின் விகற் பக்குறள் வெண்பா. இனி மூன்றடியான் வருவதனைச் சிந்தியல்வெண்பா என்றுவழங்கப்படும்; எ-று. உ-ம். "நறுநீல நெய்தலுங் கொட்டியுந் தீண்டிப், பிறர்நாட்டுப்பெண்டிர் முடிநாறும் பாரி,பறநாட்டுப்பெண்டி ரடி"இஃது ஒத் தொருதொடையான்வருதலின் இன்னிசைச்சிந்தியல் வெண்பா. "நற்கொற் றவாயி னறுங் குவளைத் தார்கொண்டு, சுற்றும் வண்டார்க்கப் புடைத்தாளே பொற்றேரான், பாலைநல் வாயின் மகள்" எனவும், "சுரையாழ வம்மி மிதப் பவரையனைய, யானைக்கு நீத்துமுயற்குநிலையென்ப,கானக நாடன்சுனை"என வுமிவையிடைப்பட்ட தொடையான்வருதலின் நேரிசைச் சிந்தியல் வெண் பா.இனி நான்கடியான்வருவன சமநிலைவெண்பா வெனப்படும்;அவற்றினிர ண்டா மடியினிறுதிக்கண் ஒரூஉத்தொடை பெற்றுவருவனவற்றை நேரி சைவெண்பா வெனவும் ஒரூஉத்தொடைபெறாதவற்றை இன்னிசை வெ ண்பாவெனவும் வழங்கப்படும். ஒரூஉத்தொடை வருக்க வெதுகையாகியும் வரும்; அவை யெல்லாம் உரையிற் கோடல் என்னும் தந்திர வுத்தியாற் கொள்க. அஃது "அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா...றன்று" இது நேரி சை வெண்பா. "கல்வரையேறிக் கடுவன் கனிவாழை,யெல்லுறு போழ்தி னி னிய பழங்கொண்டே, யெல்லையே யோடு மலைநாடன் கேண்மை, சொல்லச் சொரியும் வளை" இஃது இன்னிசை வெண்பா. "வளம்பட வேண்டாதார் ......மில்" இதுநான்கடியாயும் மூன்றாமடிக்கண் தனிச்சொற் பெற்றுவருத லின் நேரிசைப்பாற்படும். பிறவுமன்ன. ஐந்தடி முதலாகப் பன்னிரண்டடி காறும் வருவன பஃறொடை வெண்பா வெனப்படும். இதனுள்ளும்ஒரூஉத் தொடைபெற்று வருவனவற்றை நேரிசைப்பஃறொடை யெனவும் ஒரூஉத் தொடையின்றி வருவனவற்றை இன்னிசைப்பஃறொடையெனவும் வழங்க ப்படும். "சேற்றுக்கா னீலஞ் செருவென்ற வேந்தன்வேல், கூற்றுறழ் மொ ய்ம்பிற் பகழி பொருகய, ரேற்றந்தொழில் வடிவு தம்முட்டமொற்றம்,

எனவே, பெரும்பான்மை குறித்தபொருளை மறையாமற் செப்பிக்கூறலே அதற்கிலக்கணமாயிற்று. "முன்னையநான்கும்" (தொல். பொ. அகத்-ருஉ) என்ற அகத்திணையியற்கைக்கிளையும், "கடவுளும் வரையார்" (ஷ ஷ புறத்-உஅ) என்ற உம்மையாற்கொண்ட புறத்திணையியற்கைக்கிளையும்; அன்றிக் "காமஞ் சாலாவிளமையோள்" (ஷ ஷ அகத்-ருo) என்ற கைக்கிளையும், "கைக்கிளை வகையோடு" (ஷ ஷ புறத்-கூரு) என்ற கைக்கிளையுட் கடவுட்கைக்கிளையல் லாக்கைக்கிளையும் ஆகாவென்றுகொள்க. உ-ம். "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை, மாதர்கொன் மாலுமென் னெஞ்சு" (திருக்-கoஅக) இஃது அகப்புறக்கைக்கிளை. "களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை, யளியா னளிப்பானே போன்றான்—றெளியாது, செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தே, னென்காண்பே னென்னலால் யான்" (முத்தொள்ளாயிரம்) "மங்குன் மனங்கடைஇ மான்மாலை நின்றேற்குப், பொங்கு மருவிப் புனனாடன்-கங்குல், வருவான்கொல் வந்தென் வனமுலைமேல் வைகித், தருவான்கொன் மார்பணிந்த தார்" (ஷ) இவை* சுட்டி ஒருவர்ப் பெயர்கோடலிற் புறப்புறக் கைக்கிளை. "குடுமிப் பருவத்தே கோதை புனைந்த, நெடுமுத்தம் பூத னிருப்பப்-படுமுத்தம், புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையாய்க், கென்னை முறைய ளிவள்" இது கடவுட்கைக்கிளை.

---

வேற்றுமை யின்றியே யொத்தன மாவேட, ராற்றுக்கா லாட்டியர் கண்" இஃது இன்னிசைப்பஃறொடை. "பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவு, வென்னோடு நின்றா ரிருவ ரவருள்ளும், பொன்னோடை நன்றென்றா ளல்லளே பொன்னோடைக், கியானைநன் றென்றாளு மந்நிலையள் யானை, யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன், றிருத்தார்நன் றென்றேன் றியேன்" இஃது ஆறடியான்வந்தது. ஒருஉத்தொடைபெறுதலின் இன்னிசைப் பஃறொடைவெண்பா. "சிற்றாறு பாய்ந்தொழுகுஞ் சேயரிக் கண்ணினாய், வற்றா வளவயலும் வாய்மாண்ட வேரியு, முற்றாப் பிணிக்கு மதிலும் படுகிடங்கு, மொப்ப வுடைத்தா யொலியோவா நீர்ப்புட்க, டத்தி யிரைமேயுந் தையலாய் நின் னூர்ப்பே, ரொத்துணரும் வண்ண முரைத்தி யெனக்கூறக், கட்டலர் தாமரையு ளேழுங் கலிமான்றேர்க், கத்திருவ ரைவருங் காயா மரமொன்றும், பெற்றவழி தேர்ந்துண்ணும் பேயி னிருந்தலையும், வித்தாகா நெல்லி னிறுதியும் பெற்றக்கா, லொத்தியைந்த தெம்மூர்ப்பேர் போலென்றாள் வானவன்கை, விற்பொலிந்த வெம்புருவத் தாள்"¶ இது பன்னிரண்டடியான்வந்த இன்னிசைப்பஃறொடை

---

* "மக்க ணுதலிய வகனைந் திணையுஞ், சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்" என்பது. (தொல். பொ. அகத்-ருச).

¶ இது பெருவல்லத்தைச்சொல்லியபாட்டு என்றார் யாப்பருங்கலவிருத்தி காரர்.

இனி "முன்னையமூன்றும்" (தொல். பொ. களஎ-கச) எனக் களவியலுட் கூறிய கைக்கிளையிலும் வருமேனும் உணர்க. இனி* ஒருபொருணுதலாதுதிரிந்துவருங் கலிவெண்பாட்டும் ஈண்டுக் கூறிய நெடுவெண்பாட்டோடு ஒருபுடை யொப்புமையுடைமையின் அக்கலிவெண்பாட்டாக இக்காலத்தோர் கூறுகின்ற உலாச்செய்யுளும் புறப்புறக் கைக்கிளைப் பொருட்டாதல்† ஒன்றென முடித்தல் என்னும் உத்தியாற் கொள்க. அவ்வுலாச்செய்யுள் இரண்டுறுப்பாயும் வெண்பாவிற் கெட்டும் வருதலிற் கலிவெண்பாவின்கூறுமாறு ஆண்டுக் கூறுதும்‡. இக்காலத்து அதனை ஒருறுப்பாகச்செய்து செப்பலோசையாகவுங் கூறுவர்; அஃது துள்ளலோசைக்கே யேற்குமாறுணர்க.

பரிபாடலென்பது பரிந்து வருவது; அது கலியுறுப்புப்போலாது நான்கு பாவானும்வந்து பலவடியும்வருமாறுநிற்குமென்றுணர்க. அது மேற்காண்க. அங்கதச்செய்யுள் பண்புத்தொகை; அஃது இருவகையாதல் மேற்கூறுதும்.(கசஅ)

ககக. கைக்கிளை தானே வெண்பா வாகி
யாசிரிய வியலான் முடியவும் பெறுமே.§

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

இ-ள். கைக்கிளைதான் முன்பு வெண்பாவுறுப்பாகிப் பின் பாசிரியப்பா உறுப்பாக வரவும்பெறும். எ-று.

---

வெண்பா. ஏனையவும் வந்தவழிக் கண்டுகொள்க. இவற்றுள் "ஒருபொரு ணுதலிய வெள்ளடி யியலாற், திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே" என ஒதினமையாற் புணர்தன்முதலாகிய பொருள்களுள் யாதானும் ஒருபொருளைக்குறித்துத் திறனின்றிமுடியும் பஃறொடைவெண்பாவினைக் கலிவெண்பா எனவும், குறள்வெண்பாமுதலாகிய எல்லாவெண்பாக்களுங் கொச்சகக்கலிப்பாவாய்வரிற் கொச்சகமெனவும், யாப்பாய்வரிற் பரிபாட்டெனவும் கொள்ளப்படும். யாப்பினால் வருமெனவே இவ்வாசிரியப்பாவால் வரப்பெறா வந்ததேயாயினும் பாடாண் பாட்டுக்கைக்கிளையாகுமெனக் கொள்ளப்படும். அது "பொன்னுரமார்பிற்........ புனனுடன் பேரே வரும்" எனவருங் கைக்கிளைவெண்பா. பரிபாட்டும் அங்கதமும் தத்தஞ் சிறப்புச்சூத்திரத்துட் காட்டுதும். எ-து உரையாசிரியருரை.

* "ஒருபொரு ணுதலிய வெள்ளடி யியலாற், திரிபின்றி வருவது கலிவெண் பாட்டே" (ஷை ஷை செய்-கருச) என்பதுகொண்டு இவ்வாறுகூறுகின்றார்.

† ஒன்றினமுடித்தலெனவும் பிரதிபேதம் உண்டு.

‡ இவ்வியல் "ஒருபொரு ணுதலிய" "கலிவெண் பாட்டே" என்னுஞ் சூத்திரங்களின் உரையிற் காண்க.

§ எ-து, எய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்............ற்று. கைக்கிளைப் பொருண்மை வெண்பாவினால்வருதலன்றி முதலிரண்டடியும் வெண்பாவாகிக்

இங்ஙனம்வருவது மருட்பா ஆவதூஉம், அதுதான் அகப்புறக்கைக்கிளை யென்பதூஉம் உணர்க. உ-ம். "திருநுதல் வேரரும்புந்...........தணங்கே" (புறப்பொருள்வெண்பாமாலை-கைக்கிளை) எனவரும். (௧௩௧)

௧௨௦. பரிபா டல்லே தொகைநிலை விரியி
னிதுபா வென்னு மியனெறி யின்றிப்
பொதுவாய் நிற்றற்கு முரித்தென மொழிப.*

இது பரிபாடற்காவதோர் புறநடைகூறுகின்றது.

இ-ள். பரி... ...லே. எ-து, பரிபாடல்†முற்கூறியவாறே வெண்பாவுறுப்பான் வருதலேயன்றி. தொகை......யின். எ-து, தொகைநிலையும் விரியுமாகக் கூறிய பா நான்கனுள். இது......றி. எ-து, இது பாவென்றறியப்படும் இயல் வழியின்றி. பொது......ப. எ-து, பொதுப்படயாக்கப்பட்டுநிற்றற்கும் உரித்தென்று கூறுப. எ-று.

உம்மை இறந்தது தழீஇயிற்று. உ-ம். "மண்ணார்ந் திசைக்கு முழவொடு கொண்டதோள், கண்ணா துடன்வீழுங் காரிகை கண்டோர்க்குத், தம்மோடு நிற்குமோ நெஞ்சு." எனப் பரிபாடல் வெண்பாவுறுப்பான்வந்தது. "ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை, தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர"எ-து. வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராஅய்த் துள்ளலோசைபடவுங் கூறப்படுதலின் இதுபாவென்னு மியனெறியின்றிப் பொதுவாய்நின்றது. கலிக்கும் இதற்கும் வேறுபாடுள என்பது கலிக்கோதிய இலக்கணங்கள் இதற் கின்மையானும் ஆசிரியர் இவ்வாறு வேறுகூறலானும் பெறுதும். (௧௨௦)

---

கடையிரண்டடியும் ஆசிரியமாகி.....றனும் வரப்பெறும் எ-று. இவ்வாறுவருவதனை மருட்பாவென்ப. கருத்தினன் மேல் "மருட்பா வேனை யிருசா ரல்லது, தானிது வென்னுந் தனிமை யின்றே" (தொல். செய்-௮௩)என ஒதினரென்று கொள்க. ("தனிநிலை யின்றே" என்பதனைத் 'தனிமையின்றே'என இவர் பாடங் கொண்டாராவர்) அது "உரவொலி முந்நீ ருலாஅய்நிமிர்ந் தன்ன, கரவரு காமங் கனல—விரவெதிர, முள்ளெயி றில்ங்க முகிழ்நகை, வெள்வளை நல்காள் விடுமென் னுயிரே" (புறப்பொருள்வெண்பாமாலை - கைக்கிளை ) எனவரும். எ-து உரையாசிரியருரை.

* எ-து பரிபாடலாமாறுணர்......ற்று. பரிபாடலாவது தொகைநிலைவகையால், பா விதென்றுசொல்லப்படுமிலக்கணமின்றி எல்லாப்பாவிற்கும்பொதுவாய் நிற்றற்கும் உரித்தென்றுசொல்லுவர் எ-று. உம்மை எச்சவும்மையாகலின் இலக்கணங்கூறவும்படும். அது வருகின்றசூத்திரத்தாற் காட்டுதும். பொதுவாய்நிற்றலாவது: ஆசிரியம், வஞ்சி, வெண்பாக் கலி, மருட்பா என்றோதப்பட்ட எல்லாப்பாவினுறுப்புடைத்தாதல். எ-து உரையாசிரியருரை.

† "பரிபாட் டங்கதச் செய்யுளோ, டொத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின" என்று முற்கூறியது (தொல். செய்-௧௧௮).

கஉக. கொச்சக மராகஞ் சுரிதக மெருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்.*

இது பரிபாடற்கேற்ற உள்ளுறுப்புக் கூறுகின்றது. இவை சிறப்புறுப் பாகிய முப்பத்துநான்குமன்றி இதற்கும் கலிக்கும் உறுப்பாய்வருமென்று கொள்க.

இ-ள். கொச்சகம் என்றது "எருத்தே கொச்சகம்" (தொல்-செய். கடுரு) என்புழிக் கூறுகின்றாம். சிறப்பில்லதனைக் கொச்சையென்றுகூறும் வழக்கு நோக்கி இதனையுஞ் சிறப்பின்மையாற் கொச்சகம் என்று ரென்பாருமுளர். குறி லிணைபயின்ற அடி அராகம், சுரிதகம், அடக்கியல், எருத்து, தரவு; என்ற இவற் றோடே முற்கூறிய நான்கு:பாவையுந் தனக்குறுப்பாகக்கொண்டு காமப்பொரு ளைக் கருதிய நிலைமைத்தாய்வரும். எ-று.

தனக்கென்றதனுன் அவையல்லனபிறவுறுப்புங்கொள்வது மேற்கூறுதும். கண்ணிய என்றதனுற் கடவுள்வாழ்த்தும், மலைவிளையாட்டும், புனல்விளையாட்டும், பிறவு மெல்லாம் காமங்கண்ணியேவருமென்றுகொள்க. கொச்சகவுறுப்புப் பயிலவருதலின் முன்வைத்தார். அராகம் இடையினல்லது வாரா. எருத்தினை ஈற்றில்வைத்தது தானன்றியும் அது (பரிபாடல்) வருதலின். உ-ம். "வானொழிலி மழைவள நந்தத், தேனுர் சிமைய மலையி னிழிதந்து, நான்மாடக் கூட லெதிர்கொள்ள வானு, மருந்தாகு தீநீர் மலிதுறை மேய, விருந்தையூ ரமர்ந்த செல்வநின் றிருந்தடி, தலையுறப் பரவுதுந் தொழுதே" இது தரவு. "ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ மகிழப், பிணிநெகிழ் பிண்டி சிவந்துசேர் போங்கி, மணிநிறங் கொண்ட மலை; ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை, வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப, விண்வீற் றிருக்குங் கயமீன் விரி

* எ-து, மேற்சொல்லப்பட்ட பரிபாட்டுப் பொதுவாய்நிற்றலேயன்றிக் கொச்சகமும் அராகமும் சுரிதகமும் எருத்தமும் என்றுசொல்லப்பட்ட நான்கு முறுப்பாக் காமங்கண்ணியநிலையுடைத்தென்றவாறு.

எனவே யறத்தினும் பொருளினும் வாராதாம். "வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே" (தொல். செய்-கoக) எனச் சிறப்புவகையோதினமையான் நான்குபாவினும் பரிபாடல் வெண்பாயாப்பிற்றுதலின், கடவுள்வாழ்த்தாயும் வரப் பெறும். கொச்சகமென்பது, ஐஞ்சீரடுக்கிவருவனவும், ஆசிரியவடி, வெண்பா வடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகியலடி, என்றுசொல்லப்பட்ட அறு வகையடியானும் அமைந்தபாக்களை யுறுப்பாகவுடைத்தாகி, வெண்பாவியலாற் புலப்படத்தோன்றும். "சொற்சீ ரடியும் முடுகிய லடியு, மப்பா நிலைமைக்கு முரிய வாகும்" (தொல். செய்-கஉஉ) என்றேதலின், ஏனைநான்குங் கொச்சகப்

தகையிற், கண்வீற் றிருக்குங் கயம்; ஒருசார், காறு களோதத் திரையொடு மாறுற், றுழவி னோதை பயின்றறி விழந்து, திரிநரு மார்த்து நடுநரு மீண்டித், திருநயத் தக்க வயல்; ஒருசார், அறத்தொடு வேதம் புரைதவ முற்றி, விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித், திறத்திற் றிரிவில்லா வந்தண ரீண்டி, யறத்திற் றிரியா பதி; ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப வுடுப்பவை, மண்ணுவ மணிபொன் மலைய கடல, பண்ணிய மாசறு பயந்தரு காருகப், புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்; விழைவதை வினையவன் மென்புல வன்புலக், களம ருழவர் கடி மறுகு பிறசார்; ஆங்கு, அனையவை நல்ல நனிகூடு மின்ப, மியல்கொள நண்ணி யவை" இதுகொண்டுநிலை. வண்டுபொரேரெனவெழ வண்டுபொரேரென வெழுங் கடிப்பிகுவேரிக் கதவமிற்றேட்டிக், கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர, மின்மினி வாய்ந்த விளங்கொளி நுதலா, ரேர்களிற் றன்ன செம்ம லோருமவ், வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத், தொளியிழை யோங்கிய வொண்ணுத லோரும், புலத்தோ டளைஇப் புகழணிந் தோரு, நலத்தோ டளவு நாணணிந் தோரும், விடையோ டிகலிய விறனடை யோரு, நடைமட மேவு நாணிழந் தோருங், கடனுரை திரையிற் கருநரை யோருஞ், சுடர்மதிக் கதிரெ னத் தூநரை யோரு,மடையர் குடையர் புகையர் பூவேந்தி, யிடையொழி வின்றி யடியுறையா ரீண்டி, விளைந்தார் விளைவின் விழுப்பயன் றுய்க்குந், துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையு, மிருகேழுத்தி யணிந்த வெருத்தின், வரைகெழு செல்வ நகர்; வண்டொடு தும்பியும் வண்டொடை யாழார்ப்ப, விண்ட கடதட மேகமோ டதிரத், தண்டா வருவியோ டிருமுழா வார்ப்ப, வரியுண்ட கண்ணு ரோ டாடவர் கூடிப், புரிவுண்ட பாடலோ டாறுந் தோன்றக், கூடு நறவொடு காமமுகிழ் விரியக், கூடா நறவொடு காமம் விரும்ப, வினைய பிறவு மிவைபோல் வனவு, மனையவை யெல்லா மியையும் புனையிழைப், பூமுடி நாகர் நகர்; இவை கொச்சகம். மணிமரு டகைவகை நெறிசெறி யொலிபொலி யவிர்நிமிர் புகழ்

பொருளாகக்கொள்ளப்படும். "தரவும் போக்கும்¶ இடையிடை மிடைந்தும், ஐஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும்....,வெண்பா வியலான் வெளிபடத் தோன் றும்" (தொல்-கடுடு) "பாநிலை வகையே கொச்சகக் கலியென, நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே" (ஷை-கடுசு) என்றாராகலின். இவ்விலக்கணத்தானே பரி பாடலிற் கொச்சகமும்வரும்வழித் தரவும், சுரிதகமும் இடையிடைமிடைதலுங் கொள்க. வெண்பாவியலான் என்றதனால் தன்தளையானும் பிறதளையானும் வந்து ஈற்றடி முச்சீரான்வருவனவெல்லாங் கொள்க. அராகமென்பது, ஈற்றடி யானும் பலவடியானும் குற்றெழுத்துநெருங்கிவரத்தொடுப்பது. பெருமைக் கெல்லை,...என்னை "ஆறடி யராகந் தாமே நான்கா, யொரோவொன்று வீதலு

¶ பாட்டிடை மிடைந்தும் என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர்கொண்ட பாடம்.

கூந்தற், பிணிநெகிழ் துளையிணை தெளியொளி திகழ்பு ஞெகிழ்தெரி யரிமது மகிழ்பரிமலர் மகிழுண்கண் வாணுதலோர், மணிமயிற் றொழிலெழி லிகலிமலி திகழ்விழி திகழ்கடுங்கடாக்களிற் றண்ண லவரோ, டணிமிக வந்திறைஞ்ச வல்ல லிகப்பப், பிணிநீங்க நல்லவை யெல்லா மெய்தருந் தொல்சீர், வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக், குளவா யமர்ந்தா னகர்; இது முடுகியல். திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத், திகழ்வெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தொற்றி, மகர மறி கடல் வைத்து நிறுத்துப், புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கு, மமுது கடைய வருவயின் ஞாங்கி, மிகாஅ விருபட மாழியான் வாங்க, வுகாஅ வலியி னொரு தோ ளங்கால், மறாஅ தணிந்தோருந் தாம்; மிகாஅ மறலிய மேவலி யெல்லாம், புகாவெதிர் பூண்டாருந் தாம்; மணிபுரை மாமலை ஞாறிய ஞால, மணிபோற் பொறுத்தாருந் தாம்; பணிவில்சீர்ச், செல்விடைப் பாகன் றிரிபுரஞ் செற்றுழிக், கல்லுயர் சென்னி யிமையவின் ஞாங்கித், தொல்புகழ் தந்தாருந்தாம்; இவையுங் கொச்சகம்; அன்ன அணங்குடையருந்தலை யாயிரம் விரித்தமை காரணமாகக் கூறலிற்காமங் கூறிற்று. அராகம்வந்தன வந்துழிக் காண்க. கொச்சகங்களும் வெள்ளையாதல் பெரும்பான்மை மே லிதற்குக் கூறுகின்ற வுறுப்புக்கள் வந்துழியு மொக்கும். முடுகியலுஞ் சொற்சீரடியும் வெள்ளடியோடு தொடர்ந்துவருதலின், "காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை, யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென, வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும், வாய்மொழிப் புலவநின் றாணிழ றொழுதே" இதுவுஞ் சுற்றத்தொடுபிரியாமைகூறலிற் காமங்கண்ணிற்று. "எரி மலர் சினைஇய கண்ணை பூவை, விரிமலர் புரையு மேனியை மேனித், திரு ஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற், றிருமணி பிறங்கும் பூணை மால்வரை, யெரி திரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை, சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்து, மேவலுட் பணிந்தமை கூறு, நாவ லந்தண ரருமறைப் பொருளே" (பரிபாடல்) என ஆசிரியம் வந்தது. "நின்னொக்கும் புகழ்நிழலவை" ( ஷை ) இது வஞ்சித்தூக்கு. பிறவுமன்ன. செப்பிய என்றதனான்

---

முடையமூ விரண்டடி, யீரடி யாகு மிழிபுக் கெல்லை"என அகத்தியனா ரோதினா ராகலின். சுரிதகமென்பது, ஆசிரியவியலானாதல் வெண்பாவியலானாதல் பாட்டிற் கருதியபொருள்முடித்துநிற்பது இரண்டடியிழிபாகப் பத்தடிப்பெருமை யாக வருவதொருறுப்பு. பாட்டிற்கு முகம் தரவாதலானும், கால் சுரிதகமாதலானும் இடைநிலைப்பாட்டாகிய தாழிசையும் கொச்சகமும் அராகமும் கொள்ளக் கிடத்தலின் எருத்தென்பது கழுத்தின்புறத்துக்குப் பெயராகவேண்டுமாதலான் அவ்வுறுப்புத் தரவைச்சார்ந்துகிடத்தல்வேண்டுமென்ப; என்னை. "தரவே யெருத்த மராகங் கொச்சக, மடக்கியல் வகையொ டைந்துறுப் புடைத்தே" என்பது அகத்தியமாதலின், தரவென்பதொருறுப்புக் கோடல்வேண்டுமெனின் இவ்வாசிரியர் கொச்சகமெனவோதியவதனானே தரவும் அவ்விலக்கணத்திற்படுமென்பது பொருந்து. எருத்தென்பது இவ்வாசிரியர்கருத்தினாற் றரவென்பதுபோலும்.

அராகமின்றிவருதலுங், கொச்சக மீற்றடி குறையாதுவருதலும், அவ்வழியசைச் சீராகியிறுதலும், வெள்ளைச்சுரிதகத்தானிறுதலுங் கொள்க. "அறவோருள்ளாரரு மறைகாப்ப" வென்னும் பரிபாடலுட் "செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை, மறுமுறை யானு மியைக நெறிமாண்ட, தண்வரல் வையை யெமக்கு" என வெள்ளைச் சுரிதகத்தா னிற்றது. (கஉக)

கஉஉ. சொற்சீ ரடியு முடுகிய லடியு
மப்பா நிலைமைக் குரிய வாகும்.*

இதுவு மதற் குள்ளுறுப்புக் கூறுகின்றது.

இ-ள். சொற்சீரடியு முடுகியலடியும் பரிபாடற் குள்ளுறுப்பாய்நிற்றற் குரியவாம். எ-று.

அடியென்றதனுன் முற்கூறியவடியோடுதொடர்ந்தல்லது தாமாக வாரா வென்றுணர்த்துக. சொற்சீரடி மேற்கூறுப. முடுகியலடியாவது, வெண்பா வோடு விராய்த்தொடர்ந் தொன்றாகநிற்கும். அராகமாவது, தாமே வேறு சில வடியாய்வரும். உரியவெனவே கலிக் கித்துணை யுரியவல்லவென்றுணர்க. எனவே அராகவுறுப்புத் தேவபாணிக்கல்லது வாராவென்றுணர்க. (கஉஉ)

கஉந. கட்டுரை வகையா னெண்ணொடு புணர்ந்து
முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியு
மொழியசை யாகியும் வழியசை புணர்ந்துஞ்
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே.†

---

அப்பரிபாடற்கண்ணும் மலையும் ஆறும் வருணிக்கப்படும். அதுதான் "மலையே யாறே யூரே யவற்றி, னிலைபெறு மரபி னீங்கா தாகும்" என்றாராகலின். இனிச் சுரிதகமாகியும் பரிபாடல் முன்னும்பெறும்; என்னை. "கொச்சக வகையி னெண் ணொடு விரா, யடக்கியல் வகையி னடக்கவும் பெறுமே" எனவும் அகத்தியனு ரோதுதலின். எ-து உரையாசிரியருரை.

* என்பது மது சொற்சீரடியு முடுகியலடியும் பரிபாடற்குரிய எ-று.

சொற்சீரடியாவது வருகின்றசூத்திரத்துட் காட்டுதும். முடுகியலடியாவது ஐந்தடியானும் ஆறடியானும் ஏழடியானும் குற்றெழுத்துப்பயிலத் தொடுப்பது. எ-து உரையாசிரியருரை.

† எ-து, சொற்சீரடியாமாறுணர்......ற்று. கட்டுரையாவது பாட்டின்றித் தொடுக்கப்பட்டுவருவது. எண்ணென்பது ஈரடியாற் பலவாகியும் ஓரடியாற் பலவாகியும் வருதல். பலவருதலி னெண்ணென்றார். முற்றடியின்றி குறைவு சீர்த்தாகி எ-து. நாற்சீரடியின்றி முச்சீரடியானும்வருதல். ஒழியிசையாகிய

இது மேலெண்ணிய சொற்சீரடியாமா றுணர்த்துகின்றது.

இ-ள். கட்டு...தும். எது புணர்ந்துரைவகையாற் கூறுமாறுபோல எண்ணோடு கூடியும். முற்...யும். எ-து, தூக்குப்பட்டு முடியு மடியின்றிக் குறைவாகிய சீரையுடைத்தாகியும். ஒழி...யும். எது, வேறோரசையோடுகூடா தொழிந்து நிற்பதோ ரியலசையாகியும். வழி...தும். எது, அவ்வாறன்றி யதனோடு பல வசை புணர்க்கப்பட்டுநின்றும். சொற்...பே. எ-து, ஓரெழுத்தொருமொழி முதலிய சொற்களெல்லாந் தாமே சீர்த்தன்மைபெற ஓசைபெற்று முடிந்துநிற்றல் சொற்சீரடிக்கிலக்கணமாம். எ-று.

---

மென்பது ஒழிந்தவிசையினையுடைத்தாகியும் எ-று. எனவே, இறுதிச்சீர், ஒன்றும் இரண்டும் அசைகுறையவரப்பெறும் எ-று. வழியசைபுணர்த்தலாவது, ஒருசீரின்கண்ணே பிறிதுமொருசீர்வரத்தொடர்வதோர் அசைவரத்தொடுப்பது. சொற்சீர்த்திறுதல் எ-து, சொற்றானே சீர்த்தன்மையைப்பெற்றுநிற்றல். சொற்சீர்க்கியல்பே எ-து, இப்பெற்றியுடைத்துச் சொற்சீரினதியல்பு எ-று.

இவ்விலக்கணம் பரிபாடற்செய்யுட்கண்வரும் எ-று. உ-ம். "ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை, தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர, மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச், சேயுயர் பணைமிசை யெழில்மேழி யேந்திய, வாய்வாங்கு வளைநாஞ்சி லொருகுழை யொருவனை," தரவு.¶ "எரிமலர் சினைஇய கண்ணை பூவை, விரிமலர் புரையு மேனியை மேனித், திருஞெமிர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற், றெரிமணி பிறங்கும் பூணை மால்வரை, யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை, சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்து, மேவலுட் பணிந்தமை கூறு, நாவ லந்தண ரருமறைப் பொருளே" எருத்து. "இணைபிரி யணிதுணி பிணிமணி யெரிபுரை, விடரிடு சுடர்படர் பொலம்புனை வினைமலர்,தெரிதிர டெரியுரு ளிகன்மிகு முரண்மிகு,கடறரு மணியொடு முத்தி யார்த்த நேரணி, நெறிசெறி வெறியுறு முறல்விற லணங்கணங் குவிரற்றாரணி, துணிமணி வெயிலுற ழெழில்புக ழலர் மலர்மார்பின், னெரிவயிர் நுதிநுதி யெறிபடை யருத்துமலை யிவர்நவையினிற், றுணிபட லினமணி யியலெறு ழெழிலினிமை யிருளகல, முறுசிறகு புரியொருபுரி நாண்மலர் மலரி லகின, வளர் பருதியி ஞெளிமணி மார்பணி மணமிக நாறுருவின், விரைவளி மிகுகடு விசையுடு வுறுதலை நிரையிதழணி, வயிரிய வமரரைப் போரெழுந் துடன்றிரைத் துரைஇய, தானவர் சீரழுமிழ்புனல் பொழிபிழிந் துரமுதிர் பதிர்பலந் தொடவமர் வென்றகணை". இவைநான்கும் அராகம். "பொருவே மென்றவர் மதந்தபக் கடந்து, செரு மேம்பட்ட செயிர்தீ ரண்ண, லிருவர் தாதை யிலங்குபூண் மாஅ, றெருள நினவர வறிதல், மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிதே" இஃது ஆசிரியம். "அன்னமர பின்னையோய் நின்னை, யின்னனென் றுரைத்த லெமக்கெவ

---

¶ "அரிமலர்சினைஇய" என்பதும் பாடம்.

உ-ம். "வடவேங் கடந் தென் குமரி" (தொல்-பாயிரம்) எனவும், "அ, இ, உ, எ, ஒ வென்னு மப்பா லைந்தும்." (ஷ எழுத்து-நூல் ங) எ-ம் இவை யெண்ணொடு புணர்ந்தன. "கறையணி மிடற்றினவை கண்ணணி நுதலினவை, பிறையணி சடையி னவை" எனத் தூக்குப்பட்டுமுடியாமற் குறைந்தன. "ஒரூஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற" (கலி அஅ) ஒரூஉவென நிரையசைதானே யொழியசையாயிற்று. ஆங்கெனவருந் தனிச்சொல் வழியசைப்பாற்படும். "நொந்து, நகுவனபோ னந்தின கொம்பு" "இனைந்துள்ளி, யுகுவது போலு

னௌிது" இதுபேரெண். அருமைநற் கரியினு மார்வ நின்வயிற், பெருமையின வல்லா யாமிவண் மொழிபவை, மெல்லிய வெனாஅது வெறாஅ தல்லியற், றிருமறு மார்பநீ யருளல் வேண்டும்" இதுவு மாசிரியம். "விறன்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கு, மறனு மார்வலர்க் களியுநீ, திறனிலோர்த் திருத்திய தீதுதீர் சிறப்பின், மறனு மாற்றவர்க் கணங்கு நீ, யங்கணேர் வானத் தணிநிலாத் திகழ்தருந், திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ, யைந்தலை யுயரிய வணங்குடை யருந்திறன், மைந்துடை யொருவனு மடங்கலு நீ, நலமுழு தளைஇய புகரறு காட்சிப் புலனும் பூவினு நாற்றமு நீ, வலனுய ரெழிலியு மாக விசும்பு, நிலனு நீடிய விமையமு நீ". இவையாறும் பேரெண், 'அதனால்' தனிச்சொல். "இன்னோ ரனையை யினையை யாலென, வன்னோ யாமிவட் காணா மையிற், பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய, மன்னுயிர் முதல்வனை யாதலி, னின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே." இது சுரிதகம். "நின்னொக்கும் புகழ்நிழலவை, பொன்னொக்கு முடையவை, புள்ளின் கொடியவை புரிவளை யினவை, எள்ளுநர்க் கடந்தட்ட விகனே மியவை, மண்ணுற்ற மணிபா யுருவினவை, எண்ணிறந்த புகழவை யெழின்மார் பினவை," இவை சிற்றெண்ணும், பேரெண்ணும், இடையெண்ணும். 'ஆங்கு' தனிச்சொல். "கார்மலி சுற்றமொ டொருங்குநின் னடியுறை, யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென, வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும், ¶வாய்மொழி முதல்வநின் றாணிழ றொழுதே" இது சுரிதகம். இது கடவுள்வாழ்த்து. ஈண்டோதப்பட்ட வுறுப்புகள் மிக்குங்குறைந்தும் வருதலின் அப்பாவிற்கு இயல்பென்றுகொள்க. பிறவும் பரிபாடலகத்துக் கண்டுகொள்க. "மாநிலந் தோன்றாமை மலிபெய னிலைஇ, யேமநீ ரெழில்வான மிகுதரு போழ்தி, னாகநீண் மணிவரை நறுமலர் பலவிரைஇக், காமரு வையை கடுகின்றே கூடல், நீரணி கொண்டன்று வையை யெனவிரும்பித், தாரணி கொண்டன் றுவகை தலைக்கூடி, வாரணி கோல மொருவ ரொருவரிற், சேரணி கொண்டு நிறமொன்று வெவ்வேறு, நீரணி கொண்ட நிறையணி யங்காடி, யேரணி கொண்டா ரிகல். கைபுனை தாரினர் கண்ணிய, ரையெனு மாடைய ராடையர், கெய்யணி கூந்தலர் பித்தையர், மெய்யணி யானை மிசையார் பொய்யெனத், தங்காச் சிறப்பிற் றளிரிய லார்செல்லப், பொங்கு புரவிப் புடைபோ வோரும்

¶ "வாய்மொழிப்புலவ" என்பதும் பாடம்.

மென் னெஞ்சு" "எள்ளித் தொகுபுட, னுடுவ போலு மயில்" "கைவி லுகுவன போலும் வளை" (கலி-கூ௬) இவை முச்சீரடியான்வந்தனவு நாற்சீரடியான் வந்தனவுமாய்நின்றவாறுணர்தற்கு "நகுவன" "உகுவது" "தொகுபுடன்" "உகுவன" எனத் தொடைச்சுவடுபடுத்துக்கூறவே யவற்றின்முன்னின்ற சொற்கள் வழியசைபுணர்ந்த சொற்சீரடியாயவாறுகாண்க. இவை யிடைநிலைப்பாட்டன்றிக் கொச்சகமாகலின் வரையறையின்றித்"தொகுபுட னுடுவ போலு மயில்"என நாற்சீரடியானும்வந்தது. இவை மேலெண்ணவும்படும். இவை கலிக்கண்வருங்கா லொத்தாழிசையினும் உறழ்கலியினும் முடுகியல்வாராமையும், அவற்றுட் சொற்சீரடிவருங்காற் றனிச்சொல்லாயல்லது வாராமையுங் கொள்க.

---

பொங்குநீர், வையமுந் தேரு மமைப்போரு மெவ்வாயும், பேயெண்ணுப் புணைபடக் கூட்டிப் போகுநரும் மெய்யார்ப்பு மெய்யார மூடுவார் வையத்துக், கூடுவாரூட லொழிப்பா ருணக்குவா, ராடுவார் பாடுவா ரார்ப்பார் நகுவார்நக், கோடுவா ரோடித் தளர்வார்போ யுற்றவரைத் தேடுவா ரூர்க்குந் திரிவா ரிலராகிக், கற்றாருங் கல்லா தவருங் கயவரும், பெற்றுற் பிழையாத பெண்டிரும், பொற்றேரான் றனும் பொலம்புரிசைக் கூடலு, முற்றின்று வையைத் துறை; துறையாடுங் காதலர் தோள்புணை யாக, மறைபாடு வாரை யறியார் மயங்கிப், பிறையேர் நுதலிய ரெல்லாருந் தம்முன், னிகழு நிகழ்ச்சி யெம்பாலென் றுங்கே, யிகலுவ செல்வம் விளைத்தவட் கணடிப்பா, லகலல்கும் வையைத் துறை. காதலான் மார்பிற் கமழ்தார் புனல்வாங்கி, யேதிலாள் கூந்த லிடைக்கண்டு மற்றது, தாதா வென்றுட்குத் தானே புனறந்து, வேய்தந்த தென்னை விளைந்தமை மற்றது, நோதலே செய்தே னுணங்கியை யிச்செவ்வி, போத லுண்டாங்கொலறிந்து புனல்புணர்த்த, தொன்றே பெரிதும் வியப்பு. கயத்தக்க பூப்பெய்த காமக் கிழமை, நயத்தகு நல்லாளைக் கூடுமா கூடு, முயக்குக்குச் செவ்வி முலையு முயக்கத்து நீரு மவட்குத் துணைக்கண்ணி நீர்விட்டோய், நீயு மவட்குத் துணை. பணிவி லுயர்சிறப்பிற் பஞ்சவன் கூடல், மணியெழின் மாமேனி முத்த முறுவ, லணிபவளச் செவ்வா யறங்காவற் பெண்டிர், மணியணி தம்முரிமை மைந்தரோ டாடித், தணிவின்று வையைப் புனல். புனலோடு போயதுராய்ப் பூமாலை கொண்டை, யெனலூழ் வகையெய்திற் றென்றேற்றுக் கொண்டை, புனலூடு நாடி யறியப்பூ மாலையப்பி, நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்யுங்கா லன்புடன், கூடாமு னூடல் கொடியதிறங் கூடினள், ஊடாளோ வூர்த்தலர்வந் தூர்ந்து. எனவாங்கு ஈப்பா யடுநறுக் கொண்டதிவ் வியாறெனப், பார்ப்பா ரொழிந்தார் படிவு. மைந்தர் மகளிர் மணவிரை தூவிற்றென், றந்தணர் தூவல்லா ராறு. வையைதே மேய வழுவழுப் புற்றென், றையர்வாய் பூசுறு ராறு. விரியரி விரைநுரை கரைவழி பிழி யூர்தரும்புனல், கரையொடு கரையிடை வரையொடு கடலிடை நிரைநிரைதருந்துறை, நுரையுடன் மதகுதோ திரிதரு புனல்கரை புரளியச்செலுமழிகடல், புகுமள வளவியற்சிறை தணிவின்று வெள்ளமிகை, வரை

"சீர்கூ றாத னேரடிக் குரித்து" (தொல்-செய். சக) என்றமையின் ஒழியசை கூறாகவமையும், சீர்கூறாகக்கூறியவை யீண்டுச் சொற்சீரடியானடங்குமாறு முணர்க. இவை பரிபாடற்கே யுரித்தென்றாரேனும் இயல்பென்றதனானே யாண்டும்வருதலும் இலக்கணமென்பதுபெற்றாம். அது "பாஅ வண்ணஞ், சொற் சீர்த் தாகி நூற்பாற் பயிலும்" (தொல்-செய் உகரு) என்பதனானுமுணர்க. முடு கியலடி* முற்காட்டினாம். (கஉங)

கஉச. அங்கதந் தானே யரிறபத் தெரியிற்
செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே.†

இது முறையானே அங்கதங் கூறுகின்றது.

இ-ள். வசைச்செய்யுளைக் குற்றமறஆராயிற் செம்பொருளங்கதமும், பழி கரப்பங்கதமும் என அவ்விருவகையினையுடைத்து. எ-று.

அவை புகழ்போன்று வசையாதலும், வசைபோன்று புகழாதலும்படவரு மென்றற்கு அரிறப என்றார். "நூற்றுவர்தலைவனைக், குறங்கறுத்திட்டானும் போன்ம்" எ-து, புகழ்போன்று வசை; மாயோன்கூறவுணர்தலின் இது கரந்த தின்பாற்படும். "கொடைமடம் படுதலல்லது" (புறம்-கசஉ) என்பது வசை போன்று புகழ். இது செம்பொருளின்பாற்படும். இதனானே அங்கதமாகாதென் பது கருத்தாயிற்று. (கஉச)

பல புரையுயர் கயிறணி பயில்ெருழில், மணியணி யானைமிசை மைந்தரு மடவாரு, நிரைநிரை குழீஇ யினருடன் சென்று, குருமணி யானை யியறேர்ப் பொருநன், திருமருத முன்றுறை முற்றங் குறுகித், தெரிமருதம் பாடுப பிணிகொள் யாழ்ப் பாணர், பாடிப்பாடிப் பரவுபுன, லாடியாடி யருளியவ, ரூடியூடி யுணரப் புகன்று, கூடிக்கூடி மகிழ்புமகிழ்பு, தேடித்தேடிச் சிதைபுசிதைபு, சூடிச்சூடிக் கை தொழுதுதொழுது, மழுவொடு நின்ற மலிபுனல் வையை, விழுதகை நல்லாரு மைந்தரு மாடி, யுமிழ்வது போன்ற வின்னிகரன குணக்குச் சான்றீர் முழுவது மிச்சிலாவுண்டு, சாந்துங் கமழ்தாருங் கோதையுஞ் சுண்ணமுங், கூந்தலும் பித்தையுஞ் சேர்ந்தன பூவினு மல்லாற், சிறிதானு நீர்நிறந் தோன்றா திவ்வையை யாறு. மழைநீ ரறுகுளத்து வாய்பூசி யாடுங், கழுநீர மஞ்சனக் குங்குமக் கலங் கல்; விழுநீர்விழுநீர வன்று வையை, வெருவருங் கொல்யானை வீங்குதோண் மாறன் றருகூட லரோடுவையை வருபுன, லாடியதன்மை பொருவுங்கா, லிரு முன்னீர் வையம் படித்தென்னை யானூர்க், கொருநிலையு மாற்ற வியையா வரு மரபி, னந்தர வாயாற் றுயிரங் கண்ணினு, னிந்திரனோடுங் தகைத்து". இது காமப்பொருளாக வெண்பாமிக்குவந்த பாட்டு. எ-து உரையாசிரியருரை.

* செய்-கஉக உரைபார்க்க.

† எ-து, அங்கதச்செய்யுளாமாறுணர்......ற்று. அங்கதமாவது குற்றமற்ற வகையிற் செம்பொருளெனவும் கரந்ததெனவும் இருவகைப்படும் எ-று. அவை முன்னர்க்காட்டுதும். எ-து உரையாசிரியருரை.

கஉரு. செம்பொரு ளாவன வசையெனப் படுமே.*

இது முறையே செம்பொருளங்கதங் கூறுகின்றது.

இ-ள். வாய்கரவாது கூறப்படும்வசை செம்பொருள்வசை யெனப்படும். எ-று.

அவை வெண்பாவேயன்றிச்சிறுபான்மை மற்றைய பாக்களானும்வருமென் றுணர்க. உ-ம். "இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே, குருடேயு மன்று நின் குற்ற—மருடேயும், பாட்டு முரையும் பயிலா தனவிரண்,டோட்டைச்செவியு முள" இஃது ஏழிற்கோவை ஔவையார்பாடியது. "எம்மிகழ் வோரவர் தம் மிகழ்வோரே, எம்மிக ழா ரவர் தம்மிகழாரே, தம்புக ழிகழ்வா ரெம்புக ழிகழ்வோர், பாரி யோரி நள்ளி யெழினியாய், பேகன் பெருந்தோண் மலைய னென்றிவ்,வெழு வரு ளொருவனு மல்லை யதனு, னின்னை நோவ தெவனோ முட்டாற்குக்குறைக் கட்டிபோல, நீயு முளையே நின்னன் னோர்க்கே,யானு முளனே தீம்பா லோர்க்கே, குருகினும் வெளியோய் தேளத்துப், பருகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே" †—, கலிப்பாட்டான்வருவன வசைக் கூத்தினுட் காண்க. "அறச்சுவையிலன் வையெயிற்றினன், மயிர்மெய்யான் மாசுடையினன், பொய்வாயாற் புகழ்மேவ லன், மைகூர்ந்த மயலறிவினன், மேவருஞ் சிறப்பி னஞ்சி, யாவரும் வெரூஉ மாலிக் கோவே" (—) இது வஞ்சி. (கஉரு)

கஉசு. மொழிகரந்து மொழியினது பழிகரப் பாகும்.‡

இது பழிகரப்பங்கதங் கூறுகின்றது.

இ-ள். வசைப்பொருளினைச் செம்பொருள்படாமலிசைப்பது பழிகரப் பங்கதமாம். எ-று.

"*யென விரத்தல்" (புறம்-உ0௪) என்னும்பாட்டினுள் "தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கட, லுண்ணா ராகுவர் நீர்வேட் டோரே"என்றவழி நின்செல்வங் கடல்போற்பெரிதேனும் பிறர்க்கினிதாய் நுகரப்படாதென வசை யைச் செம்பொருளாகாமற்கூறியவாறு காண்க. புறத்தினுட் பலவு மிவ்வாறே வருவன காண்க. வெண்பாவில்வருவன வந்துழிக் காண்க. (கஉசு)

---

* எ-து, செம்பொருளாகிய அங்கதமுணர்......ற்று. செம்பொருளாகிய அங்கதம் வசையெனப் பெயர்பெறும் எ-று. எ-து உரையாசிரியருரை.

† இப்பாட்டுத் தமிழ்நாவலர்சரிதையில் ஔவையார் ஒருவனைப்பாடி அவன் இகழ்ச்சிசொல்ல அப்போது பாடிய அங்கத அகவல் என்று கூறப்பட்டுள்ளது.

‡ எ-து, மறைபொருளாகிய அங்கதமுணர்......ற்று. தான் மொழியை மறைத்துமொழியி னது பழிகரப்பெனப் பெயர்பெறும் எ-று. எ-து உரை யாசிரியருரை.

கஉஎ. செய்யுட் டாமே யிரண்டென மொழிப.*

இது மேற்கூறிய இரண்டனையுமே இவ்வகையானும் பகுக்கப்படுமென் கின்றது.

இ-ள். முற்கூறிய செய்யுட்டாம் ஒரோவொன் றிரண்டாம். எ-று.

அவை செம்பொருட்செவியுறையங்கதம், பழிகரப்புச் செவியுறையங்கதம், செம்பொருளங்கதம், பாழிகரப்பங்கதம் என நான்குகூறுபடும். எ-று.

பாய்த்துள், விக்குள் என்றாற்போலச் செய்யுளென்பதூஉந் தொழிற்பெயர்.()

கஉஅ. துகளொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயிற்
செவியுறைச் செய்யு ளதுவென மொழிப.†

இது முற்கூறிய இருவகைச் செவியுறையுங் கூறுகின்றது.

இ-ள். அரசன் றனக்குரிய அரசியலிற் றப்பியநிலையைக் கூறுங்கூற் றோடும், அவ்வறம்பொருளின்பம்பயக்கக் கூறுங்கூற்றோடும் ஒரு செய்யுட்கூடி வந்ததாயின் அது செம்பொருட்செவியுறையங்கதம், பழிகரப்புச்செவியுறை யங்கதம் எனப் பெயர்கூறப்படும். எ-று.

துகளாவது படை குடி கூழமைச்சு நட்பு அரணென்னுமிவற்றைப் பாது காவாதிருத்தல். உ-ம். "களியிரு முந்நீ ரேணி யாக, வளியிடை வழங்கா வானஞ் சூடிய, மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர், முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு, மரசெனப் படுவது நினதே பெரும, வலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன் றினு, மிலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினு, மந்தண் காவிரி வந்துகவர் பூட்டத், தோடுகொள் வேலின் றோற்றம் போல, வாடுகட் கரும்பின்‡ வெண்பூ நுடங்கு, நாடெனப் படுவது நினதே யத்தை, யாங்க, நாடுகெழு செல்வத்துப் பீடு கெழு வேந்தே,நினவ கூறுவ லெனவ கேண்மதி,யறம்புரிந் தன்ன செங்கோ னாட் டத்து,முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்,டுறைவேண்டு பொழுதிற்

---

* எ-து, மேற்சொல்லப்பட்ட செய்யுள் தொகுத்துணர்......ற்று. ஈண்டு நம்மால் வேண்டப்பட்ட செய்யுள் இரண்டுவகையென்றுசொல்லுவர் எ-று. அவை முன்னர்க்காட்டுதும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, செய்யுளைப் பாகுபடுத்துதனுதலிற்று. புகழொடும் பொருளொடும் புணர்வரின் செவியுறைச்செய்யுளென்றுகூறுவர் புலவர் எ-று. எ-து உரை யாசிரியருரை.

‡ கழைக்கரும்பின் எனவும் பிரதிபேதமுண்டு.

பெயல்பெற் றூரே, ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ, மாகவிசும்பினடுவுநின் றாங்குக், கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண் டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே கூர்வேல்வளவ, வெளிற் றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக், களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை, வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப், பொருபடை தரூஉங் கொற் றமு முழுபடை, யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே, மாரி பொய்ப்பினும் வாரி குன்றினு, மியற்கை யல்லது செயற்கையிற் றோன்றினுங், காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞால, மதுநற் கறிந்தனை யாயி னீயு, நொதும லாளர் *பொதுமொழி கொள்ளாது, பகடுபுறந் தருநர் பார மோம்பிக், குடிபுறந் தருகுவை யாயினின், னடி புறந் தருகுவ ரடங்கா தோரே" (புறம்-௩௫) இது இஞ்ஞால மியற்கையல்லது தமது செயற்கையிற்றோன்றினுங் காவலனைப்பழிக்கும்; இதனையுமுணராதே நீ வேற்றரசர்க்குப் பெறுதற்கரிதாகிய சிறந்தநாட்டினை நினதாகப்பெற்றுவைத்து அதனையழிக்கின்றது நினக்கரசியலன்றென்று அவனுட்டையழித்தமைகூறுத லில், துகளொடுபுணர்வும், குடிபுறந்தரின் நினக்குச் செல்வமுதலிய சிறத்தலிற் பகைவர் நின்னை வணங்குவரெனப் பொருளொடுபுணர்வும் வெளிப்படக்கூறலிற் செம்பொருட்செவியுறையங்கதமாயிற்று. "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி, நெடியவென் னாது சுரம்பல கடந்து, வடியா நாவின் வல்லாங்குப் பாடிப், பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி, யோம்பா துண்டு கூம்பாது வீசி, வரிசைக்கு வருந்துமிப் பரிசில்வாழ்க்கை, பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட, நண் ணார் நாண வண்ணுந் தேகி, யாங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ், மண்ணாள் செல்வ மெய்திய, நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே" (புறம் ௪௭) இது சோழன்நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புக்க இளந்தத்தனென்னும்புலவனைக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்வுழி யவ்வரசற்கு வருகின்றதுகளினைக் கோவூர்கிழார் புலப்படாமற் செய்யுள்செய்து தமதுசொல்லை யரசன்கேட்டஞ்சினனென்னும் பொருளைநிறுத்துதலிற் பழிகரப்புச்செவியுறை யங்கதமாயிற்று. இவ்வாறே புறத்தினுட் செவியுறைச்செய்யுட்கள்பலவும் வரு வனவுள. அவ்வேறுபா டுணர்ந்துகொள்க. †புகழொடும் பொருளொடும் என்று பாடமோதின் மேல் "வசையொடும் நசையொடும்" (செய்-கஉக) என்பது பொருந்தாதாம். (கஉ௮)

கஉ௯. வசையொடு நசையொடும் புணர்ந்தன் றாயி
னங்கதச் செய்யு ளென்மனார் புலவர்.‡

---

* பொய்ம்மொழி எனவும் பாடம்.

† இப்பாடம் உரையாசிரியர்கொண்டது.

‡ என்பதுமது, வசையொடும் நசையொடும்புணர்ந்தசெய்யுள் அங்கதச் செய்யுளென்னப் பெயர்பெறும் எ-று.

இஃது ஒழிந்த அங்கதச்செய்யு ளிருவகைத்தென்கின்றது.

இ-ள். வசைப்பொருளொடும் அதனாற்பிறந்த நசைப்பொருளொடும் ஒரு செய்யுட்கூடிவருமாயின் அதனைச் செம்பொருளங்கதம் பழிகரப்பங்கதம் எனப் பெயர்கூறப்படும். எ-று.

அவை இலக்கியச்செய்யுளுட்காண்க. முன்னர்ச் செம்பொருள்வசைக்குக் காட்டிய உதாரணங்களினும் இவ்வேறுபாடுய்த்துணர்க. (கஉக)

கங0. ஒத்தா ழிசைச்கலி கலிவெண் பாட்டே
கொச்சக முறழொடு கலிநால் வகைத்தே.*

இது கலிப்பாவென்னும் உறுப்பினை இத்துணைப்பகுதியினான்வருமென வகுத்து வருஞ் செய்யுள்பற்றி விரிவுகூறுகின்றது.

இ-ள். ஒத்தாழிசைக்கலியும், கலிவெண்பாவும், கொச்சகக்கலியும், உறழ் கலியுமெனக் கலி நான்குகூறுபடும். எ-று.

ஒத்தாழிசையென்னுமுறுப்புடையது ஒத்தாழிசைச்செய்யுள். அது ஒத் தாழிசையென வினைத்தொகையாம். தாழிசையென்றது கட்டளைக்கலிக்குத் தரவு மிகத்துள்ளாதுவரத் தாழிசை யதனிற் றாழம்பட்டுவருதலிற் பெற்றபெயர். இங்ஙனம்வருவது கட்டளைக்கலியே. இப்பெயர் பன்மையாற்பெற்றபெயர். இனி ஒழிந்தவுறுப்பிற் றாழிசை சிறத்தலிற் றலைமையாற்பெற்றபெயருமாம். இனிச் சீர்வகையான்வருங் கலிக்குத் தரவு மிகத் துள்ளிவரும்; இதற்குத் தாழிசை யோசை தாழம்பட்டேவருதலும், சிறுபான்மை நேரீற்றியற்சீர்வருதலுங் கொள்க. எனவே கொச்சகத்திற்காயிற் றாழிசை "நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப், புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே"(கலி-எ) எனத் தாழம்பட்டவோசையின்றி வரும். இனிக் கலிவெண்பாட்டுக் கலியாகியவெண்பாட்டு; இது முன்மொழி நிலையல். கொச்சகம் உறுப்பினாற்பெற்றபெயர். உறழ்கலி பொருளினாற்பெற்ற பெயர். தம்மினொத்துவருதலானும் சிறப்புடைமையானும் ஒத்தாழிசை முற் கூறிற்று. நூற்றைம்பதுகலியுள்ளும் ஒத்தாழிசைக்கலி அறுபத்தெட்டு வந்தது.

---

எனவே இருவாற்றானும் செய்யுள் செய்யப்பெறும் எ-று. எ-து உரை யாசிரியருரை.

* எ-து, கலிப்பாப் பாகுபடுமாறுணர்......ற்று. ஒத்தாழிசையும் கலிவெண் பாட்டும் கொச்சகமும் உறழ்கலியுமென நான்குவகைப்படுங் கலிப்பா எ-று.

அவையாமாறு முன்னர்க்காட்டுதும். "இருவயி னொத்து இமாவ்வா ஷிய் லினுக், தெரியிழை மகளிரொடு மாந்த ரிடைஉளுஉங், கலப்பெய் ரா்யிலு ன்மங்

இதற்குங் கொச்சகத்திற்கு மிடையே கலிவெண்பாக் கூறிற்று. அதுவும் இவை போல வுறுப்புக்களுடைத்தாயும்வருமென்றற்கு. தரவும்போக்குஞ் சிறுபான்மை யன்றியும்வருதலிற் கொச்சக மதன்பின்னதாயிற்று. அடக்கியலின்றியும், அடி நிமிர்ந்தும், ஒழுகிசையின்றியும்வருதலின் அதன்பின்னது உறழ்கலியாயிற்று. பரிபாடலுங் கலியாகாவோவெனின், கலியும், பரிபாடலுமென வேறாக இரண்டு தொகை வழங்குதலானும், உறுப்பின் வேறுபாட்டானும் வேறென்றுணர்க. ()

கங்க. ஒத்தா ழிசைக்கலி யிருவகைத் தாகும்.*

இது முறையே ஒத்தாழிசைப்பகுதி கூறுகின்றது.

† இ-ள். (கங்க)

கங௨. இடைநிலைப் பாட்டே தரவுபோக் கடையென
நடைபயின் றெழுகு மொன்றென மொழிப.‡

இது மேற்கூறிய ஒத்தாழிசையிரண்டினுள் ஒன்று தாழிசையுந் தரவுஞ் சுரிதகமும் தனிச்சொல்லும் என நான்குறுப்பாகப் பயின்றுவருமென்றுகூறு வர்புலவர். எ-று.

அவ்வாறுபயின்றுவருமெனவே இத்துணையேனையொன்றும் பயிலாதுவரு மென்பதாம். செய்யுளிடையேநிற்றலானும், தாழம்பட்டவோசையன்றியும் வருவனவுங்கோடற்குத் தாழிசையென்னுது பொதுவாக இடைநிலையென்றார். அவைதாமே பாட்டாயும்வருதலும், அங்ஙனம் வருங்கா லொன்றும் பலவுமாயும்

---

திணை மரபின்றி வுவாத் தோன்றிப் பொலிவொடு புணர்ந்த பொருட்டிற முடைய.........ப் படூஉங் காட்சித்தாகும்.” என்று அகத்தியனுரோதுதலிற்......... வகப்பொருளென வழங்கப்படும். எ-து உரையாசிரியருரை.

* எ-து, ஒத்தாழிசைக்கலிப்பாப் பாகுபடுமாறுணர்......ற்று. ஒத்தாழிசைக் கலிப்பா இரண்டுவகைப்படும் எ-று. அவை முன்னர்க்காட்டுதும். எ-து உரையாசிரியருரை.

† இச்சூத்திரவுரை கிடைத்த ஏடுகளி லில்லை.

‡ எ-து, இடைநிலைப்பாட்டுப் பாகுபடுமாறுணர்......ற்று. தாழிசையும் தரவும் சுரிதகமும் அடைநிலைக்கிளவியுமென நான்குறுப்பினையுடைத்து ஒத்தாழிசைக்கலி எ-று.

இவை முறையினல், தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகமெனக் கிடக்கை முறையானேகூருது, தாழிசையை முற்கூறியவதனுல் இப்பாவிற்கு ஒத்தாழிசை

வருதலுங்கோடற்குப் பாட்டென்றார். இதனைத் தரவிற்குமுற்கூறினர் ஒத்தாழிசைக்கலியென இதனாற் பெயர்பெறுதலின். இவ்வேறுபட்ட உதாரணங்கள் மேற்காட்டுதும். முகத்துத்தரப்படுதலிற் றரவு; உடம்புந்தலையும் வேறுபாடாக வழங்கும்வகையான் உடம்பிற்குக் கழுத்துப்போல் இது முன்னிற்றலின் எருத்தென்று பெயர்கூறுப. போக்கிற்கிலக்கணம் மேற்கூறுதும். முன்னும் பின்னும் பிறவுறுப்புக்களை யடையநிற்றலின் அடைநிலை. அது தனிநின்றுஞ்சீராகலிற் றனிச்சொல் எனவும்படும். எனவே தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்னும் முறையேவருதல் மரபாம். சிறுபான்மை தனிச்சொலின் றியும்வருதலிற் றனிச்சொல்லை யீற்றிற்கூறினார். (கருஉ)

கருரு. தரவே தானு நாலடி யிழிபா
 1யாறி ரண்டுயர் பேறவும் பெறுமே.*

இது தரவிற்கு அளவுகூறுகின்றது.

இ-ள். முற்கூறிய தரவிற்கு அளவுதான் நான்கடிமுதலாகப் பன்னிரண்டடிகாறும் வரப்பெறும். எ-று.

எனவே ஒன்பதுநிலம்பெற்றதாம். உம்மையாற் சிறுபான்மை பன்னிரண்டடியி னுயரவும்பெறும். அது "நீரார் செறுவி னெய்தலொடு நீடிய, நேரிதழாம்ப னிரையிதழ் 2கொய்ம்மார், சீரார் சேயிழை யொலிப்ப வோடு, மோரை மகளிரோதை வெரீஇ, யார லார்கை யஞ்சிறைத் தொழுதி, யுயர்ந்த பொங்க ருயர்மரமேறி, யமர்க்கண் மகளி ரலப்பிய வந்நோய், தமர்க்குரைப் பனபோற் பல்குரல் பயிற்று, முயர்ந்த போர்வி னொலிநல் லூரன், புதுவோர்ப் புணர்தல் வெய்யனாயின், வதுவை நாளால் வைகலு மஃதியா, னோவேன் றோழி நோவாய் நீயென, வெற்பார்த் தருவோய் கேளினித் தெற்றென" (கலி-எரு) இது பதின்மூன்றடியான்வந்தது. (கருரு)

சிறந்ததாக முற்கூறினார். முற்கூறியவழியும் இடைநிலைப்பாட்டெனக் கூறுதலின், முந்துறத் தரவென்றவாறும். இடைநிலைப்பாட்டெனினுந் தாழிசையெனினும் ஒக்கும். போக்கெனினும் சுரிதகமெனினும் அராகமெனினும் ஒக்கும். அடையெனினுந் தனிச்சொல்லெனினும் ஒக்கும். தனிச்சொல்லைப் பின்னெண்ணியவதனால் தாழிசைதோறுந் தனிச்சொல் வரவும்பெறுமென்றுகொள்க. எ-து உரையாசிரியருரை.

* எ-து, தரவிற்கு அடிவரையறையுணர்......ற்று. தரவு நாலடியிழிபாகப் பன்னிரண்டடி யுயர்வாக விடைவருமடி, எல்லாவற்றானும் வரப்பெறுமென்று கொள்க. எ-து உரையாசிரியருரை.

1 "ஆறிரண் டுயர வேறவும் படுமே" எனவும் பிரதிபேதமுண்டு.

2 கொண்மார் என்றும் பாடம்.

**கரு௪.** இடைநிலைப் பாட்டே
தரவகப் பட்ட மரபின தென்ப.*

இதுவுமது.

**இ-ள்.** தாழிசையாவது தரவிற்சுருங்கின முறைமையினையுடையது. **எ-று.**

அகப்படுதலென்பது அகம், புறமென் றிருகூறுசெய்தவழி முற்கூற்றி னுடம்படுதல். மூன் காலமூன்றும். எனவே ஆறடிமுதல் இரண்டடிகாறும் வரப் பெறுமென்றுகொள்க. மரபின் என்றதனுன் நான்கடித்தரவிற்கு நான்கடித் தாழிசைவருதலுங் கொள்க. இவற்றிற்குதாரணம் மேற்காட்டுதும். இதனானே பன்னீரடியிகந்த "நீரார் செறுவின்" (கலி-எரு) என்ற தரவிற்கும் "எல்லி வருதி யெவன்குறித் தனையெனச், சொல்லா திருப்பே னாயி னெல்லென, விரியுளைக் கலிமான் றேரொடு வந்த, விருந்தெதிர் கோடலின் மறைப்ப லென்றும்" (கலி-எரு) எனத் தரவகப்பட்டதாழிசை வருதல்கொள்க. (கருச)

**கருரு.** அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி.†

இது தனிச்சொற் கிடங்கூறுகின்றது.

**இ-ள்.** ஆங்கென்னு மசைச்சொல்லாய் அடைநிலையாகியசொல் தாழிசை யின்பின்னே பயின்றுவரும். **எ-று.**

ஆங்கென்னுமசைச்சொல் பயிலுமெனவே அல்லாதன நடைநவிலாதன பொருள்பெறவருதல் பெற்றும். ஆங்கென ஏழனுருபா யிடப்பொருளுணர்த் திற்றேல் யாண்டும் பொருளுணர்த்தல்வேண்டும். அங்ஙனம் நில்லாமையின் அசைநிலையாயிற்று. உதாரண மேற்காட்டுதும். (கருரு)

---

* எ-து, தாழிசைக்கு அடியாமாறுணர்......ற்று. தாழிசைக்கு அடி தரவிற் சுருங்கிவரும் எ-று. "தரவகப்பட்ட மரபின" என்றதனுல் அதற்கோதப்பட்ட நான்கடியின் மிகாதென்பதூஉம், மூன்றடியானும் இரண்டடியானும் வரப்பெறு மென்பதூஉங் கொள்க. வருகின்ற சூத்திரத்துள் "ஒத்து மூன்றுகு மொத் தாழிசை" எனக்கூறுதலானும், இப்பண்மைவினை ஒத்தாழிசைக்கலியெனக் கூறுதலானும், தாழிசை ஒருபொருண்மேல்மூன்றடுக்கிவருமென்றுகொள்க. எ-து உரையாசிரியருரை.

† எ-து, தனிச்சொல்லாமாறுணர்...ற்று. அடைநிலைக்கிளவியாகிய தனிச் சொல் தாழிசைப்பின்னர் நடக்கலைப் பயின்றொழுகுமெனச் சொல்லுவர்.

ஆங்கு - அசை. தாழிசைப்பின்னர்நடக்கலைப்பயின்றொழுகுமெனவே, தாழிசைமுன்னர்வருதல் சிறுபான்மையென்றுகொள்க. எ-து உரையாசிரிய ருரை.

கஙசா. போக்கியல் வகையே வைப்பெனப் படுமே.*

இஃது ஒழிந்த சுரிதகம் உணர்-ற்று.

இ-ள். போக்கினதிலக்கணப்பகுதியை வைப்பென்றுகூறப்படும். எ-று. என்றது போக்குதலும் வைத்தலுமென்னும் இரண்டிலக்கணமுடைத்து. எ-று. செய்யுள் பிறிதொன்றினையவாவாமற் கடைபோகச்செய்தலிற் போக்கெனவும், முற்கூறிய தரவு தாழிசைகளிற் பொருள்களைக்கொண்டு தொகுத்துவைத்தலின் வைப்பெனவும்படும். எ-று. இதனை அடக்கிய லென்றும், வாரமென்று மேற்கூறுவார்; ஆண் டப்பொருள்களுமுணர்க. ()

கஙஎ. தரவிய லொத்து மதனகப் படுமே
புரைதீ ரிறுதி நிலையுரைத் தன்றே.*

இதுவுஞ் சுரிதகத்தெல்லைகூறுகின்றது.

இ-ள். சிறுபான்மை தரவுகளோடொத்தும், உம்மையான் ஏறியும் வருமாயினும் பெரும்பான்மை தரவின்பாகம்பெறுதலை யிலக்கணமாக வுடைத்தாய்வரும். அங்ஙனம்வருமிடத்துப் பெரும்பான்மையும் இடைநிலைப்பாட்டின்பொருளை முடிவுகாட்டியேநிற்கும். எ-று.

---

* எ-து, சுரிதகமாமாறுணர்...ற்று. சுரிதகமென்பது வைப்பெனவும் படும். அது தரவோடொத்த வளவிற்றாகியும், அதனிற் குறைந்தவளவிற்றாகியும் குற்றந்தீர்ந்தபாட்டின் இறுதிநிலையுரைத்ததென்றவாறு.

தரவியலொத்தலாவது சிறுமை நான்கடி பெருமை பன்னிரண்டடியாகி வருதல். அதனகப்படுதலாவது சிறுமை மூன்றடியானும் இரண்டடியானும் வருதல். இச்சூத்திரங்களோதினமுறையானேவருமென்று கொள்க. மேல் துள்ளலோசைத்தாகி உரைமுதலாகிய வெண்பாவுரிச் சீர்மிக்கு, சுரிதகம், ஆசிரியத்தானுதல் வெண்பாவானுதல் வருமெனவுங் கூறிய விலக்கணங்களு மறிந்துகொள்க. உதா-“பாடின்றிப் பசந்தகண் பைதல் பனிமல்க, வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர, வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி, நாடுங்கா ணினைப்பதொன் றுடையேன் மன் னதுவுந்தான்” இது நான்கடித் தரவு. “தொன்னலந் தொலைபீங்கி யாந் துயருழப்பத் துறந்துளார், துன்னிநங் காதலர் துறந்தேகு மாரிடைக், கன்மிசை யுருப்பேறக் கனையெரி சிதறென, விண்ணிசை யெழிலியை யிரக்கவு மியைவதோ; புனையிழா யீங்குநாம் புறப்பொருள் வெஃகுமுன், முனையென் னார் காதலர் முன்னிய வாற்றிடைச், சினைவாடச் சினக்குநின் சினந்தணிந் தீகெனக், கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ; ஒளியிழா யீங்குநாந் துயர்கூரப் பொருள்வயின், னளியொரீஇக் காதல ரகன்றேகு மாரிடை,

இயலென்றதனாற் றாவின்பொருள்கொண்டு முடியவும்பெறுமென்று கொள்க. சிறுமைக் கெல்லைகூறாமையின் ஆசிரியத்திற்குக்கூறிய மூன்றடியே சிறுமையாம். அகப்படுமெனவே தாவின்பாகமாகிய ஆறடியே உயர்விற்கெல்லையென்பதூஉம், இழிவிற் கெல்லைகூறாமையிற் பன்னீரடித்தாவிற்காயினு மூன்றடியான்வருமென்பதூஉம், அடிவரையிறந்த தாவிற்கு மிவ்வாறேவருமென்பதூஉங் கொள்க. வெள்ளைச்சுரிதகத்திற்கும் இஃதொக்கும். ஒத்து மென்றலின் ஆசிரியம் மண்டிலமாய்வருதலுங் கொள்க. இறுதியென்றது இடைநிலைப்பாட்டை. உ-ம். தரவு மிகத்துள்ளாமற் றாழிசை தாழம்பட்டுவந்த கட்டளைக்கலி வந்துழிக்காண்க. "வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற், சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய, ரற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங், கொள்ளும் பொருளிலராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வெளவலிற், புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை, வெள்வேல் வலத்திற் பொருடல் வேட்கையி, னுள்ளினி ரென்ப தறிந்தன ளென்றோழி; காழ்விரி கவையாரமீவரு மிளமுலை, போழ்திடைப் படாஅமை முயங்கியு மமையாரென், றோழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர், சூழ்வகை யெவன்கொ லறியே னென்னும்; முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென், றொள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவ, ருள்ளுவ தெவன்கொ லறியே னென்னும்; நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகத்தங், கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென், றொண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவ, ரெண்ணுத லெவன்கொ லறியே னென்னும்; ஆங்கு, கழிபெரு நல்கலொன் றுடைத்தென வென்றோழி, யழிவொடு கலங்கிய வெவ்வத்த ளொருநாணீர், பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ,

---

முளியரின் மூழ்கிய வெம்மைதீர்ந் தேகென, வளிதருஞ் செல்வனை வாழ்த்தவ மியைவதோ;" இவை தாழிசை. 'எனவாங்கு' தனிச்சொல். "செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன, தெய்வத்திற் றிறனோக்கித் தெருமா றேமொழி, வறனோடின் வையத்து வான்றருங் கற்பினு, ணிறனோடிப் பசப்பூர்த லுண்டென, வறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே" (கலி கரு-வதுபாலை) இது சுரிதகம். இது நான்கடித் தரவும் நான்கடியான் மூன்று தாழிசையும் தனிச்சொல்லும் ஐந்தடிச்சுரிதகமும் வந்த ஒத்தாழிசைக்கலிப்பா வென்ப; இதனை நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவென்ப. "வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா, னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த, தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாப்போற், பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர, வானாது கலுழ்கொண்ட வுலகத்து மற்றவ, னேனையா னளிப்பான்போ லிகலிருண் மதிசீப்பக், குடைநிழ லாண்டார்க்கு மாளிய வருவார்க்கு,

வொழிகினிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே" (கலி-ச) இது மிகவுந் துள்ளிவந்த எட்டடித்தரவுந் தாழம்பட்ட வோசைபெற்றுத் தரவகப்பட்ட மாபினதாகிய நான்கடித்தாழிசைமூன்றும் ஆங்கென்னு மசைநிலைத்தனிச் சொல்லுந் தரவின்பாகம்பெற்று நான்கடியா யிறுதிநிலையுரைத்த சுரிதகமும் பெற்றுத் தரவினுந் தாழிசையினு நேரீற்றியற்சீரும்பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலி. நேரீற்றியற்சீர் கட்டளைக்குவாராமையுணர்க. "ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமறைப், பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய, நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை, வாலெக்கர் வாய் சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;ஊரல ரெடுத்தரற்ற வுள்ளாய்நீ துறத்தலிற், கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற், காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே, நீரல ரணிகொண்ட நிறைநுத லல்லாக்கால்; இணைபிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலிற், புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற், றுணையாருட் டகைபெற்ற தொன்னல மிழந்துநீ, யணிவனப் பிழந்த னணைமென்றோ ளல்லாக்கால்; இன்றிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலி, னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மன், வென்றவே னுதியேய்க்கும் விறனல னிழந்துநீ, நின்றநீ ருக்கலுழு நெடும்பெருங்க ணல்லாக்கால்; அதனால், பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தசொல், லரிதென்று ணிந்தவ ளாய்நலம் பெயர்தரப், புரியுளை நெடுமான்றேர் கடவுபு, விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே" (கலி-கஉச) இது நாலடி யிழிபாகிய நான்கடித்தரவிற்கு மா பென்ற இழிசாற்கொண்ட நான்கடித்தாழிசை தம்முள் அளவொத்து வந்து, நடைநவிலாது பொருள்பெற்ற தனிச்சொல்லும்பெற்றுத் தரவிய லொத்து இறுதிநிலையுரைத்த சுரிதகமும்பெற்ற வொத்தாழிசைக்கலிப்பா. "பாஅலஞ்செவிப் பணைத்தாண் மாநிரை, மாஅல் யானையொடு மறவர் மயங்கித், தூறதர் பட்ட வாறுமயங் கருஞ்சுர, நிறந்துநீர் செய்யும் பொருளி

---

னிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை; மாலைநீ, தூவறத் துறந் தாரை நினைத்தலிற் கயம்பூத்த, போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா, யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட, காத லர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகலாய்; மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப், பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய், செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும், பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்; மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப், பகைமிக்க நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய், தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி முல்லை, முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்;" தாழிசை. 'ஆங்க' தனிச்சொல். "மாலையு மலரு நோனு தெம்வயின், னெஞ்சமு மஞ்சுமற் றில்ல வஞ்சி, யுள்ளா தமைந்தோ ருள்ள,

னும் யாமுமக்குச், சிறந்தன மாத லறிந்தனி ராயி, னீளிரு முந்நீர் வளிகலன் வெளவலி, னாள்வினைக் கழிந்தோர் போற லல்லதைக், கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவ, னாளுங் கோண்மீன் றகைத்தருந் தகைமே; கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபின், புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ; ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற், பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ; ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு, ணீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ; எனவாங்கு, பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட், டெந்நாளோ நெடுந்தகாய்நீ செல்வ, தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே” (கலி-௫) இது சிறுமைக்கெல்லைகூறிய ஈரடித்தாழிசையும், ஆசிரியத்திற்குக்கூறிய சிறுமையான்வந்த மூன்றடிச்சுரிதகமும் பெற்றது. “இமயவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தண, னுமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக, வையிரு தலையி னரக்கர் கோமான், றொடிபொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை, யெடுக்கல் செல்லா துழப்பவன் போல, வுறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக், கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை, நீடிரு விடரகஞ் சிலம்பக் கூஉய்த்தன், கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்”(கலி-௩௮)என்ற விதன் உள்ளுறையுவமத்தாற் றலைவி விழுமங்கூறியதனையு முடன்கொண்டு, சுரிதகத்து “நின்னுறு விழுமங் கூறக் கேட்டு, வருமே தோழி நன்மலை நாடன், வேங்கை விரிவிட நோக்கி, வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே” (கலி-௩௮) எனக் கூறுதலின் இயலென்ற இலேசாற் றரவின் பொருள்கொண்டிற்றசுரிதகம்வந்தது. “பாடின்றிப் பசந்தகண் பைதல் பனிமல்க, வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர, வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி, நாடுங்கா ளினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்” (கலி-௧௬) என்னு நான்கடித்தரவிற்குச் “செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன, தெய்வத்துத் திறனோக்கித் தெருமர

---

முள்ளி னுள்ள முள்ளு வந்தே” (கலி, க-வது நெய்தல்-1) சுரிதகம். இது தாழிசைதோறுந் தனிச்சொற்பெற்றுவந்த நேரிசையொத்தாழிசைக் கலிப்பா. “வயக்குறு மண்டிலம்” என்னுங் கலிப்பாவில், தரவு பன்னிரண் டடியாய்வந்தது. “இலங்கொளி மருப்பிற் கைம்மா” என்னுங் கலியுள் இரண்டடியாற் றாழிசை வந்தன. “உண்கடன் வழிமொழிந்து” என்னுங் கலிப்பாவில், தாழிசை மூன்றடியான்வந்தது. ஆறறியந்தணர் என்பதும் கடவுட்பாட்டியலுரை மூன்றடிச்சுரிதகம் வந்தது. இனி ஏனையடிகளான் வருந் தரவுந் தாழிசையுஞ் சுரிதகமுங் கலித்தொகையுட் கண்டுகொள்க. எ-து. உரையாசிரியருரை.

றேமொழி, வறனோடின் வையத்து வான்றருங் கற்பினா, ணிறனோடிப் பசப்பூர்த லுண்டென, வறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே" (கலி-கசு) எனச் சுரிதகம் ஐந்தடியான்மிக்குவந்தது. இது ஒத்தும் என்ற வும்மையாற் கொண்டது. "அரிதே தோழிநா ணிறுப்பாமென் றுணர்தல், பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே, பலவே யாமம் பையுளு முடைய, சிலவே யெம்மோ டுசாவு மன்றி, யழலவிர் வயங்கிழை யொலிப்ப வுலமந், தெழிலெஞ்சு மயிலி னடுங்கிச் சேக்கையு, ளழலா கின்றவர் நக்கதன் பயனே; மெல்லிய நெஞ்சு பையுள்கூ றத்தஞ், சொல்லினா னெய்தமை யல்ல தவர் நம்மை, வல்லவன் றைஇய வாக்கமை கடுவிசை, வில்லினா னெய்தலோ விலர்ம னாயிழை, வில்லினுங் கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய்; நகைமுதலாக நட்பினு ளெழுந்த, தகைமையி னலித லல்ல தவர்நம்மை, வகைமையி னெழுந்த தொன்முரண் முதலாம்,பகைமையி னலிதலோ விலர்ம னாயிழை, பகைமையிற் கடிதவர் தகைமையி னலியுநோய்; நீயல னென்றென்னை யன்பினிற் பிணித்ததஞ், சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப், பாயிரு ணீக்கு நோய்தபு நெடுஞ்சுடர், தீயினாற் சுடுவதோ விலர்ம னாயிழை, தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்; ஆங்க, அன்னர் காதல ராக வவர்நமக், கின்னுயிர் போத்தரு மருத்துவ ராயின், யாங்கா வதுகொ றோழி யெனையதூஉந், தாங்குதல் வலித்தன் றாயி, னீங்கரி துற்றன் றவருறீஇய நோயே" (கலி-கஙஎ) இது இடைநிலைப்பாட்டென் றதனாற் றாழம்பட்டவோசையின் றிவந்த இடைநிலைப்பாட் டைந்தடியான்வந்தது. ஆறடியான்வருவன வந்தவழிக்காண்க. "இன்னரிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற், பின்னோடு கெழீஇய தடவாலல்கு, லுண்வரி வாட வாராது விடுவாய், தண்ணந் துறைவ தகாஅய் காணீ"(கலி-கஉரு)இதுவுந்தாழிசையல்லாவிடைநிலைப்பாட்டு. "காணமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான், மாணாநோய் செய்தான்கட் சென்றாய் மற் றவனைநீ, காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே" (கலி-கஉங) இது தாழிசையெனவும், இடைநிலைப்பாட்டெனவும்படும். இடைநிலைப் பாட்டாய்த் தனியேவருவன கொச்சகமென் றுணர்க. வெள்ளைச்சுரிதகத் தான்முடிவனவும் வந்துழிக்காண்க. புரைநீரென் றதனாற் றாழிசைப்பொருளேயன்றி அவற்றோடு போக்கியற்பொருளுங்கொண்டு 1புடைபடாதுவருவனவுங் கொள்க. அது "அரசினா நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ" (கலி-அ) என முடித்தலின் "நச்சல் கூடாது பெரும விச்செல, வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின் று" (ஷை) எனத்தாழிசைப்பொருளைக்கொண்டு பின்பு "மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பி, நன்னகர் விழையக் கூடி, னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே" (ஷை) எனப் போக்கியற் பொருளையும் கொண் டிற்றது. பிறவுமன்ன. (கரு௪)

1 புரைபடாது எனவும் பிரதிபேதமுண்டு.

**கருஅ.** எனை யொன்றே,
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே.*

இஃது ஒழிந்த ஒத்தாழிசை கூறுகின்றது.

**இ-ள்.** ஒழிந்த வொத்தாழிசை முன்னிலையிடமாகத் தேவரைப்பரா வும்பொருண்மைத்து. **எ-று.**

எனவே இது அகநிலைச்செய்யுளாகாதென்பதூஉம், முன்னைய தகநிலைச் செய்யுளாமென்பதூஉம் பெறுதும். முன்னிலைக்கண்வருமெனவே முன் நாற்பாவிற்குமுரித்தென்ற வாழ்த்தியல் நான்குகலிக்கு மெய்திற்றேனும் அவை தேவபாணியாகாவாயிற்று. அங்ஙனம்பராவினும் படர்க்கையாயவழிப் புறநிலைவாழ்த்தேயாம். பாட்டுடைத்தலைவனைக்கூட்டிக்கூறினு மென்பது பெறுதும்; எனவே பாட்டுடைத்தலைவனைக்கூட்டினுங் கூட்டாவிடினுந் தேவர்ப்பராயிற்றேயாம்;முன்னிலையென்பதுபெற்றாம்.கலிப்பாப் புலனெறி வழக்கேயன்றிச் சிறுபான்மை கடவுட்பாராஅயபொருளானும்வருமென்றற் கிதனைப் பிற்கூறினார். தெய்வந்தானே நின்னை யான்காப்பேனெனக்கூறும் உலகவழக்கமாகாதென்றுணர்க. (கருஅ)

**கருகூ.** அதுவே,
வண்ணக மொருபோ கெனவிரு வகைத்தே.†

இஃது எனையொன்றென்றபெயர்த்தாழிசை,வண்ணகவொத்தாழிசை யெனவும், ஒருபோகெனவு மிரண்டாம். எ-று.

இதன்பயன் இவற்றுள் ஒருபோகு ஒத்தாழிசையெனப் பெயர்கூறப் பெறாதென்பதாம். அது அகநிலையொத்தாழிசையை மூற்கூறிப் பின் சிறு பான்மைதோன்ற எனையொன்றெனவுங்கூறிப் பின்னரு மூற்கூறியவொத் தாழிசையைச்சேர வண்ணகத்தைவைத்துப் பின் ஒருபோகென வேறுபட வைத்ததனானும், அதனிலக்கணங்கூறுகின்ற "எருத்தே கொச்சகம்" (செய் கருரு)என்னுஞ்சூத்திரத்துத் தாழிசையுறுப்புப்பெறுமெனக்கூறாமையானு முணர்க. இக்காலத்தார் ஒருபோகினையும் ஒத்தாழிசையென்னுந் தாழிசை செய்துகாட்டுவர்; அது தொல்காப்பியனார்கருத்தன்மையுணர்க. (கருகூ)

* எ-து, சொல்லாதொழிந்த வொத்தாழிசைக்கலிப்பாவுணர்த்......ற்று. ஒத்தாழிசைக்கலிப்பா முன்னிலையிடத்துத் தேவரைப்பரவும் பொருண் மைத்து எ-று. எ-து உரையாசிரியருரை.

† எ-து, மேற்சொல்லப்பட்ட முன்னிலைப்பரவல் ஆமாறுணர்..ற்று. தேவரிடத்து முன்னிலைப்பரவலாகியவதுதான் வண்ணகமெனவும் ஒருபோ கெனவும் இருவகைப்படும் எ-று. எ-து உரையாசிரியருரை.

கசய. வண்ணகந் தானே,
தரவே தாழிசை யெண்ணே வாரமென்
றந்நால் வகையிற் றோன்று மென்ப.*

இது முறையானே வண்ணகங்கூறுகின்றது.

இ-ள். வண்ணகவொத்தாழிசைதான் தரவுந் தாழிசையும் எண்ணு றுப்புஞ் சுரிதகமுமென் றெண்ணிய நான்குமுறைமையாற் றோன்றும். எ-று.

தனிச்சொல்லையும் அதிகாரத்தாற்கொள்க. தரவினுற் றெய்வத்தை முன்னிலையாகக்கூறுத்தித் தாழிசையாற் றெய்வத்தை வண்ணித்துப்புகழ்த லின் வண்ணகமாயிற்று. ஒழிந்தவுறுப்பான் வண்ணிப்பினும் அதற்குச் சிறந்தவுறுப் பிதுவேயாம்; எனவே அகநிலைச்செய்யுளுட் டாழிசை வண் ணித்துவாராவாயிற்று. எண்ணுறுப்பு மேற்கூறுப. உதாரணமு மேற்காட்டு தும். அவ்வுறுப்பு நீர்த்திரைபோன் முறையே சுருங்கிவருதலி னதனை யம்போதரங்கவொத்தாழிசையென்றும், வண்ணகமென்றதனை அராகவுறுப் பாக்கி யவ்வுறுப்புடையது வண்ணகவொத்தாழிசையென்றுங் கூறுவாரு முளர். இது பின்னுள்ளோர்கூறியநூற்கெல்லா முதனூலாதலின், தொல் காப்பியனுரைமாறுபடுதல் மரபன்றென்க. (கசய)

கசக. தரவே தானும்,
நான்கு மாறு மெட்டு மென்ற
நேரடி பற்றிய நிலைமைத் தாகும்.†

இஃது வினையொன்றற்குத் தரவிலக்கணங்கூறுகின்றது.

இ-ள். தரவுதானும் நான்குமுதற் பன்னிரண்டடியிறுதியாகவாராது; தேவபாணிக்காயின் எட்டும் ஆறும் நான்கு மென்ற சமநிலையைப்பற்றிய நிலைமைத்தாய்வரும். எ-று.

இதனாற் றலையளவு, இடையளவு, கடையளவுகளாம். ஒழிந்தவுறுப் பிற்கு மிவைகொள்க. நேரடிபற்றியவென்றதற்கு அளவடியென்ப தீண்டுக் கூறவேண்டாமையிற் சமநிலையானன்றி வியனிலையான்வாராவென்பதே பொருளாயிற்று. (கசக)

---

* எ-து, வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவாமா றுணர்......ற்று. வண்ணகவொத்தாழிசையாவது தரவும் தாழிசையும் எண்ணும் சுரிதக மும் என்றுசொல்லப்பட்ட நான்குறுப்பினையுடைத்து எ-று. எ-து உரை யாசிரியருரை.

† எ-து, தரவிற்கு அடிவரையறையுணர்......ற்று. வண்ணக்வொத் தாழிசைக்கலிப்பாவிற்கு, தரவு அளவு நான்கும் ஆறும் எட்டுமாகிய அள வடியினால் வருமென்றவாறு.

ஈண்டு நேரடியென்றது கொச்சகத்தரவுபோலவாராமைக்கென்று கொள்க. சொல்லப்பட்டவடியினும் மூன்றடியே யிதற்குவருமென்றவாறு யிற்று. எ-து உரையாசிரியருரை.

கசஉ. ஒத்துமூன் றாகு மொத்தா ழிசையே.*

இது தாழிசைகூறுகின்றது.

இ-ள். பொருளும் அளவுந் தம்முளொத்து மூன்றாய்வருந் தேவபாணிக்கண்வருந் தாழிசை. எ-று.

இவை பொருளொக்குமெனவே அகநிலையொத்தாழிசைக்கண்வருந் தாழிசை சிறுபான்மை பொருளொவ்வாதுவருதல் பெற்றாம். உ-ம். "கல்லெனக் கவின்பெற்ற" (கலி-௫) என்னுந்தாழிசையை இடப்பொருளோடு உவமைகூறி "ஒரிரா வைகலுள்" (ஷ) என்னுந் தாழிசையை இடத்தியல் பொருளோ டுவமைகூறியவாறுணர்க. (கசஉ)

கசஙு. தரவிற் சுருங்கித் தோன்று மென்ப.*

இது முன்னர்வந்த வொத்தாழிசைபோற் றாழிசை தரவோடொத்து வாராவென ஐயமகற்றியது.

இ-ள். எட்டும் ஆறும் நான்குமென்ற வண்ணத்தின்றாழிசையுஞ் சமநிலைத்தரவிற் சுருங்கித்தோன்றும். எ-று.

வாளாதே சுருங்குமென்றாரேனும் தோன்றுமென்றதனாற் றரவின் பாதியாகிய நான்கடியு மூன்றடியுமே தனக்குப் பெருமைக்குஞ் சிறுமைக்கு மெல்லையென்றுகொள்க. ஈரடியிரண்டும்வந்துதொடர்தலின் நான்கடித்தரவின்பாகமாகிய ஈரடித்தாழிசையாகாதாயிற்று. இங்ஙனங்கூறாக்கால் எழடிப் பெருமையாகத் தாழிசைகோடல்வேண்டும். இதனாற் கூறியநான்கடியானு மூன்றடியானுமன்றி ஐந்தடியானு மிரண்டடியானும்வாராதென்பதாயிற்று.

கசச. அடக்கியல் வாரந் தரவோ டொக்கும்.†

இது சுரிதகத்தெல்லைகூறுகின்றது.

இ-ள். அடக்கியல்பிற்றாகிய சுரிதகந் தரவோடொக்கும். எ-று.

முன்னர்ப் பல்வகையாற்புகழ்ந்ததெய்வத்தினை யொருபெயர்கொடுத்து அடக்கிநிற்றலின் அடக்கியலாயிற்று. தெய்வத்தையன்றி மக்களைப்புகழ்ந்த அடியும்வருதலின் வாரமாயிற்று. நிறுத்தமுறையானே எண்ணுறப்புணர்த்தாது மயங்கக்கூறியவதனானே தனிச்சொல்வருங்கால் எண்ணீற்றுப்பின்னுஞ் சுரிதகத்தின்முன்னும் புணர்க்க. (கசச)

---

* எ-து, தாழிசை யவ்வாறேயுணர்......ற்று. இச்சூத்திரம், இறந்தது காத்ததென்றுகொள்க. தாழிசையும் தம்மு ளளவுமொத்து மூன்றாகிவருமவை தரவிற் சுருங்கித்தோன்றுமென்றுகொள்க. எ-து உரையாசிரியருரை.

† எ-து, சுரிதகமாமாறுணர்..... ற்று. அடக்கியலாகிய சுரிதகமும் தரவோடொத்த விலக்கணத்த வென்றவாறு. எ-து உரையாசிரியருரை.

கசுரு. முதற்றொடை பெருகிச் சுருங்கும மெண்ணே.*

இஃது எண்ணுறுப்பாமாறுணர்த்துகின்றது.

இ-ள். எண்ணுவது முற்படப்பெருகியவழிமுறையாற் சுருங்கிவரப் பெறும். எ-று.

தொடையென்றதனன் ஒழிந்தஎண்களுந் தொடைபெறுதலும் நோக்கா ராயிற்று. முற்படவெனவே பிற்படச் சில வருமென்பது பெற்றாம். பெருகி யென்றதனன் ஈரடியா னிரண்டைநாட்டி வழிமுறைசுருங்கிவருமெனவே ஈரடியிற்சுருங்கி யோரடியாயும், ஓரடியிற்சுருங்கி யிருசீராயும், இருசீரிற் சுருங்கி யொருசீராயும் ஒன்றற்கொன்று பாகமே சுருங்குதல் கொள்க. "நாற் சீரடிகொண்ட தடியெனப்படும்" (செய்-கூஉ) என்றலின் அளவடியேகொள்க. இருசீரான்வருவன இரண்டிணைந்து அளவடியாதற்கேற்பத் தொடை கொண்டு சுவடுபடநிற்றலானும், ஒருசீரான்வருவனவும் நான்கிணைந்து அள வடியாதற்கேற்பத் தொடைகொண்டு சுவடுபடநிற்றலானும் அவையும் அள வடிக்கணடங்கிற்று. மன் ஆக்கமாதலிற் சுருங்கியும் பலவாதல்கொள்க. ஈரடி யும் ஓரடியும் இருசீரும் ஒருசீருமாய்ச் சுருங்கிவாராநிற்கவும் இரண்டிற்கு நான்கும், நான்கிற்கு எட்டும், எட்டிற்குப் பதினாறுமாய் ஒன்றற்கொன்று உறுப்புவகையான் இரட்டிக்குமெனக்கொள்க. இருசீர்வருவன குறளடி யெனப்படுதலின் மேற் சின்னமென்பன அடியினடங்காவொருசீரேயா யிற்று. ஆகவே இதனையொழிந்தஎண் மூன்றும் நான்குமாய்த் தலையெண், இடையெண் கடையெண் எனவும்படுதல்நோக்கி மேல் "எண்ணுஞ் சின்ன மும்" எனப் பிரித்தோதுப. இனி அளவடியிற்சுருங்குமென்றலின் இவ் வள வடியிற்சுருங்கிய இருசீரையும் ஒருவழிச் சின்னமெனவும்படும். இனி ஈரடி யிரண்டினைப் பேரெண்ணெனவும், ஓரடி யதனிற்குறைதலிற் சிற்றெண் ணெனவும், இவற்றிற்கும், பின்வருஞ்சின்னத்திற்கும் இடையேநிற்றலின் இருசீரை இரண்டிடையெண்ணெனவும், முடிவிற்கு அளவாய்நிற்குஞ்சின் னத்தினை அளவெண்ணெனவும் பெயர்கூறினு மமையும். இருசீரினை முச் சீராக்கியும் ஒருசீரினை யிருசீராக்கியும் அலகுவைப்பின் அதற் கசையுஞ் சீரும் இசையொடுசேராமையுணர்க. (கசுசு)

---

* எ-து, எண்ணுமாறுணர்......ற்று. முதற்றொடுத்தவுறுப்புப் பெரு கிப் பின்றொடுக்குமுறுப்புச் சுருங்கி யெண்வருமென்றவாறு.

அதனை இரண்டடியான்வருவன இரண்டும், ஓரடியான்வருவன நான்கும், சிந்தடியான்வருவன வெட்டும், குறளடியான்வருவன பதினாறும், என்ப் பிறநூலாசிரியருரைப்ப; இவ்வாசிரியர்க்கு வரையறையிலவாம்." எ-து உரையாசிரியருரை.

**கசுக.** எண்ணிடை யொழித லேத மின்றே
1சின்ன மல்லாக் காலை யான.*

இது மேலதற்கே புறனடை.

இ-ள். முற்கூறிய எண்களின்றிவருதல் செய்யுட்கு ஏதமின்று, சின்னவெண்ணொன்றுமில்லாதவிடத்து. எ-று.

எனவே சின்னவெண்ணொழியாது மூவகையெண்ணும் ஒழிதலும், சின்னவெண்ணொழியுமிடத்து மூவகையெண்ணும் ஒழியாதுவருதலுஞ் சுவையுடைத்தாயிற்று. இடையென்றதனாற் றலையெண்ணு மிடையெண்ணு மல்லன எட்டு நான்காகியும், பதினாறு எட்டாகியுங் குறைந்துவருதலுங் கொள்க. மூவகையெண்ணுஞ் சின்னமும்பெற்றுவருதல் சிறப்புடைமை ஏதமின்றென்பதனாற் பெறுதும். உ-ம். "மணிவிளங்கு திருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப், பணிதயங்கு நேமியும் பானிறத்த சுரிசங்கு, மிருசுடர்போ லிருகரத்தி லேந்தியமர் மாயோனும், பங்கயத்தி லுறைவோனும் பாகத்தோர் பசுங்கொடிசேர், செந்தழற்கண் ணுதலோனுந் தேருங்கா னீயென்பார்க், கவரவர்த முள்ளத்து ளவ்வுருவா யல்லாத, பிறவுருவு நீயென்னிற் பிறவுருவு நீயேயா, யளப்பரிய நான்மறையா னுணர்த்துதற் கரியோனே; எவ்வுயிர்க்கு முயிரேயா யியங்குதனின்றொழிலாகி, யவ்வுயிர்க்க ணடங்கியே யருளாது நிற்றலினல், வெவ்வினைசெய் தவையுழந்து வெம்பிறவிக் கடலழுந்த, வவ்வினையை யகற்றும ணிற்பதுநின் னருளன்றே; பல்லுயிரும்

* எ-து, மேலதற்கோர் புறனடையுணர்... ...ற்று. மேற்சொல்லப்பட்ட எண் ஒரோவொன் றிடையொழிந்துவருதல் குற்றமாகாது, தனிச்சொல்லில்லாதவழி என்றவாறு.

எனவே சொல்லப்பட்ட வுறுப்புக்கள் தனிச்சொல்வருவழி இடையொழியாமல்வருதல்வேண்டுமென்றவாறு. தனிச்சொலுட்பட வைந்துறுப்புடைத்தாயிற்று. இனித் தனிச்சொலின்றி எண்ணிடையிட்டவழி ஒருபோகெனப் பெயர்பெறும். உதா. "கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக், கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய, வழல்வளை சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத், தாரொடு முடிபிதிரத் தம்னியப் பொடிபொங்க, வார்புன விழிகுருதி யகலிட முடனனைப்பக், கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்" தரவு. "மூசதிர் வியன்மலுரை முழுவதூந் தலைபனிப்பப், புரைதொடி திரடிண்டோட் போர்மலைந்த மறமன்னர், அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப், பொடியெழ வெங்களத்திற் புடைத்ததுநின் புகழாமோ; கலியொலி

1'சின்ன மில்லாக் காலை யான' என்பதும் பிரதிபேதம்.

படைப்பதுநின் பண்பென்றே பகலினால், வல்வினையின் வலைப்பட்டு வருத்தங்கூ ருயிர்தம்மை, நல்வினையே பயில்வித்து நகைக்களைஞ்செய் பகைநீக்கி, யல்லல்வா யழுந்தாம லகற்றுவது மருளன்றே; அழிப்பதுநின் றொழிலென்றே யறைந்தாலு முயிரெல்லா, மொழித்தவற்று ளுணர்வுகளை யொருவாம லுடனிறுத்திப், பழிப்பின்றிப் பல்காலு மிப்பரிசே பயிற்றுதலி, னழிப்பதுவு மில்லையா லாங்கதுவு மருளன்றே; வேள்வி யாற்றி விதிவழி யொழுகிய, தாழ்வி லந்தணர் தம்வினை யாயினை; வினையி னீங்கி விழுத்தவஞ் செய்யு, முனைவர் தமக்கு முத்தி யாயினை; இலனென விகழ்ந்தோர்க் கிலையு மாயினை; உளனென வுணர்ந்தோர்க் குளையு மாயினை; அருவுரு வென்போர்க் கவையு மாயினை; பொருவற விளங்கிப் போத மாயினை; பானிற வண்ணனீ, பனிமதிக் கடவுணீ, நீனிற வுருவுநீ, நிறமிகு கனலிநீ; யறுமுக வொருவனீ; யானிழற் கடவுணீ, பெறுதிரு வுருவுநீ, பெட்பன பிறவுநீ; மண்ணுநீ, விண்ணுநீ, மலையுநீ, கடலுநீ, எண்ணுநீ, யெழுத்துநீ, யிரவுநீ, பகலுநீ, பண்ணுநீ, பாவுநீ, பாட்டுநீ, தொடருநீ, அண்ணனீ, யமலனீ, யருளுநீ, பொருளுநீ; ஆங்க, இனையை யாகிய விறைவநின் னடியிணை, சென்னியின் வாங்கிப் பன்னாள் பரவுது, மலர்தலை யுலகின் மன்னுயிர்க் கெல்லா, நிலவிய

---

வியனுலகங் கலந்துட னனிநடுங்க, வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோவு, மாணாதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கிச், சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ; படுமணி யினநிரை பரந்துட னிரிந்தோடக், கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு, வெரிஞெரு மருப்படர வீழ்ந்துதிரம் வேரூக, யெருமலி பெருந்தொழுவி லிறுத்ததுநின் னிகலாமோ;" இவை மூன்றுந் தாழிசை. "இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்,வலம்புரித் தடக்கையோய் மானு நின்னிறம்;விரியிணர்க்கோங்கமும் வெந்தெரி பசும்பொன்னும், பொருகளி றட்டோய் புரையு நின்னுடை;" இவை பேரெண். "கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை, தண்சுட ருறுபகை தணித்த வாழியை, ஒலியிய லுவண மோங்கிய கொடியினை, வலிமிகு சகட மாற்றிய வடியினை;" இவை அளவெண். "போரவுணர்க் கடந்தோய்நீஇ, புணர்மருதம் பிளந்தோய்நீஇ, நீரகல மளந்தோய்நீஇ, நிழறிகழைம் படையோய்நீஇ;" இவ்வ யிடையெண். "ஊழிநீஇ யுலகுநீஇ, யுருவுநீஇ, யருவுநீஇ, யாழிநீஇ, யருளுநீஇ, யறமுநீஇ, யறமுநீஇ;"இவை சிற்றெண். "எனவாங்கு" தனிச்சொல். "அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன், றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற், கயலொடு கிடந்த சிலையுடைக் கொடுவரிப், புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன், றொன்றிய வுலக முழுவது, மொன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே" இது ஆறடிச்சுரிதகம். இவ்வாறுவருவதனை ஒருசாராசிரியர் அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா என்றுகூறுப. எ-து உரையாசிரியருரை.

பிறவியை நீத்தல் வேண்டி, முற்றிய பற்றொடு செற்ற நீக்கி, முனிமை யாக்கிய மூவா முத்தியை, மயலற வளித்தநின் மலரடி, யரிய வன்று யுரிதி னிற் பெறவே" இஃது எட்டடித்தாவுந் தாவின்பாகம்பற்றிய நான் கடித்தாழிசைமூன்றும், ஈரடியிரண்டும், ஓரடிநான்கும், இருசீரெட்டும், ஒரு சீர்பதினாறுமாகிய நால்வகையெண்ணுந் தனிச்சொல்லும், எட்டடிச்சுரிதக மும்பெற்ற தலையளவு1வண்ணகப்பெருந்தேவபாணி."பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்திப், புலியுரிமேற் பைத்தலைதாழ் பூங்கச்சை விரித் தமைத்துக், கண்கவருந் திருமேனி வெண்ணூலின் கவின்பகைப்பத், தண் கமழ்பூந் தாரிதழி தலைமலிந்து பிறைதயங்க, மொழிவலத்தான் மயங்காதே முறுவலாற் றேலாதே, விழிவலத்தா னுருவழிந்தோன் வேடங்கண் ணெனா வழியாக், கலிகெழு கடற்கச்சிக் கமழிளந் தேமாவி, னொலிதளிரு முலைச் சுவடு முடன்சிறப்ப வுலவுங்கால்; நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிக்க, வேறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரா, லேறேறி யிடுபலிக்கு வரும்பொழுது மிடைபிரியாக், கூறேறும் பசும்பாகங் கொள் ளுமோ கொள்ளாதோ; பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு, வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால், வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீர்வருங்காற், கொல்லேற்றுக் சறுகிடலுங் கொள்ளுமோ கொள்ளாதோ; நாணுக மடந்தையர்பாற் பலிக்கென்று நடந்தக்காற், பூணு கந் தழீஇக்கொளினும் பொங்காது போலுமாற், பூணுகந் தழீஇக்கொளினும் புகையுயிர்த்துப் பொங்காத, கோணுகம் யாந்தருபால் குடிக்குமோ குடி யாதோ; எரிகல னிமைக்கு மிடவயிற் றொடிக்கைப், பரிகல னேந்தும் பரி சிறந் தனுகொல்; உமையவள் விலக்கவு மொலிகட னஞ்ச,மிமையவர் தம்மை யிரந்துண் டதுகொல்; இடையேழு பொழில்கட்கு மிமைப்பளவிற் கொல் லேறே, கடைதோறு மதுநிற்பக் கற்பித்த வாறெவன்கொல்; இரப்புநீ வேட்டதுகேட் டிமையவரென் பட்டனரே, பரப்புநீர்க் கங்கையோ படர் சடையிற் காந்ததே; பூண்டன வெண்பு, புனைவது தும்பை, ஆண்டன பூதம் மறைவன வேத,மிசைப்பன பல்பே,யெழீஇயது வீணை,யசைப்பன வேணி, யதிர்வன பொற்கழல்; எனவாங்கு; எல்வளை மகளி ரிடுபலி நசைஇப், பல் கடை திரிதருஞ் செல்வநிற் பரவுதுங், கொடியணி யேனம் பொடியணிந்து இடப்ப, வடதிசை வாகை சூடித் தென்றிசை, வென்றி வாய்த்த2 வன்ருள் வளவ, னிமிழிசை வேங்கடம் போலத்3 தமிழகத்து, நாவலொடு பெயரிய ஞாலங், காவல் போற்றி வாழிய நெடிதே" இஃது ஒருசீர்ச் சின்னமொன்று மொழித் தல்லனவெல்லா முற்கூறியவுதாரணம்போல வந்தது. "ஆயிரங்

1 வண்ணகப்படும் பெருந்தேவபாணி என்பதும் பிரதிபேதம்.

2 வன்ருள்விடலை என்பதும் பிரதிபேதம்.

3 தமிழகத்து என்பதும் பிரதிபேதம்.

கதிராழி யொருபுறந்தோன் றகலத்தான், மாயிருந் திசைசூழ வருகின்ற வாவுணர்த்த, மனக்கமல மலரிணையு மலர்த்துவான் றூறாத, வினக்கமல மூணர்த்துவபோன் றெவ்வாயும் வாய்திறப்பக்,குடதிசைக்கண் மறைவதூஉ மறையென்று கொள்ளாமைக், கடவுளரே தம்முறங்காக் கண்மலரே கரி போக, ஆரிருளும் புலப்படுப்பா னவனேயென் றுலகறியப், பாரகலத் திருள் பருகும் பரிதியஞ் செல்வகேள்;மண்டலத்தி னிடைநின்று வாங்குவார் வைப் பரோய், விண்டலத்திற் கடவுளரை வெவ்வேறு வழிபடுவோ, ரோங்குலகம் முழுதுபொரத் திருவுருவி னென்றாக்கி, யாங்கவரை வேறுவே றளித்தி யென் றறியாரால்; மின்னுருவத் தாரைசே வெளிப்பட்ட விடியல்வாய், மின்னுருவத் தொடுக்குதலா னெடுவிசும்பிற் காணுதா, ரெம்மீனுங் காலைவா யிடைக்கரந்து மாலைவா, யம்மீனை வெளிப்படுப்பாய் நீயேயென் றறியாரால்; தவாமதியந் தொறுநிறைந்த தண்கலைக டலைத்தோய்ந், துவா மதிய நின்னொடுவந் தொன்றாகு மென்றுணர்வா, ரம்மதியி னின்னொளிபுக் கிருளகற்றுத் தவற்றாற்கோ, லம்மதியம் படைத்தாயு நீயேயென் றறியா ரால்; நீராகி நிலம் படைத்தனை, நெருப்பாகி நீர் பயந்தனை, ஊழியிற் காற் றெழுவினை,யொளிகாட்டி வெளி காட்டினை,கருவாயினை, விடாயினை, கதி யாயினை,விதியாயினை,உருவாயினை,யருவாயினை,யொன்றாயினை,பலவாயினை; எனவாங்கு, விரிதிரைப் பெருங்கட லமிழ்தத் தன்ன, வொருமுதற் கடவு ணிற் பரவுதுந் திருவொடு, சுற்றந் தழீஇக் குற்ற நீக்கித், துன்பந் தொடரா வின்ப மெய்திக், கூற்றுத்தலை பணிக்கு மாற்றல் சான்று, கழிபெருஞ் சிறப் பின் வழிவழி பெருகி, நன்றறி புலவர் நாப்பண், வென்றியொடும் விளங்கி மிகுகம்யா மெனவே" இது குறைந்த இருவகைச்சின்னமும்பெற்று ஒழிந்த எண்ணிடையிட் டவ்வாறேவந்தது. "உறைபதியி னுடனயனை யுந்தியினுற் படைத்தோயு, மறைகடல்சூழ் நிலமுதலா வனைத்துலகும் புரப்போயுந், திரு நிறமே கரிபோகத் திருமேகம் பயந்தோயு, மொருநிறமே நிறமாக வொள் ளொளியை யுயிர்த்தோயு, மறுவகத்த மார்பென்ன மலர்மகளை வைத் தோயு, நிறத்தோடு நெஞ்சொத்த நிலமடந்தை கணவனுநீ; பின்னமா யொன்றாகும் பெருமாயை யியற்றுவா, யின்னமா யந்தெளிய வெமக்கருளி யிமையவர்க்கு, மன்னமாய் முன்னொருகா லறம்பயந்த 1வறிவனீ; குறியா தும் பிழையாத குலமறையை மூதன்மயங்கி, வெறியாகி மலரோற்கு வெளிப்படுத்து வேறுபடுத், தறியாத மறையெமக்கு மறிவித்த வறிவனீ; மாணுக மதிகொடுத்து வானவரை மயங்கியுங், கோணுக மதிவாங்கிக் கொடுத்தருளி யடியவர்க்குக், காணுத மதிகாட்டுங் கருணைகூர் காட்சியைநீ; வானுநீ நிலனுநீ மதியுநீ விதியுநீ, தேனுநீ யமுதுநீ திருவுநீ யருவுநீ; அன்புநீ யருளுநீ யாதிநீ யந்தநீ, யின்பநீ துன்பநீ யின்மைநீ யுண்மைநீ; எனவாங்கு,

1 அறனுநீ என்பதும் பிரதிபேதம்.

நால்வகை யுருவிற் பால்வே றாகிய, கால முதல்வனிற் பரவுது னாலத்து, நல்லவை நல்லவை யெல்லா நினைஅது, செல்வ நோக்கி னெய்திய வல்லிதிற், றுயரொடு தொல்வினை நீங்கிப், பெயராச் சுற்றம் பெறுகம்யா மெனவே'' இது ஆறடித்தரவும், மூன்றடித்தாழிசை மூன்றும், ஒருசீர்ச்சின்னம் பதினாறும், தனிச்சொல்லும், ஆறடிச்சுரிதகமும் பெற்றுவந்த இடையளவு வண்ணகத்தேவபாணி. 1''கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக், கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளை, யழல்விழிச் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத், தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க, வார்புன லிழிகுருதி யகலிட முடனனைப்பக், கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்; முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப், புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்ல, ரடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப், பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ; கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க, வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோவு, மாணுதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கச், சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ; படுமணி யினநிரை பரந்துட னிரிந்தோடக், கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு, வெரினொடு மருப்படரா வீழ்ந்துதிறம் வேறாக, வெருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ; இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல், வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்; விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொன்னும், பொருகளி றட்டோய் புரையு நின்னுடை; கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை, தண்சுடருறுபகை தவிர்த்த வாழியை, ஒலிபிய லுவண மோங்கிய கொடியினை, வலியுயர் சகட மாற்றிய வடியினை; போரவுணர்க் கடந்தோய்நீ, புணர்மருதம் பிளந்தோய்நீ, நீரகல மளந்தோய்நீ, நிழறிகழைம் படையோய்நீ; ஊழிநீ, யுலகுநீ, யுருவுநீ, யருவுநீ, யாழிநீ, யருளுநீ, யறமுநீ, மறமுநீ; எனவாங்கு, அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன், றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற், கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப், புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன், றொன்று முதிர்கட லுலக முழுதுட, 2னொன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே. இது இருசீர் நான்கும் ஒருசீரெட்டும்பெற்று வந்தது. இதனுட் போரவுணர்க்கடந்தோ யென்பதனை முச்சீராக்கியும், ஊழிநீ யென்பதனை யிருசீராக்கியும் பின்னுள்ளோர் காட்டுதல் பொருந்தாமையுணர்க. (௧௪௯)

1 ''விளக்கத்தனார்பாடிய கெடலருமாமுனிவரொன்னுங்கலிப்பாப் புறநிலைவாழ்த்தாய்வந்ததுபிறவெனின் அஃ தாசிரியச்சுரிதகத்தால்வந்தமையாற் குற்றமில்லை'' என்பது யாப்பருங்கலவிருத்தி.

2 ஒன்றுதிகிரி எனவும், ஒன்றுபுதிகிரி எனவும் பாடம்.

கசஎ. ஒருபோ கியற்கையு மிருவகைத் தாகும்.*

இது ஒத்தாழிசையிரண்டனுள் ஏனையொன்றனை வண்ணகம், ஒருபோகென இருவகைத்தென்றார்; அவற்றுள் ஒருபோகும் இருவகைத்தாமென்கின்றது. உம்மை யிறந்தது தழீஇய எச்சவும்மை.

இ-ள். ஒருபோகின்இயல்பும் இரண்டுகூறும் எ-று.

இதன்பயன் ஒருபோகின்றிக் கொச்சகம் அம்போதரங்கமென்றும் பெயர்வழங்கினு மமையுமென்றவாறாயிற்று. (கசஎ)

கசஅ. கொச்சக வொருபோ கம்போ தரங்கமென்
றொப்ப நாடி யுணர்தல் வேண்டும்.†

இது மேல் வகுத்த இரண்டற்கும் பெயரும் முறையுங் கூறுகின்றது.

இ-ள். கொச்சகவொருபோகு அம்போதரங்கவொருபோகு என்றிரண்டாகப் பெயர்கொடுத்துப் பொருந்த ஆராய்ந்துணரப்படு மவை. எ-று.

கொச்சக வுடை போலப் பெரும்பான்மையுந் திரண்டுவருவது கொச்சகமெனவும், பல வுறுப்புக்களு முறையே சுருங்கியும், ஒரோவழிப் பெருகியும், முடுகியுங் கடைக்கண் விரிந்து நீர்த்தரங்கம்போறலின் அம்போதரங்க மெனவுங் கூறினர். இவையும் ஒத்தாழிசைப்பகுதியென்பார் போகிய வொத்தாழிசையானே ஒருபோகென்றாரெனக் கொள்க. அம்போதரங்கவொருபோகென்பது மது. ஒருபோகென்பது பண்புத்தொகைப் புறத்தன்மொழி. இடை யீடில்லாநிலத்தினை யொருபோகென்பவாகலின் அது ஒப்பினாகியபெயர். ஒருபோகென்றதனைத் 'திரி‡கோட்டவெளி' என்றதுபோலக் கொள்க. (கசஅ)

---

* எ-து, ஒருபோகு பாகுபடுமாறுணர்... ..ற்று. ஒருபோகென்னுங் கலி யிரண்டுவகைப்படுமென்றவாறு. எ-து உரையாசிரியருரை.

† என்பதுமது, ஒருபோகென்னுங்கலி கொச்சகவொருபோகென்வும் அம்போதரங்கவொருபோகெனவும் பொருந்த நாட்டியுரைத்தல்வேண்டும் எ-று. எ-து உரையாசிரியருரை. இச்சூத்திரத்துள் ஒப்ப நாட்டி யுரைத்தல் வேண்டுமென்று பாடங்கொண்டா ரிவர்.

‡ தோட்ட எனவும் பிரதிபேதமுண்டு.

௧௪௯. தரவின் றாகித் தாழிசை பெற்றுந்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியு
மெண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியு
மடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக வொருபோ காகு மென்ப.*

இது முறையே கொச்சக வொருபோகு கூறுகின்றது.

இ-ள். தரவின் றாகித் தாழிசை பெற்றும் என்பது தனக்கினமாகிய வண்ணகத்திற்கோதிய தரவின்றித் தாழிசையேபெற்றும், அவை பரணிப் பாட்டாகிய தேவபாணி முதலியன. இது தரவோடுபட்ட தாழிசையிலக்கணமின்றி வேறாய்வருமென்றற்குத் தரவின்றாகியெனத் தரவை விலக்கினார் எனவே இவையொத்து மூன்றாதலுந் தரவிற்சுருங்கி நான்கும் மூன்றும் அடிபெறுதலும், ஒரு பொருண்மேல் வருதலும், தாழம் பட்ட வோசையவேயாதலும், கடப்பாடின்றென்றவாறும். அங்ஙனங் கூறியவதனானே பரணியுளெல்லா மீரடியானேவருதலும் தாழம்பட்டன வோசையல்லன விராஅய்வருதலும், முடுகிவருதலும், இனித் தாழிசைமூன்றடுக்கித் தனியே வருவழி ஈரடி முதலிய பலவடியான்வருதலும், இனிப் பத்தும் பதினொன்றும் பன்னிரண்டுமாகி யொருபொருண்மேல் வரும் பதிகப் பாட்டு நான்கடியின் ஏறாதுவருதலும், அங்ஙனம்வருங்காற் றாழ்ந்தவோசை

* எ-து, நிறுத்தமுறையானே கொச்சகவொருபோகுணர்........ற்று. தரவின் றாகித் தாழிசைபெற்று மென்பது - தரவுமுதலாயின உறுப்புக்களுள், தரவொழியத் தாழிசைமுதலாயினவருவன என்றவாறு. தாழிசை பெற்றும் என்றதனால், தரவுதாமேவரினும் கொச்சகவொருபோகாகுமென்று கொள்க. தாழிசையின்றித் தரவுடைத்தாகியுமென்பது, தாழிசையாகிய வுறுப்பின்றித் தரவுமுதலாயின வுடைத்தாகியு மெ-று. தரவுடைத்தாயு மென்றதனால் தாழிசை, தரவு தானேவரினு மென்றுகொள்க. எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியும் எ-து, எண்ணாகிய உறுப்புக்களை யிடையிட்டுத் தனிச்சொல் வாராதொழியினும் எ-று. சின்னம் என்றதனால், எண்ணின்கண் இடையெண், சிற்றெண் என்பன குறையினும் எ-று. அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகினும் எ-து, சுரிதகமின்றித் தரவு தானேநிமிர்ந்தொழுகி முடியினும் எ-று. யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது எ-து, ஒத்தாழிசையினுக்கப்பட்ட யாப்பினும், அதற்குரித்தாகவோதப்பட்ட கடவுள்வாழ்த்துப்பொருண்மையின்றிக் காமப்பொருளாகவரினும் எ-று. கொச்சகவொருபோகாகும் எ-து, இவ்வாறு சொல்லப்பட்டன கொச்சக

பெற்றும் பெறாதும் வருதலும், அவை யிருசீரெண்முதல் எண்சீரளவும்வருதலும் என்பது; இன்னோரன்ன பலபகுதியெல்லாம் வரையறையின்றித் தழுவப்பட்டன. இவ்வேறுபாடெல்லா முளவேனுந் தாழம்பட்டவோசை பெரும்பான்மைய வாதலிற் றாழிசையென்றார். இங்ஙனந் தாழிசைப்பேறு விதந்தோதவே யொழிந்தவுறுப்பெல்லாம் விலக்குண்டமைபெற்றாம். தாழிசையுறுப்புப்பெறுவதியாதெனிற் கொச்சகவொருபோகெனப் பொது வகையானின்ற செய்யுளாம். அதுநோக்கியாயிற்றுப் பலவுமெண்ணி வேற்றுமையுடையதென்றொருமையாற்கூறியது. முதற்றொடை பெருகிச் சுருங்குமா றெண்ணின்றித் தனியே யெண்ணலாகாமையானும், ஓசை வேறாதலானும், ஈரடித்தாழிசை பேறெண்ணுகா. உ-ம். "உளையாழி யோரேழு மொருசெலுவி னொடுங்குதலான், விளையாட நீர்பெறா மீனுருவம் பரவுதுமே"..............என்றாற் போல்வன பாணிச்செய்யுளுட் பயின்றுவரும். இவ்வாறு பல தொடர்ந்துவரிற் பஃறாழிசைக் கொச்சகமென்றும், மூன்றுதாழிசை வரிற் சிஃறாழிசைக் கொச்சகமென்றுங் கூறவுமமையும். மற்றுப் பாணியாவது காடுகெழுசெல்விக்குப் பாணிநாட் கூழுந் துணங்கையுங்கொடுத்து வழிபடுவதோர்வழக்குப்பற்றியது அது பாட்டுடைத் தலைவனைப்பெய்து கூறலிற் புறத்திணை பலவும் விராயிற்றேனுந் தேவபாணியேயாம். "கன்று குணிலாக் கனியுகுத்த மாயவ, னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற், கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ; பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ, னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி,

---

வொருபோகெனக் குறிபெறும் எ-று. எனவே, ஒத்தாழிசைக்குறுப்பாகிய வற்றுள் ஒன்றும், இரண்டும் குறைந்துவருவன கொச்சகவொருபோகெனப் பெயர்பெறும் எ-று. அவற்றுள், தரவின்றாகித் தாழிசைபெற்றுவந்த செய்யுள்[1] "நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக், கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக, வரைகாற் சினர்த்தன்ன புரவுநீர்ச் சேர்ப்பகேள்" இது நான்கடியாகி வாராமையிற் றாழிசையாயினும்...... ......"கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான்[2] விச்சைகள், தப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா, லொற்கத்து ளுதவியாற் குதவாது மற்றவ, னெச்சத்து ளாயினுமஃ தெரியாது விடாதேகாண்." "கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க, டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற், சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன், வாள்வாய்நின் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்" இவை யிரண்டுதாழிசை. "ஆங்கு அணைத்துநீ பெரும வதனிலை நினைத்துக்காண், சினைஇய வேந்த னெயிற்

---

1 நெய்தற்கலி—நஉ.

2 இது மூன்றடித்தாவு என்பர் நச்சினார்க்கினியர்.

லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ; கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ, னெல்லைநம் மானுள் வருமே லவன்வாயின், முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ" (சிலப். பக்-௩௧௧.) இது படர்க்கைப்பரவலாய் மூன்றடுக்கியவழி மூன்றடியான்வந்தது. இது சந்திருவமார்க்கத்தா னிடைமடக்கி நான்கடியாமாறு முணர்க "யானைத்தோல் போர்த்துப் புலியினுரியுடுத்துக், கான வெருமைக் கருந்தலைமே னின்றாயால், வானோர் வணங்க மறைமேன் மறையாகி, ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்; வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக், கரியதிரி கோட்டுக் கலைமிசைமே னின்றாயா, லரியரன்பூ மேலா னகமலர்மேன் மன்னும், விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்; சங்கமுஞ் சக்கரமுந் தாமரைக் கையேந்திச், செங்க ணரிமான் சினவிடைமே னின்றாயாற், கங்கை முடிக் கணிந்த கண்ணுதலோன் பாகத்து, மங்கை யுருவாய் மறைபோற்ற வேநிற்பாய்" (சிலப். பக்-௨௮௪.) இவை முன்னிலைப்பரவலாய் மூன்றடுக்கி நான்கடியான் வந்தன. பதிகப்பாட்டிற்கு ஈண்டுக்கூறிய வேறுபாடுகள் திருவாய்மொழி, திருப்பாட்டுத் திருவாசகம் என்கின்ற கொச்சகவொருபோகுகளிற் காண்க. அவை உலகவழக்கன்மையிற் காட்டா மாயினும். ஆகி யென்றதனான் ஒரு பொருண்மேன் மூன்றடுக்கிவருதலுந் தேவபாணியன்றி யாப்பினும் வேறுபட்டு வருவனவற்றின் கூறாய் அங்ஙனம் மூன்றடுக்கி வாராது தொடர்ந்த

---

புறத்திருத்த, வினைவரு பருவரல் போலத் துணைவரு, நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே" எனவரும். அத்தாழிசை தாமேயும்வரும். தாழிசையின்றித் தரவுமுதலாயினவந்ததற்குச்செய்யுள் 1"செவ்விய தீவிய சொல்லியவற்றொடு, பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம், பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைஇய, வகணகர் கொள்ளா வலர்தலைத் தந்து, பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன், மகனல்லை மன்ற வினிது" தரவு. "செல்வினைச் சென்றார் செய்யும் வினைமுற்றி, யன்பற மாறியா முள்ளத் துறந்தவள், பண்பு மறிதிரோ வென்று வருவாரை, யென்றிறம் யாதும் வினவல் வினவிற், பகலின் விளங்குநின் செம்மல் சிதையத், தவலருஞ் செய்வினை முற்றாமை யாண்டோ, ரவலம் படுதலு முண்டு" இது சுரிதகம். தாழிசையுந் தனிச்சொல்லுமில்லை. எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றியதற்குச் செய்யுள் 2"மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன், கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற், சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த, நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழை, பூமலர் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்" தரவு. "ஆற்றுத லென்பதொன் றலர்ந்தவர்க் குதவுதல்,

1 பாலைக்கலி—௧௮.

2 நெய்தற்கலி—௧௬.

பொருளாய் நான்குமுதற் பலவு மடுக்கிவருதலுந் தனிச்சொற்பெற்றுவரு தலுந் தாழம் பட்டவோசையின்றி மூன்றடுக்கிவருதலுஞ் சுட்டி யொருவர் பெயர்கொண்டு அவர்களையுந் தெய்வமென்றே பரவலும், அடுக்கிவந்து அடக்கியலான் முடிதலும், பிறவுங் கொள்க. உ-ம். "சுடரொடு திரிதரு முனிவரு மமரரு, மிடர்கெட வருளுநின் னிணையடி தொழுதேம், மடல்வலி யெயினர்நின் னடிதொடு கடனிது, மிடறுகு குருதிகொள் விறறருவிலையே; அணிமுடி யமரர்த மரசொடு பணிதரு, மணியுரு வினைநின மலரடி தொழு தேம், கணநிரை பெறுவிற லெயினிடு கடனிது, நிணனுகு குருதிகொ ணிகரடு விலையே; துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய, வெடி படவருபவ ரெயினர்க ளரையிரு, ளடுபுலி யனையவர் குமரிநி னடிதொடு பகைகட னிதுவுகு பலிமுக மடையே" (சிலப். வேட்.) இவை மூன்றடுக்கி முடுகியலாய்வந்த தாழிசைக் கொச்சகவொருபோகு. "என்றிவை சொல்லி யழுவாள் கணவன்றன், பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக் கொள்ள, நின்ற னெழுந்து நிறைமதி வாண்முகங், கன்றிய தென்று கண்ணீர்கையின் மாற்றியபின், னழுதேங்கி நிலத்தின்வீழ்ந் தாயிழையாள் தன்கணவன், றொழுதகைய திருந்தடியைத் துணைவளைக்கை யாற்பற்றப், பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளா, னெழுதெழின்

போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை, பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுத, லன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை, யறி வெனப் படுவது பேதையார் சொன்னோன்றல், செறிவெனப் படுவது கூறிய மறாமை, முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல், பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல், நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" இவை யெண். "ஆங்கறிந் தொழுகினை யாயினென் றோழி, நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க, தீம்பா லுண்டவர் கொள் கலம் வரைதலி, னின்றலை வருந்தியா ளிவளரஞ், சென்றனை களைமோ பூண்க நின்றேரே" இது சுரிதகம். அடக்கியலின்றி யடிநிமிர்ந்தொழுகல் வரு மாறு:—1பாண்மருண் மருப்பி னூல்புரை பாவடி, யீர்நறுங் கமழ்கடாத் தினம்பிரி யொருத்த, லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து, பொருள் வயிற் பிரிதல் வேண்டு மென்னு, மருளில் சொல்லு நீசொல் லினையே, நன்னர் நறுநுத னயந்தனை நீவி, நின்னிற் பிரியலெ னஞ்சலோம் பென்னு, நன்னர் மொழியு நீமொழிந் தனையே, அவற்றுள், யாவோ வாயின மாஅன் மகனே, கிழவ ரின்னோ ரென்னாது பொருடான், பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையு,மன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்,நிமைப்பு வரை வாழாண் மடவோ, ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே" என்வரும் எ-து உரையாசிரியருரை.

1 பாலைக்கலி—உ௦.

மலருண்க ணிருந்தைக்க வெனப்போனான், மாயங்கொன் மற்றென்கொன் மருட்டியதோர் தெய்வங்கொல், போயெங்கு நாடுவேன் பொருளுரையோ விதுவென்று, காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன், நீவேந் தன் றனைக்கண்டு திறங்கேட்பல் யானென்றா, ளென்றா ளெழுந்தா ளிட ருற்ற தீக்கனா, நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர்சோர, நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர்துடையாச், சென்றா ளரசன் செழுங்கோ யில் வாயில்வாய், (சிலப். ஊர்சூழ்) இவை தொடர்ந்தபொருளாய் நான்கடிக் கின. "சொன்னது, அரசுறை கோயி லணியார் ஞெகிழங், கரையாமல் வாங்கிய கள்வனு மென்றே, கரையாமல் வாங்கிய கள்வனு மென்றே, குரை கழன் மாக்கள் கொலைகுறித் தாரே, எனப், பொங்கி யெழுந்தாள் விழுந் தாள் பொழிகதிர்த், திங்கள் முகிலோடுஞ் சேணிலங் கொண்டெனச், செங் கண் சிவப்ப வழுதாடன் கேள்வனை, யெங்கணா அ வென்னா வினைந்தேங்கி மாழ்குவாள்" (சிலப். துன்ப.) இவை தனிச் சொற்பெற்றுத் தனிவந் தன. "இளமா வெயிற்றி யிவைகாணின் னையர், தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள், கொல்லன் றுடியன் கொளைபுணர்சீர் வல்ல, நல்லியாழ்ப் பாணர்தம் முன்றி னிறைந்தன; முருந்தே ரிளநகாய் காணாய்நின் னையர், கரந்தை யலறக் [1]கடந்த நிரைகள், கன்விலை யாட்டிநல் வேய்தெரி கான வன், புள்வாய்ப்புச் சொன்ன கணிமுன்றி னிறைந்தன; கயமலருண் கண் ணாய் காணாய் நின்னைய, ரயலூ ரலற வெறிந்தநல் லாக்க, ணயனின் மொழிநர் நரைமுது தாடி, யெயின ரெயிற்றியர் முன்றி னிறைந்தன" (சிலப். வேட்டு.) இவை தாழிசை யோசையின்றி யடுக்கிவந்தன.

"கோவா மலையாரங் கோத்த கடலாரந், தேவர்கோன் பூணாரந் தென் னவர்கோன் மார்பினவே, தேவர்கோன் பூணாரம் பூண்டான் செழுந்துவ ரைக், கோகுல மேய்த்துக் குருந்தொசித்தா னென்பரால்; பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான், மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன், மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன், பொன்னந் திகிரிப் பொருபடையா னென்பரால்; முந்நீரி னுள்புக்கு மூவாக் கடம் பெறிந்தான், மன்னர்கோன் சேரன் [2]வளவஞ்சி வாழ்வேந்தன், மன்னர் கோன் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன், கன்னவிறோ ளோச்சிக் கடல் கடைந்தா னென்பரால், (சிலப். ஆய்ச்சி.) இவை அரசரைத் தெய்வமென்றே பரவியன. [3]குன்றக் குரவையுள் "சீர்கெழு செந்தில்" என்னுந் தாழிசை முதற் பலவடுக்கிவந்து பின்னர் "என்றியாம், பாடக்......கேட்டு" என்று அடக்கியற் பொருள்பெற்று முடிந்தவாறு காண்க. இன்னுஞ் சிலப்பதிகா ரத்துள் வரும் வேறுபாடெல்லாம் இவ்விலேசான் முடித்துக் கொள்க

1 கவர்ந்த என்பதும் பாடம்.
2 வளர்வஞ்சி என்பதும் பிரதிபேதம்.
3 சிலப்பதிகாரம்.

தாழிசையின்றித் தரவுடைத்தாகியு மென்பது மேற்கூறிய தாழிசையின்றித் தரவேபெற்றுவருதலும். எ-று. ஈண்டுந் தரவோசைபெறுவது பொதுவாய்நின்ற கொச்சகவொருபோகென்னுஞ்செய்யுள், அது தாழிசையோடுபட்ட தரவிலக்கணத்திற் றிரிந்துவருமென்றற்குத் தாழிசையின்றியென விலக்கினார். அது தொடர்நிலைச் செய்யுளாய்வருந் தேவபாணியுந் தரவிணைக்கொச்சகமாய்வருவது நான்கும் ஆறும் எட்டும் அடியாய்வருதல் கடப்பாடின்றென்பதூஉங் கொள்க. தரவென்னும் உறுப்பைச் செய்யுளுடைத்தெனவே யொழிந்தவுறுப்பு விலக்குண்டன. ஆகியு மென்றதனாற் றனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றும் பெறாதும்வருதலும், பெரும்பான்மை யிரண்டிணைதலுங் கொள்க. அவை தனிச்சொல்லுஞ் சுரிதகமும்பெற்ற தரவுகொச்சகந் தரவிணைக்கொச்சக மெனப் பெயர்கூறப்படும். இதனாற் றரவிலக்கண மிழிந்ததேனும் பெரும்பான்மை தாழம்பட்டவோசைக் குரித்தன்றென்பது நேர்ந்தவாறாயிற்று. உ-ம். "பூணாக வென் பணிந்தான் பூதத்தான் வேதத்தான், கோணாகக் கச்சையான் கோடேந்து கொல்லேற்றான், மாணாக வெண்ணூலான் வாணுதலோர் பாகங்கொண், ணேகும் பிச்சையா னுண்ணாத நஞ்சுண்டான், வான்யாறு தாழ்ந்த சடையான் மழுவலத்தான், யானோர்வஞ் செய்யு மிறை; எனவாங்குப் பாடியிறைஞ்சுவோர்க் கெல்லாம், வினைமாசு தீர விளக்காகுந் தோற்றத், தனையோய் மறலிக்கு மச்சம் பயந்த, புனைபூங் கழற்கான்மேற் பூவோடு நீர்தூஉய், மனைமாண்ட பாக முளப்பட வாழ்த்தி, யெனைநாளு மேத்துது மெந்தையே நின்னை, நினையா தொழியற்க நெஞ்சு"............இது தரவிணைக்கொச்சகம். தனிச்சொல்லுஞ் சுரிதகமும்பெற்றன வந்துழிக்காண்க. இதனானே தொடர்நிலைச்செய்யுளின் முதற்கணின்ற தேவபாணி தன்பொருளோடு தான்முடிந்தன தனித்தரவு கொச்சகமாம். உ-ம். "உலக மூன்று மொருங்குட னேத்துமண், டிலக மாய திறலறி வன்னடி, வழுவி னெஞ்சொடு வாலிதி னாற்றவுந், தொழுவ தூல்வினை நீங்குக வென்றியான்; (வளையாபதி) மூவா முதலா வுலகம்மொரு மூன்று மேத்தத், தாவாத வின்பந் தலையாயது தன்னி னெய்தி, யோவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வனென்ப, தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே" (சிந்தா. கடவுள் வாழ்த்து-க.) எனவரும். இவ்வளையாபதிமுதலியவற்றுள் தேவபாணியல்லாத தொடர்பொருட்செய்யுட்களை "யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது" என்றதாற் றரவுகொச்சகமென்றுகொள்க, அவ்வை தம் பொருளோடு தாமுடியாமையின். எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியும் என்பது வண்ணகத்திற் கோதிய எண்ணுஞ் சின்னமுமின்றி ஒழிந்த தரவு தாழிசை தனிச்சொல் சுரிதக மென்னும் நான் குறுப்புடையதுங் கொச்சக வொருபோகாம். எ-று. இதற்கு இல்லா ஆறுறுப்பையே கூறிற்று உள்ளது நிற்றலை வேண்டி. உ-ம். "ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து,

தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக், கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி, மாறாப்போர் மணிமிடற்ற வெண்கையாய் கேளினி; படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ, கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற், கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ; மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து, பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள், வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ; கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத், தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால், முலையணிந்த முறுவலாண் முற்பாணி தருவாளோ; எனவாங்கு, பாணியுந் தூக்குஞ் சீருமென்றிவை, மாணிழை யரிவை காப்ப, வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி" (கலி. கடவுள் வாழ்த்து). இது நான்குறுப்பான் வந்ததேனுந் தேவபாணியாய்வருதலின் முதனிலையொத்தாழிசை யாகாது. ஏனையொன்றே யென்ற ஒத்தாழிசையேயாமாயினும் அவற்றிற்குரிய எண்ணுஞ் சின்னமும் இழத்தலிற் கொச்சகவொரு போகாயிற்று. அடக்கியலின்றி யடிநிமிர்ந் தொழுகியு மென்பது அடக்கியல் தனித்துவருதலின்றி யவ்வடக்கியலோடு ஒருசெய்யுளாய் அடிபரந்தொழுகியும் அடக்குமியல்பின் றென்றது முற்கூறிய வுறுப்புக்களைத் தனியேவந்து அடக்கிநிற்கும் இலக்கணமின்றியே வரும். எ-று. எனவே "எழுசீ ரிறுதியா சிரியங் கலியே" (செய். எகூ.) "வெண்பாவியலினும் பண்புற முடியும்" (செய். எஎ.) என்ற விதியாற் பெற்ற இறுதி ஒருதொடராய் இற்றுநிற்றலும், அடி நிமிரும் என்றதனான் முற்கூறியவற்றின் அடிவரையறையை யிகத்தலும், ஒழுகும் என்றதனான் எழுசீ ரிறுதியல்லாத எல்லாவடியுங் கலியேயாயொழுகிவருதலும் பெற்றாம். உ-ம். "மழைநுழைந்து புறப்பட்ட மதியமு ஞாயிறும்போ, லுழை வழங்கு வலம்புரியுந் திகிரியு மொளிசிறப்பப், பச்சென்ன வானிட்ட வில்லேபோற் பசுந்துழாய்க், கச்சென்னக் கனல்கின்ற கதிர்முலைமேற் கவின்செய்ய, வம்மேகத் திடைப்பிறந்த நரையுருமே றதிசயிப்ப, மைம்மேனி மருங்கதிர வரியேறு வால்புடைப்ப, விண்டோயு மணிநீல வெற்பிடை வேய்மிடைந்தாங், கெண்டோளு மிடைநீழ லிளங்கிளிகள் களிகூரக், கொதியாது கொதித்தெறிந்த கோட்டெருமைத் தலையின்மிசை, மிதியாத சீறடி மிதித்தன போற்றோன்றத், தாங்கிய புகர்வாளுங் கேடகமுந் தனித்தனி, வாங்கிய கோளரவு மதியமும் போன்றிலங்க, மைதொடுத்த கடற்புறஞ்சூழ் மலையென்ன மணியல்குல், கொய்துடுத்த பொற்றுகிலின் கொழுஞ்சோதிக் கொழுந்தோட்ட, நீணின்ற வடிவத்தா னெடியோனை முதற்பயந்த, தாயென்று முதுமறை பரவினும், யாயென் றல்ல தியாந்துணி யலமே" எனவரும். தேவபாணியான் வெண்பாவியலான் முடிந்தது வந்துழிக்காண்க. இக்கருத்தறியாதார் வெண்பாவிய

லாற் பண்புறமுடிந்த கலியடியுடையதனை வெண்கலிப்பாவென்பர். யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையதென்பது மேற்கூறியவாறும் இனி வருகின்றவாறுமின்றி யாப்பின்வேறுபடுதலும் பொருளின்வேறுபடுதலும். எ-று. அவை இருசீர்முதல் எண்சீர்காறும்வந்து முற்கூறியவாறன்றி அடிக்கண் நந்நான்காய்வரும். சில பிறவடிவிராயும்வருவனவும், பலவடிவந்தும், நான்கடிவந்தும் பாமயங்கிவருவனவும், இனி யீரடியான்வருவனவற்றுள் ஈற்றடி மிக்குங் குறைந்தும் குறையாதும்வந் தியலசைச்சீர்பெற்றுவருவனவும், ஓசையும் பொருளு மினிதாகாதுவருவனவும், அவ்விரண்டடிச்செய்யுண்முடிந்துநிற்கவும், ஈற்றடி யொன்றும் இரண்டும் மிக்குவருவனவும், பிறவாறாய்வருவனவும், இனி மூவடியான்வருவனவற்று ளீற்றடிகுறைந்தும் முதலடிமிக்கும் இடையடிகுறைந்தும் இறுதியடிமிக்கும் மூன்றடியிற் குறையாதும் பிறவாறாயும் வருவனவும், இம்மூவடியிற்றபின் ஈற்றடியொன்றும் இரண்டும் மிக்குவருவனவும், பிறவாய்வருவனவும், இனி நான்கடியாய்வருவனவற்றுண் முதலிடைகடையிற் குறைந்துவருவனவும், அம்முதலிடைகடைக்கண்ணே யோரடியுமீரடியுஞ் சீர்மிக்குவருவனவும், பிறவாறாய் வருவனவும், அந்நான்கடியிற்றபின் ஈற்றடியொன்றும் இரண்டும் மிக்குவருவனவும், இங்ஙனம் மிக்கு ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வருவனவும், பத்தடுக்கிவருவனவும், அளவியலின் வேறுபடுவனவும், இனி யைந்தடியான் வருவனவற்றுள் ஈற்றடிகுறைந்துவருவனவும், அவ்வைந்தடியிற்றபின் ஓரடியும் ஈரடியும் மிக்குவருவனவும், மூச்சீரான் இற்றுச் சிலசீர் மிக்குவருவனவும், இனி ஆறுமுதலியவடிகளான்வருவனவும்,இவ்விலக்கணமெல்லாம் பெற்றுவருதலுங் கடவுட்பொருட்டொடர்நிலைகள். பல தரவுந் தாழிசையுமாகி யிடைமிடையச்செய்வனவும் அடக்கியலின்றி யடிநிமிர்ந்து அடக்கியல் பெற்றுவருதலும் இன்னோரன்ன பலபகுதிகளுங் கொள்ளப்படும். பொருள் வேறுபடுமென்றலிற் புறப்பொருளான்வருவனவுங்கொள்க. இவற்றுட் சில கந்திருவமார்க்கத்தான் இடைமடக்கிவருவனவுங்கொள்க. உ-ம். நெய்யொடு தீயொக்கச், செய்யானைச் சேர்வார்க்குப், பொய்யாதவுள்ளமே, மெய்யாதல்வேண்டும்" இது குறளடி நான்கான்வந்தது. இது குட்டம்படாது "மையணி கண்டனை வானோ, ரையனை யாயிரம்பேழ்வாய்ப், பையர வம்பல பூணு, மெய்யனை மேயது வீடே" இது சிந்தடி நான்கான்வந்தது. இவ்வாறியலசைச்சீரான்வருவது வந்துழிக்காண்க. "நீறணிந்த திருமேனி நெருப்புருவங் கிளைத்ததுபோற், கூறணிந்த குங்குமங்கொண் டெழுமுலையோர் குறிசெய்ய, வேறணிந்த சுடரெறிப்ப வேனிலாற் கெரிவிழித்த, வேறணிந்த வெல்கொடியோ யெவ்வுயிர்க்கு நிற் றவிர்ந்தனவே" "வென்றான் வினையின் றொகையாய் விரிந்து தங்க, ணின்றாய்ப் பரந்த வுணர்வின் னொழியாது முற்றுஞ், சென்றான் றிகழுஞ் சுடர்சூ ழொளிமூர்த்தியாகி நின்றா னடிக்கீழ்ப்

பணிந்தார் வினைநீங்கி நின்றார்" (சூளா-காப்பு) மூவடிவி னிரண்டு சூழ் சுடரு நாணமுழுது......வே" (சூளா-துறவு-௯௪) இது கொச்சகம்போல அடுக்கிவாராது தாழம்பட்டவோசைத் தரவுகொச்சகம். "ஒருவான்யா றேடுசெ டாடவிப், பெருநாகமே பூணும் பெருமா, னருவானு னயினு மன் பர்க், குருவாயினு னுள்ளத்தி னுள்ளே" இது அளவடிநான்காய் நிலையசைச் சீராகியசொற்கண்வந்து பிறவடி விரா அயிற்று. அசைச்சீர்ன்றி யிங்ஙனம் வருவன தரவுகொச்சகமாம். 1"முழங்குதிரை......பவே" இது பிற பொருளான் அளவொவ்வாது பலவடிவந்து பாமயங்கிற்று. 2"தடக் தாட் கொத்த தமனியச் சிலம்பு, படந்தாழ் கச்சைப் பாம்பொடு மிளிர, வென்றூடு திருத்தாதை வியந்துகை துடிகொட்ட, நின்றூடு மழகளிற்றை நினைவாரோ வினையிலரே" இது நான்கடியுமொத்துப் பாமயங்கிவந்தது. "கங்கைசூடிய கபாலிநின் னடியிணை, தங்கு நெஞ்சினர் தளர்வுறு பிறவியை நீப்பர்" இது ஈரடியா யீற்றடி பிக்கது. "புனைமலர்க் கடம்பின் பூந்தார்ச் சேந்த, நினையடி பரவுதும் யாம்" இது ஈரடியாயீற்றடி குறைந்தது. "கொன்றை வேய்ந்த செல்வ னடியை, யென்று மேத்தித் தொழுவோ நாமே" இது ஈற்றடி முற்குறையாது இயலசைச்சீ ரடிதோறும்வந்தது. 3"அறுவர்க் கறுவரைப் பெற்றுங்......ரே" இது ஓசையும் பொருளு மினிதாகவந்தது. "கொன்றைசேர் சடைமுடியோன் கொந்தழல்போன் மேனியோ, னொன்றிய 4பெண்களை யோவாதே யுள்ளுக, செல்கதி யின் றிச் சிவகதி சேர்வதோர், நல்லறி வெய்துதுநாமே" இது ஈரடியிற்றதன்மே லீற்றடி யிரண்டு மிக்குவந்து ஒன்றுபட்டது. "நண்பிதென்று தீய சொல் லார், முன்பு நின்று முனிவுசெய்யா, ரன்புவேண்டுபவர். இது மூன்றடியான்

---

1 முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலக மேவல்செய மொழி செய் கோமான், வழங்குதிறல் வாண்மாறன் மாச்செழியன் றூக்கரிய வை வேல்பாடிக், கலங்கிநின் றூரொலாங் கருதலா காவண, மிலங்குவா ளிரண்டினு விருகைவீ சிப்பெயர்ந், தலங்கன்மா லையவிழ்ந் தாடவா டும்மிவள், பொலங் கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் றூரொலாம், விலங்கியுள் ளந்தப விளிந்து வே றூபவே" இஃது எழடியாய் முதலிரண்டடியும் அறுசீராய் ஒரோசை யால்வந்து பின்னைந்தடி நாற்சீராய் வேறோசையால்வந்த வேற்றொலிவெண் டுறை என்றூர் யாப்பருங்கலவிருத்திகாரர்.

2 தடந்தாள்கோத்த என்பதும் பிரதிபேதம்.

3 "அறுவர்க் கறுவரைப் பெற்றுங் கவுந்தி, மறுவறு பத்தினி போல்வை யினிரே" என்பது யாப்பருங்கலக்காரிகையுரை.

4 வெண்சனி எனவும் ஒரேட்டிலுள்ளது.

வந்து ஈற்றடிகுறைந்து அசைச்சீரானிற்றது. தாளாள ரல்லாதார் தாம்ப ......ல ராயக்கா லென்னுமென்னும், யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும், பீலிபோற் சாய்ந்து விடும்பிலிற்றி யாங்கே" இது முதலடி மிக்கது. "பூண்ட பறையறையப் பூத மருள, நீண்ட சடையா னாடுமே, நீண்ட சடையா னாடுமென்ப, மாண்டசாயன் மலைமகள்காணவே காணவே" இது இடையடி குட்டம்பட்டு இறுதியடி மிக்கது. கந்திருவமார்க்கத்தான் இடைமடக்கி நான்கடியுமாம். "வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை, பான் மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை, நீனிற வண்ணநின் னிறைகழல் தொழுதனம்" இது மூன்றடியிற்குறையாதது. "பிறையணிந்த சடைமுடி யோன் பிஞ்ஞகன் பெம்மான், கறையணிந்த கண்டத்தான் கையிலங்கு சூலத், திறையணிந்த நெஞ்சினோர்க் கின்றாம் பிறவி; இம்மைப் பிணியு மிய லும் பசியொடு, தம்மைத் துறந்திடுந் தாவில் புகழுளதாம்" இது மூன்றடி யிற்றதன்மே லீரடிமிக்குவந்தது. "சதுர்முக வொருவ நின்சர ணடைந்தே, முதிர் பிறு நீரு ளமுழ்ந்து பில் வங்கநாவாய், திருவுறு நிலைமைத்தாய்ப் போதெ னக் கூறிநிற்பா, ரதிர்வண ரிருகையு மாற்றுறக் கூப்பிநிற்பார்" இது நான் கடியாய் முதலடி குறைந்தது. "தனுவெழ வரிவையைத் தருமணம் புணர்ப் பின், முனிவுறு தொழிலினை மூளா, ணனிதவிர்த் திலர்க்கிடு நாடொறு நாடொறுங், கனியென வினியண்முன் கலந்தமற் றவற்கே" இது இரண்டா மடி குறைந்துவந்தது. "கல்லாலந் தன்னிழற்கீழ்க் கல்வித் துறைபயந்த காமர்காட்சி, நல்லானை நல்லா ளொருபாக மாகிய ஞானத்தானை, யெல் லாரு மேத்தப் படுவானை யென்ஞான்றுஞ், சொல்லாதார்க் கெல்லாந் துய ரல்ல தில்லைத் தொழுமின் கண்டீர்" இது ஈற்றயலடி குறைந்து, சீரடியாசிரி யத்தான் நேரடிமுன்னிறுமென்ற விலக்கணக் கொச்சகம்வந்தும் பாவின் வேறுபட்டதாம். "வண்டணிகொண்ட மதுமலர்க்கொன்றை யினமாலை கொண்டணி செஞ்சடைக் கோட்டிளந் திங்கள்போலப், பண்டணி யாகப் பலர்தொழுங் கங்கைநீர் வைத்தா, னுண்டணி கொண்டநஞ் சுண்பார்க் கமிழ்தாகுமே" இது அளவடியிரண்டு மைஞ்சீரடியிரண்டும் வந்தது. "கண் டெழப் பாவைதனிக்காம் பிடிப்பாராயிற், கொண்டவற்பேணிக் குடிக்கு விளக்காகும், நெண்டெழு நெடுயனை தன்னை நீங்கிப்போய்......மற்றொரு குழகன் றன்னையே" இது முதலடி மிக்கது. "போதுறு முக்குடைப் பொன் னெயி லொருவன், றாதுறு தாமரை யடியே, தாதுறு தாமரை யடியடைந் தாரொனிற், றீதுறு தீவினை பிலரே" இது சிலவடிகுறைந் திடைமடக்கிப் பிறவாறுயிற்று. இவை யளவடியின்வேறுபட்டவாறுங்காண்க. "கடாமுங் குருதியுங் கால்வீழ்த்த பச்சைப், படாமும் புலித்தோலுஞ் சாத்தும் பரம, னிடாமுண்ட நெற்றியா னென்ஞான்றுங் கங்கை, விடாமுண்ட வார்சடை யான் வெண்ணீ றணிந்தான், மெய்யுறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை,

ளையுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை.” “வேயே திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம், வாயே வளர்பவள மாந்தளிரே மாமேனி, நோயே முலைசுமப்ப வென்றோர்க் கருகிருந்தா, ரேயோ விவளொருத்தி பேடியோ வென்றார், எரிமணிப்பூண் மேகலையார் பேடியோ வென்றார்” (சிந்தா-652) இவை நாண்கடிச்செய்யுளிற்றபின் ஈற்றடி யிரண்டும், ஒன்றும் மிக்குவந்தன. “மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத், தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து, சோவரணம் 1போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த, சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே, திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே;” “பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம், விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந், திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய, கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே, கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே;” “மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங், கடந்தானை நூற்றுவர்பா ணற்றிசையும் போற்றப், படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது, நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே, நாராய ணவென்னா நாவென்ன நாவே” (சிலப்-ஆய்ச்சி) இவை படர்க்கைப் பரவலாய் ஒருபொருண்மேன் மூன்றடுக்கி நான்கடியிற்றபின் ஓரடிமிக்குவந்தன. இவ்வாறே பத்தடுக்கியொருபொருண் மேற் பதிகப்பாட்டாய்வருவனவும் இதனா னமைக்க. 2“வெறியுறு கமழ் கண்ணி வே... பின்” இது சிந்தடியான்வந்து ஈற்றடி குட்டம்பட்டது. “வாய்வதின் வந்த குரவையின் வந்தீண்டு, மாய மடமகளி ரெல்லீருங் கேட்டீமின், ஆய மடமகளி ரெல்லீருங் கேட்டைக்க, பாய்திரை வேலிப் படுபொரு ணீயறிதி, காய்கதிர்ச் செல்வனே கள்வனோ வென்கணவன், கள்வனோ வல்லன் கருங்கயற்கண் மாதரா, யொள்ளெரி யுண்ணுமிவ் வூரென்ற தொருகுரல்” (சிலப்-துன்ப) இது ஐந்தடிச் செய்யுண்முடிந்தபின் ஈரடிமிக்கது. 3“கோழியுங் கூவின......வாய்” இது ஐந்தடியான்வந்து ஈற்றடி முச்சீரான் இற்று

1 போர்முடிய என்பதும் பாடபேதம்.

2 வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயினு, முறவுற வருவன வரைப்பன வுரைப்பன்மற், செறிவுறு தொழிலினர் சிறந்தண ரிவர்நமக், கறிவுறு தொழிலரென் றல்லவை சொல்லன்மின், பிறபிற நிகழ்வன பின். இஃதைந்தடியா யீற்றடியொன் றொருசீர்குறைந்துவந்த வோரொலிவெண்டுறை என்றார் யாப்பருங்கலவிருத்திகாரர்.

3 கோழியுங் கூவின குக்கி லழைத்தன, தாழியு ணீலத் தடங்கண்ணீர் போதுமினோ, வாழிசூழ் வையத் தறிவ னடியேத்திக், கூழை நனையக் குடைந்து குளிர்புன, லூழியு மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்” நாற்சீர் நாலடியான்வருவது கலிவிருத்தமென்று வரையறுத்துச்சொன்னார். இஃது ஐந்தடியால்வந்ததாயினும் ஒருபுடையொப்புமைநோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கப்படும். இஃது அவினயனார் காட்டியபாட்டு,இதனைத் தரவுகொச்சகமென்பாருமுளர். என்பர் யாப்பருங்கலவிருத்திகாரர்.

அடியீற்றின்கண் இருசீர்மிக்கது. திருவெம்பாவை யெட்டடியான் வந்திவ்வாறிற்றன. இக்காலத்து ஒருபோகுகளிற் றாவுந் தாழிசையும் இடைமிடைந்துவருமாறுகாண்க. பிறவும் வந்துழிக்காண்க. இவையெல்லாங் கொச்சகமாமென்று கூறுவர்புலவர். எ-று. இனி யிவ்வாறுவந்த கொச்சகங்களையெல்லா மொருவரையறைப்படுத்துப் பாத்தோறு மினஞ்சேர்த்திப் 1பண்ணிற்குத்திறம்போலப் பின்னுள்ள ஆசிரிய ரடக்குவர்; அதனை அகத்தியமுந் தொல்காப்பியமும் உணர்ந்து அவர்தங்கருத்தறிந்த ஆசிரியர் அவ்வாறடக்காமைக்குக் காரணங்கூறுவர். அவர் கூறுமாறு. "கொன்றை வேய்ந்த செல்வ னடியை......நாமே" ஈரடியான்வருதலின் வெண்செந்துறையென்பார்க்கு ஒருசீர்குறைவின்றிவருதலின் வெண்பாவிற் கினமாகாது கலிப்பாவினொருகூற்றிற் கினமாதலுஞ் சீரானுந் தளையானும் ஆசிரியத்திற் கினமாதலு முடைத்தென்றுமறுப்பர். இனிச் சந்தஞ் சிதைந்து புன்பொருளாய்வருவனவற்றைத் தாழிசையெனிற் றாழம்பட்ட வோசையும் விழுமிய பொருளுமில்லனவற்றிற் கப்பெயர்கூறின் முற்கூறிய தாழிசைகட்குஞ் சந்தஞ்சிதைந்து புன்பொருளாய் வருதலுரித்துமாம். அதனான் அப்பெய ராகாதெனவு மறுப்பர். "கன்று குணிலா" (சிலப்-ஆய்ச்சி) இது வெண்டளையான்வருதலின் ஆசிரியத்திற்கினமாகாதென மறுப்பர். இனி இது நான்கடியான்வருமேற் கலிவிருத்தமா மென்பார்க்கு "நெருப்புக் கிழித்து விழித்ததோர் நெற்றி, யுருப்பிற் பொடிபட் டுருவிழந்த காம, 2னருப்புக் கணையா னடப்பட்டார் மாதர், விருப்புச் செயநின்னை விரும்புகின் றாரே" என்றதுகாட்ட வெண்டளைதட்டலின் வெண்டாழிசைக்கு இழுக்கின்மையுங் கலித்தளையின்மையிற் கலிக்கு இனமாகாமையுங் கூறிமறுப்பர். இனிக் குறளடியானுஞ் சிந்தடியானும் வருவனவற்றைச் சீரளவான் வஞ்சிக்கினமென்பார்க்கு அவை நான்கடியான்வருதலானும், பா வேறுபடுதலானுஞ் சீர் இயற்சீராகலானும் ஆகாதென்ப. குறளடிச்செய்யுண் மூன்றுவரிற் றாழிசையெனவுஞ் சிந்தடிச்செய்யுண் மூன்றுவாராவெனவுங்கூறின் அதற்கு மோர்காரணங்கூறலரிதென மறுப்பர்; பிறவு மிவ்வாறு ஒன்றற்கினமாயது ஒன்றற்கினமாயும்வருதலின் இனஞ்சேர்த்தலாகாதென மறுப்பர். இங்ஙனம் இனஞ்சேர்த்துதற்கரியவற்றைக் கலிப்பாவென அடக்கியது பெரும்பான்மை கலிக்கேற்றவோசையே பெற்றுவருதலின். இத்தொல்காப்பியம் "முந்து நூல்கண்டு முறைப்படவெண்ணி" (தொல்-பாயிரம்) நூல்செய்தலின் எல்லாவற்றிற்கு மொரு பரிகாரங்கொடுத்துக் கொச்சகத்து

---

1 பண்களையும் அவற்றின் றிறங்களையும் "பண்ணுங் கிளையும் பழித்த தீஞ்சொல்" என்னும் சிலப்பதிகார வூர்காண்காதையடிக்கு அடியார்க்கு நல்லாருரைத்த விசேடவுரையிற் கண்டுகொள்க.

2 "கருப்புக்கணை" என்பதும் பிரதிபேதம்.

ளடக்கினர். அது மேற்றொட்டுவந்தமரபு. இனிப் பொருள்வேறுபடுதலாவன. தேவரைப் படர்க்கையாக்கிக்கூறலுஞ் சுட்டியொருவர்ப்பெயர்கொளப் படுதலும், புறப்பொருளொடு தொடர்தலும், முற்கூறியபொருள்கள் பிறவாறு வருதலுமாம். இங்ஙனம் பொருள்வேறுபடுதலின் இதனுள் ஓதிய நான்கற்கும் யாப்புவேறுபட்டவற்றிற்கும் பொது வெட்சிமுதற் பாடாண்டிணையீறாகிய பொருள்வேறுபாடுவரையறை என்னே; அவை முற்கூறிய இரண்டற்கும் உரித்தாகலின்; அது பெரும்பான்மை பாணிச்செய்யுட்கு இடைவிராய்வரும். இவ்வாறு கொச்சகத்தினை வரைந்தோதவே ஆசிரியமும் வெண்பாவும் ஒருபொருண்மேற்பல மூன்றும் ஐந்தும் ஏழும் ஒன்பதும் பத்துமாகிவருதலும் பிறவாறுவருதலும் வரையறையிலவாயின. அவை ஐங்குறுநூறு, முத்தொள்ளாயிரம், கீழ்க்கணக்குமுதலியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங்காண்க. தேவபாணியில்லாச் செய்யுளெல்லாம் யாப்பும்பொருளுஞ் சோரவேறுபடுமென்றுணர்க. அது முற்கூறியவற்றுட்காண்க "வெண்பலிச் சாந்த முழுமெய்யு மெய்பூசி, யுண்பலிக் கூரூர் திரிவது மேலிட்டுக், கண்பலிச் சென்று புகுந்த கபாலிமு, னெண்பலித் தாளிவள் யாதுவாய் வாளே.' இது "காமப் பகுதி கடவுளும் வரையார்" (தொல். புறத். ௨௮) என்ற பாடாண்டிணையாகலின் பொருள் வேறுபட்டது. 'கன்றுகுணிலா' (சிலப்-ஆய்ச்சி) என்பது அநந்லத்திற்குரியதெய்வத்தை அவர் பராவுதலிற் கைக்கிளையன்று. இவை பலவுறுப்பிழந்தனவேனுங் கொச்சகவொருபோகென்னும் பொது விலக்குண்ணுமையிற் பொதுப்பெய ரெல்லாவற்றிற்குமாகுமென்று எய்துவித்தார். ஆகுமென்றதனன் ஒருபோகென்னுது சிறுபான்மை கொச்சகமென்றுவழங்குதலாமென்றுகொள்க. (௧௪௯)

௧௫௦. ஒருபான் சிறுமை யிரட்டியத னுயர்பே.*

இது, அதிகாரத்தானின்றநான்கினுள் இறுதிநின்ற அடக்கியலின்றியடிநிமிர்ந்த கொச்சகவொருபோகிற்கு அளவுகூறுகின்றது.

இ-ள். ஒழிந்தகலிக்கெல்லாம் உள்ளுறுப்புப்பற்றி யளவுகூறினர். பத்தடியிற் சுருங்காது இருபதடியினேறாதுவரும் அடக்கியலின்றி அடிநிமிர்ந்தொழுகுமென்ற கொச்சகவொருபோகு எ-று.

இது முன்னடிநிமிர்ந்தொழுகுமென்றதற்கோர் வரையறைகூறி ஐயமகற்றியது. இஃ தேற்புழிக்கோடலென்பதனனும் அதுவென்ற ஒருமையானுங் கொண்டது. உ-ம். "தடங்கடற் பூத்த தாமரை மலராகி, யடங்காத முரற்சியா னருமறை வண்டிசைப்ப, வாயிர வாராழி யவிரிதழின்

*எ-து, மேலதற்கோர்புறனடையுணர்......ற்று. மேற்சொல்லப்பட்ட கொச்சகவொருபோகு பத்தடிச் சிறுமையாகவும், இருபதடிப் பெருமையாகவும் வரும் எ-று. ஏ-து உரையாசிரியருரை.

வெளிப்பட்ட, சேயிதழெனத் தோன்றுஞ்செம்பகலி னிரவகற்றி, பகைமணிப் பகைநீங்கப் பருவத்து மழையானே, நெடுநிலங் குளிர்கூர நீர்மைசா னிழ ஞறி, யண்டங்கள் பலபயந்த வயன்முதலா மிமையோரைக், கொண்டங்கு வெளிப்படுத்த கொள்கையை யாதலி, ஞேங்குயர் பருதியஞ் செல்வநின், னீங்கா வுள்ள நீங்கன்மா ரெமக்கே" இது பத்தடியிற்சுருங்காது அடக்கிய லின்றி யடிநிமிர்ந்தொழுகியது. மே லிருபதடி வந்துழிக்காண்க. (கடுo)

கருக. அம்போதரங்க மறுபதிற் றடித்தே
செம்பால் வாரஞ் சிறுமைக் கெல்லே.*

இது மேனின்ற அதிகாரத்தாற் கடவுள்வாழ்த்தாகிய அம்போதரங்க வொருபோகிற்கும் அடிவரையறைகூறுகின்றது. அம்போதரங்கவொரு போகு, தன்னுறுப்பெல்லாங்கூடி யறுபதடித்தா யொவ்வொருபதத்திற்கு இரண்டடியாகிய நூற்றிருபதடியையுடைத்தாயும்வரும். சிறுமைக் கெல்லை கூறுமிடத்து அவ்வறுபதிற் செம்பாகமாகிய முப்பதடியிற் பாகமாகிய பதி னைந்தடியான்வரும் எ-று.

ஏகாரம்-எதிர்மறை. அறுபதிற்செம்பால் முப்பதில்வாரம் பதினைந் தென்றுணர்க. எனவே, இடையளவு அறுபதும், தலையளவு அதனிரட்டி யாகிய நூற்றிருபதும், கடையளவு பதினைந்துமாயிற்று. இனி அறுபதும், முப்பதும், பதினைந்தும் என சிற்றெல்லைக்கே தலையளவு இடையளவு கூறிற்றெனக்கொண்டு இவற்றிற்கடையளவாகிய சிற்றெல்லைக்கும் பே ரெல்லைமுப்பதும், இடையளவாகியசிற்றெல்லைக்கு பேரெல்லையறுபது மெனப் பொருளுரைக்கிற் றலையளவிற் சிற்றெல்லைக்கும் இடையளவிற் பேரெல்லைக்கும் வேறுபாடின்றியும் இடையளவிற் சிற்றெல்லைக்கும் கடை யளவிற்கும் வேறுபாடின்றியும் நிற்குமென மறுக்க. அங்ஙனம் நூற்றிரு பது தாவிற்கெல்லை மேனின்றஅதிகாரத்தான் இருபதாகவும் அதனோ டொத்துவருதலிலக்கணத்தவாகிய இருபதடியாகவும், நாற்பதடி பெறப் படும்; சிற்றெண்பதினாறும் அராகம் நான்குமாக இருபதடிபெறப்படும். கொச்சகம் இருமூன்றாகி ஒன்றுபத்தடிபெற்று அறுபதடியாம். இனிப் பதினைந்தடியான்வருவன நெடுங்கொச்சகம் இருமூன்றாகி, ஆறும், அராகம் ஒன்றுஞ் சிற்றெண் நான்கும் அடக்கியலிரண்டுமாகப் பதினைந்தடியாம். இடையளவிற்கும் இவ்வாறே வருமாறறிக. மேலளவு கூறும்வழிக்கூறாது மேற்கூறுகின்றபாவிற்கு ஈண்டளவுகூறினார் அதிகாரம்பற்றி. (கருக)

---

* எ-து, அம்போதரங்கவொருபோகுக்கு அடிவரையறையுணர்...ற்று. அம்போதரங்கவொருபோகு அறுபதடி பெருமைக்கெல்லையாம். நடுவாகிய இலை சிறுமைக்கெல்லையாம் எ-று. "செம்பால்வார" மென்பது செம்பாதி யெனவுமாம். முப்பதடி சிறுமை எ-று. எ-து, உரையாசிரியருரை.

௧௩௨. எருத்தே கொச்சக மாரகஞ் சிற்றெ
ணடக்கியல் வாரமோ டந்நிலைக் குரித்தே.*

இது முன்னர்க்கூறிய அம்போதரங்கவுறுப்பு இவையைந்துமெனக் கூறியவாறு.

இ-ள். தரவுங் கொச்சகமும் அராகமுஞ் சிற்றெண்ணும் அடக்கியல் வாரமுமென ஐந்துறுப்புடையது அம்போதரங்கவொருபோகு எ-று.

தரவெனினும் எருத்தமெனினும் ஒக்கும். பலகோடுபட அடுக்கி யுடுக்கும் உடையினைக் கொச்சகமென்பவாகலின், அதுபோலச் சிறியவும் பெரியவும் விராஅயடுக்கியுந் தம்மு ளொப்பவடுக்கியும் வருஞ்செய்யுளைக் கொச்சகமென்றார். இது ஒப்பினாகியபெயர். இக்காலத்து இது மகளிர்க் குரியதாய்க் கொய்சகமென்று வழங்கிற்று. இது முறையே சுருங்கிவரும் எண்ணுப்போலாது அடியுஞ் சீருந் தளையும் வேறுபட்டுவருமென்றுணர்க. வெண்பாவாகிற் பெரும்பான்மை அராகமாயது அறுதுகடுகிச்சேறல். பிறி தொன்றுபெய்து ஆற்றவேண்டுந்துணைச்செய்யதாகிய பொன்னை அராகித்த தென்பவாகலின் இதுவும் ஒப்பினாகிய பெயர்; மாத்திரை நீண்டு துணிந்து வாராது குற்றெழுத்துப்பயின்று உருண்டுவருதலின். சிற்றெண்ணவது; நால்வகையெண்ணினும் இறுதிநின்ற எண்வாரமுற்கூறிற்று. உ-ம். "செஞ் சுடர் வடமேரு விருமருங்குந் திரிகின்ற, வெஞ்சுடரு மதியும்போல் வேலொடுகே டகஞ்சுழல, மாயிரு மணிப்பீலி மயிலெருத்திற் றோன்றுங்காற்,

*என்பதுமது. அம்போதரங்கத்திற் குறுப்பாமாறுணர்......ற்று. ஈண் டெருத்தென்பது தரவு, கொச்சகமும் அராகமும் என்று சொல்லப்பட்டன. எண்ணினுட் பேரெண்ணிற் சிற்றெண்வரப்பெறுமாயின் இனிச் சொல்லப் பட்ட அறுபதுறுப்பும் முறையான்வருதலும் மயங்கிவருதலுங்கொள்க. பரிபாடற்கு இவைதாமே யுறுப்பாய் அதனோ டிதனிடைவேறுபாடென்னை யெனின் அறுபதிற்றடியிற் குறைந்துவரின் அம்முறை பிறழ்ந்துவரு மெனவும், ஒத்துவரின் அறுபதின்மிக்குவருமெனவுங் கொள்ளப்படும். உ-ம். [1]"கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தெற்றத், தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும், வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு, மன்னவை பிறவும் பன்மலர் துதையத், தழையுங் கோதையு மிழையு மென்றிவை, தைஇயினர் மகிழ்ந்து திளைவிளை யாடு, மடமொழி யாயத் தவரு ளிவள்யா ருடம்போ, டென்னுயிர் புக்கவ ளின்று" தரவு. ஓஒவிவள், பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற், திருமாமெய் தீண்டல ரென்று கருமமா, வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ், சொல்லாற் றரப்பட் டவள்; சொல்லுக, பாணியே மென்று ரறைகென்றார்

1 முல்லைக்கலி—௨.

சேயொளி கடற்பிறந்த செந்தீச் சிறந்தெறிப்ப, மறுவருந்தம் மனத்து வகைக் கலுழ்ச்சியான் வளர்த்தெடுத்த, வறுவருக்தம் முலேசுரந்தாங் ககல் விசும்பு சிலதுவற்ற, ஆருருவத் தெயின்மூன்று மொருங்கவித்தோன் வியப் பெய்த, வீருருவத் தொருபெருஞ்சூர் மறுங்கறுத்த விகல்வெய்யோய்; ஆங்க, வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத், தனைவருந் தத்த மறம் புரிந் தாங்கு, முனையடு கொற்றத்து முன்னுன் குருவிற், கனைகடல் சுட்டன கண்; தேவரு மக்களுஞ் சீற்றத்தா னஞ்சாமைக், காவல் புரியுங் கதிர்மதி போலு, மூவிரு தோன்றன் முகம்; மடமகள் வள்ளி மணிக்கம் பலம்போ, லிடையிடை சுற்றுத லின்றுந் தவிரா, தொடையமை தார்கடம்பன் றோள்; அவ்வழி, யடியிணை சேரா வவுணரை நுங்கிப், பொடிப்பொடி யாகிப் பொருப்பொடு மாய, விடியுமிழ் வானத் திடைநின்று கூஉங், கொடியணி கோழிக் குரல்; விழுச்சி ரமரர் விசும்பிடைத் தோன்றிப், பழிச்சினின் றூர்த் தார் பலர்; உருகெழு முருகிய வுருமென வதிர்தொறு, மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்; பெருகிய வருமறை பெறுநெடு மொழியொடு, பொருள வழியிசை புகல்வன சிறுகுறள்; சிவந்தன திசை சிலம்பின மலை, நிவந் தன தலை நிரம்பின குறை; ஆர்த்தன மறை யாடினர் பலர், போர்த்தன துகன் பொழிந்தனர் மலர்; ஆங்கணந் தோன்றிய வடிபோர் வென்றியின்,

---

பாரித்தார், மாணிழை யாருகச் சாறு; சாற்றுள், பெடையன்னர் கண் பூத்து நோக்கும்வா யெல்லாம், விடைபெறி னேளர் தகைத்து". இவை கொச்சகம். "தகைவகை மிசைமிசைப் பாய்மா ரார்த்துட, னெதிரெதிர் சென்றார் பலர்; கொலைமலி நிலைசெறி செயிர் சினஞ்சிறந், துருத்தெழுந் தோடின்று மேல்; எழுந்தது துகள், எற்றது மார்பு, கவிழ்ந்தன மருப்புக், கலங்கினர் பலர்; இவை சிற்றெண். அவருள் மலர்மலி புகலெழ வலர்மலி, தருமணி புரைமிமிர் தோள் பிணைஇ, எருத்தோ டிமிலிடை தோன்றினன் றேன்றி, வருத்தினன் மன்றவவ் வேறு;" முடுகியலடிவந்த கொச்சகம். "எற்றெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ, வேறுடை நல்லார் பகை; மடவரே நல்லர்யா மக்க ணெருனே, யடலேற் றெருத்திறுத்தார்க் கண்டு மற் றின்று, முடலேறு கோட்சாற்று வார்" இவையுங் கொச்சகம். "ஆங் கினித், தண்ணுமைப் பாணி தளரா தெழூஉகின், பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித், திண்டோட் டிறலொளி மாயப்போர் மா மேனி, யந்துவ ராடைப் பொதுவனே டாய்ந்த, முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி, மன்றம் பரந்த துரை. (கலி கமஉ.) இது.........பிறவும் இன்னதாங்கொள்க. யாப்பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சகவொரு போகை அதன்பின்னரோதினமையான் இதற்குங் காமப்பொருண் மேற் பட்டது.ஙஎ-து. உரையாசிரியருரை.

வீங்கிருந் தொடித்தோள் விடலை நினக்கே, யாமறி யளவையிற் றமிழ் புணர்ந் தேத்துக, நின்னீ தக்க தாயினு நின்னெதிர், நாணில மாக வேண்டும் யாணர்க், கடம்புங் களிமயிற் பீலியுந் தடஞ்சுனை, நீரொடு நின்வயின் மாந்தர், வாராப் புலமை வருகமா ரெமக்கே” என்பது இடையளவம்போதரங்க வொருபோகு. இவ்வுறுப்புக்களின் அளவுகூறாமையின் ஏற்றவாறறிந்து கூறப்படும். இது நாற்பத்துநான்கடியான் வந்தது. இவை யிக்காலத்து மிகவழங்காது. ஒருபோகுபோலன்றி யிதற்களவை முற்கூறியது அம்போதரங்கவொருபோகின் அளவே மேற்கூறுகின்ற மூன்றுபாக்கட்கும் அளவென்றற்கு. இவ்வதிகாரத்தான் வருகின்றவற்றுக்கு இதற் குறுப்பிலக்கணம் ஏற்பன வறிந்துகொள்க. வெள்ளடியியலாற்றிரிவின்றிவருமென்றலின். அவ்வளவை மேல்வருகின்ற கலிவெண்பாட்டிற் கின்றென்றுணர்க. (கருஉ)

கருங. ஒருபொரு ணுதலிய வெள்ளடி யியலாற்
றிரிவின்றி வருவது கலிவெண் பாட்டே.*

இது முறையே கலிவெண்பாக்கூறுகின்றது.

ஒரு பொருளைக் கருதிவாராநிற்ப வேறுமொருபொருளே படவுஞ் சொற்றொடர்ந்துகிடப்பத் தொடுக்கப்பட்ட வெள்ளையடியாற் றிரிவின்றி வருவது கலிவெண்பாட்டாம். எ-று. இயலென்றதனாற் சட்டையடியாய் வருதலுந் தனக்குரிய வெண்டளையான்வருதலும் பன்னீரடியான்வருதலும் பிறவுமாகிய இலக்கணஞ் சிதையாதனவற்றுக்கே ஒருபொருணுதலி வரவேண்டுவது. அவ்வாறன்றித் தீர்ந்துவருவன ஒருபொருணுதலாக் கலிவெண்பாவாம். எ-று. அவ்விலக்கணத்திற்றிரிந்துஞ் சீருந் தளையுஞ்

---

*எ-து, கலிவெண்பாவாமாறுணர்-ற்று, ஈற்றடியளவும், ஒருபொருளைக் குறித்த வெள்ளடியியலால் திரிவின்றிமுடியுமது கலிவெண்பாட்டாம் எ-று. கலிவெண்பாட்டெனினும் வெண்கலிப்பாட்டெனினு மொக்கும். “வெள்ளடி யியலான்” என்றமையான் வெண்டளையான்வந் தீற்றடி முச்சீரான்வருவனவும் பிறதளையான்வந் தீற்றடி முச்சீரான்வருவனவுங் கொள்க. உ-ம் “மரையா மரல்கவர மாரிவறப்ப, வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர், சுரையம்பு மூழ்கிச் சுருங்கிப் புரையோர்த, முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத், தண்ணீர் பெறாஅத் தடுமா றருந்துயரங், கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றா, லென்னீ ரறியாதீர் போல விவைகூற, னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு, மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு, துன்பந் துணையாக நாடி னதுவல்ல, தின்பமு முண்டோ வெமக்கு” (பாலைக் (கலி-௫.) இது வெண்டளையான்வந்த வெண்கலிப்பா. அஃதேல், இது நெடுவெண்பாட்டிற்கோதிய விலக்கணத்தான் வருதலின், பஃறொடைவெண்பா

சிதைந்தும் அடியிகந்தும் பாவகை சிதைந்தும் ஒருபொருணுதலியும் வெண் பாவியலான்வந்தனவுங் கலியோசையாமென்றுணர்க. இதனான் ஒருபொரு ணுதலியது கட்டளையாய்த் திரிவின்றிவருமெனவும் ஒருபொருணுதலாதது சீர்வகையாய்த் திரிவுடைத்தாய்வருமெனவுங் கூறிற்றாம். உ-ம். "அரும் பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப், பிரிந்துறை சூழாதி யைய விரும்பி நீ, யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின், மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண், சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா, தொழிந் தவ ரெல்லாரு முண்ணுதுஞ் செல்லா, ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார், வளமை விழைதக்க துண்டோ வுளநா, ளொரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை, யொன்றென்கூ றாடை யுடுப்பவரே யாயினு, மொன் றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ, சென்ற விளமை தரற்கு" (கலி. கஅ.) இது பன்னீரடியான்வந்து ஒரு பொருணுதலிய கட்டளைக் கலி வெண்பா. இதனுட் பெண்டன்மைக்கு ஏலா நுண்பொருளினைத் தலைவ னெதிர்நின்றுணர்த்துவான் செவ்வன்கூறாது தலைவன் பண்டுகூறின சில வற்றைவாங்கிக்கொண்டு கூறுங் கூற்று. நீ மறந்தாயென்பது யாம் உண ரக் கூறுகின்றாள் இவளென்பதுபடநின்றமையின் ஒருபொருணுதலிற் றாயிற்று. அது அகப்பொருளேயாமாறும் ஒழிந்தயாக்களும் அவ்வாறுவரு மேனும் அங்ஙனம் நுதலியபொருளான செய்யுள் வேறுபடாமையின் ஆண்டு ஆராய்ச்சியின்று. இது வெண்பாவாயிற் குறித்தபொருளை மறைத் துக்கூறாது செப்பிக்கூறல்வேண்டும். இஃ தன்னதன்றிப் பொருள்வேறு

வாம்; வெண்கலிப்பாவென்றதென்னையெனின், புணர்தல், பிரிதல், இருத் தல், இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை, பெருந்திணையெனவுஞ் சொல் லப்பட்ட பொருள் ஏழனுள்ளும் யாதானுமொருபொருளைக்குறித்து ஏனைக் கலிப்பாக்கள்போலத் தரவும், தாழிசையும் தனித்தனி பொருளாகச் சுரித கத்தாற் றொகுத்துவரு நிலைமைக்கன்றித் திரிவின்றிமுடிவது; அதனைக் கலிவெண்பாவெனவும், புறப்பொருட்கண்வரும் வெண்பாக்களைப் பஃ றொடைவெண்பாவெனவும், பரிபாடற்குறுப்பாய்வரும் பஃறொடைவெண் பாக்களைப் பரிபாடலெனவும், கொச்சகக்கலிப்பாவிற் குறுப்பாய்வரும் பஃ றொடைவெண்பாவைக் கொச்சகக்கலிப்பாவெனவும் கூறுதலின் அது ஆசி ரியர் கருத்தென்று கொள்க. அன்னதாக "நெடுவெண் பாட்டே குறு வெண் பாட்டே" (செய். கசஅ.) என்னும் யாப்பினால் வேறுபடுத்தாராகிக் கைக்கிளை பரிபாட் டங்கதச்செய்யுளெனப் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்தோதினமையானுங் கொள்க. இனி, முல்லைக்கலியுள் "தீம் பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந், தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த, பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப், பாங்கரு முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம், புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா,

படுதலானுந் துள்ளிவருதலானுங் கலிவெண்பாட்டாயிற்று. "மரையா மரல்கவர" (கலி. கூ.) என்னும் பாட்டுப் பதினோரடியான் ஒருபொருளுநுதலிற்று. நூற்றைம்பதுகலியுட் கலிவெண்பாட்டு எட்டு. அவற்றுள் ஒருபொருணுதலிவருவனவற்றின்பொருள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் இயலென்றதனாற் பன்னீரடியி னிகந்து ஒருபொருணுதலிவருவனவும் அங்ஙனம் வந்து தளை விரவி வருவனவுங்கொள்க. "சுடர்த்தொடீ கேளாய் தெருவினு மாடும்" (கலி. ருக.) என்னும் பாட்டு அடியிகந்து ஒருபொருணுதலியது. "கயமல ருண்கண்ணாய் காண வொருவன், வயமா னடித்தேர்வான் போலத் தொடைமாண்ட, கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு, முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற, நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும், பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வா யிற், சேயேன்மன் யானுந் துயருழப்பே னாயிடைக், கண்ணின்று கூறுத லாற்று னவனாயிற், பெண்ணென் றுரைத்த நமக்காயி னின்னதூஉங், காணான் கழிதலு முண்டென் றொருநாளென், றோணெகிழ் வுற்ற துயராற் றுணிதந்தோர், நாணின்மை செய்தே னறுநுதா லேன, லினக்கிளி யாங் கடிந் தோம்பும் புனத்தய, லூசலூர்ந் தாட வொருஞான்று வந்தானை, யைய சிறிதென்னை யூக்கி யெனக்கூறத், தையா னன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு, பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின் வாயாச்செத், தொய் யென வாங்கே யெடுத்தனன் கொண்டான்மேன், மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் னாயிடை, மெய்யறிந் தேற்றெழுவே னாயின்மற் றொய் யென, வொண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பி, [1]னங்க ணுடைய னவன்" (கலி. நஎ.) இது தையா னன்றென்று என மெய்யினும் பொய் யினும் வழிநிலைபிழையாமற் றோழி தலைவிக்குரைத்தது. இதுகேட்டுத்

மொருங்கு விளையாட வவ்வழி வந்த, குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன் மற் றென்னை, முற்றிழை யேர்மட நல்லாய்நீ யாடுஞ், சிற்றில் புனைகோ சிறிதென்று னெல்லாநீ, பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப் பாய், கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய், தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய, கோதை புனைகோ நினக்கென்று னெல்லாநீ, யேதி லார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப், பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா, யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற், றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர், செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது, மையலை மாதோ விடுகென்றேன் றையலாய், சொல்லிய வாறெல்லா மாறுமா றியான் பெயர்ப்ப, வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ, யாயர் மகளி ரியல் புரைத் தெந்தையும், யாயு மறிய வுரைத்தியின் யானுற்ற, நோயுங் களை குவை மன்" (கலி. ககக.) என்னும், இம் முல்லைக்கலிவெண்பாவினுட் பிற தளைவருதலிற் பிறதளையானும் வந்த கலிவெண்பா. எ-து. உரையாசிரிய ருரை.

[1] "நமமேமலே ஒரு கண்ணோட்டமுடையன்" என்ற வுரையானு மிதுவே பாடமாதல் காண்க.

தலைவன் தன்னை நயந்தானென இவள்கருதினாள்போலுமெனத் தலைவி கருதுமாற்றாற் றோழிகூறியவாறும் இதனானே தலைவி யினிக் கரந்தொழுகி உடம்படுக்குமென்பது மொருபொருளாயிற்று. இது "அறக்கழிவுடையன" (தொல். பொருளி. உச.) என்னும் பொருளியற்சூத்திரத்தில் வழுவமைத்தவாறுங் காண்க. "தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந், தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த, பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப், பாங்கரு முல்லையுந்தாய பாட்டங்காற் றோழிநம், புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா, மொருங்கு விளையாட வவ்வழி வந்த, குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை, முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ், சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ, பெற்றேம்யா மென்று பிறர் செய்த வில்லிருப்பாய், கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிய, தாது சூழ் கூந்தற் றகைபெறத் தைஇய, கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ, யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப், பேதையை மன்ற பெரிதென்றே னாயிழா, யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற், றொய்யிலெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர், செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது, மையலை மாதோ விடுகென்றேன் றையலாய், சொல்லியவாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப, வல்லாந்தான் போலப் பெயர்ந்தானவனைநீ, யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும், யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற, நோயுங் களைகுவை மன்" (கலி. ககக.) இது தளைவிரவி யைஞ்சீரடியும் வந்து ஒரு பொருணுதலாதது. "இடுமு ணெடுவேலி" (கலி. கஉ) என்னும் பாட்டுத் தளைவிரவி யவ்வாறுவந்தது. பாவகை சிதைந்தன வந்துழிக்காண்க. ஒன்றெனமுடித்தலாற் பொருள்வகைசிதைதலுங் கொள்க. அவ்விரண்டுஞ் சேரச் சிதைந்தன இக்காலத்தார் கூறுகின்ற உலாச்செய்யுளாம். இனி யிக்காலத்தார் கூறும் மடற்செய்யுளும் பாவகை சிதைவின்றேனும் 1"ஏறிய மடற்றிறம்" ஆகிய பெருந்திணைப்பொருளாகலின் அஃதனைக் கலிவெண்பாட்டென்று கோடும். மேலிற் சூத்திரத்தாற் கூறுங் கலிவெண்பாட்டுக்களும் பெருந்திணையாயும் வருதலின்; இதனை வெண்பாவெனிற் றொல்காப்பியனார்..................கலிவெண்பாப் பெருந்திணைப்பொருளின்வாராதென்றுகொள்க. "வெண்பா விதியான் விரவுறுப்பின்றித், தன்பா வகையொடு பொருந்திய பொருளே, யொன்றுவிளைந்திற்ற விறுதித் தாகும்" என்று இசைநூலினும் இவ்வாறேயோதிக் கொச்சகச் செய்யுளுமுளவென்றார். இதனுள் விரவுறுப்பின்றியென வேண்டாது கூறியவதனால் விரவுறுப்புடையது வேறுபொருள்விளையாதெனவும், விரவுறுப்பில்லது வேறுபொருள்விளைத்து இறுமெனவும் அவ்வாறே விரவுறுப்பில்லாக் கலிவெண்பாட்டும் வேறுபொருள் விளக்குமென ஈண்டுக்கூறி விரவுறுப்புடையது "வெண்பாவியலான் வெளிப்படத்தோன்று"மென்று மேலைச்சூத்திரத்தாற் கூறுகின்றார். (கருஅ)

1 அகத்திணையியல் ருக.

கருசு தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து
ஐஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும்
வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்.*

இது மேல் வெளிப்படுபொருட்டெனப்பட்ட கலிவெண்பா விரவுறுப் புடைமையின் வேறுவேறு கூறுகின்றது.

இ-ள். தரவு ..தும் எ-து தரவிற்கும் போக்கிற்கும் இடையன பாட்டாகிப் பயின்றும். ஐஞ் .....யும் எ-து. வேறுநின்றவொருசீரினை யளவடியோடடக்கிக்கூற ஐஞ்சீராகியும். ஆறு......றும் எ-து அவ்வாறே யிருசீரடுக்க ஆறுசீர் பெற்றும். வெண்...றும் எ-து வெண்பா வெனப்பட்ட வுறுப்பினியற்கை சிதையாமற் பொருள்புலப்படத் தோன்றும் எ-று.

எனவே தரவும் போக்கும் முற்கூறியவாறே முன்னும் பின்னும் நிற்றலும் சுரிதகமாயின் அகவலும் வெள்ளையுமாகிவருதலும் அவை தனிச்சொற்பெற்றும் பெறாதும்நிற்றலுங் கொள்க. பாட்டிறுதிற்கும் போக்கினைத் தரவோடு முற்கூறியது தரவிறுதி சீரானிறுமாறுபோல வெள்ளைச் சுரிதகமும் ஒரோவழிச் சீரா னிறுமென்றற்கு. உ-ம், "நயந்தலை மாறுவர்" (கலி. அ௦.) என்னும் மருதக்கலியுள் "ஐயவெங், காதிற் கனங்குழை வாங்கிப் பெயர்தொறும், போதில் வறங்கூந்தற் கொள்வதை நின்னையா, மேதிலார் கண்சாய நுந்தை வியன்மார்பிற், றுதுதேர் வண்டின் கிளைபடத் தைஇய,

* எ-து, தரவாகிய வுறுப்பும், சுரிதகமாகிய வுறுப்பும் முதலு முடிவும் வருதலின் இடைவந்து தோன்றியும். எ-று. உம்மையான் வாராதும் என்று கொள்க. ஆறு மெய் பெற்றும் எ-து, தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடியென்னு மாறுறுப்பினையும் பெற்றும். எ-று. உம்மையாற் பெறாது மென்று கொள்க. வெண்பா...... தோன்றும் எ-து, மேற்சொல்லப்பட்ட வுறுப்புக்களையுடைத்தாகியும் இலதாகியும் வெண்பா வியல்பினுற் புலப்படத் தோன்றும் எ-று. புலப்படத் தோன்றுதலாவது, எனையுறுப்புக்களில் வெண்பா மிகுதல். இன்னு மிதனுனே பிறபாவடிகளும் வந்து வெண்பாவியல்பினுன்முடிதலுங் கொள்க. "ஆறு மெய் பெற்று" மென்பதற்கு அராகமென்னு மூன்றுறுப்பைக் கூட்டி, முடுகியலென்னு மூன்றுறுப்பைக் கழித்து, உரைப்பது மொன்று. உ-ம் தரவு, குறிஞ்சிக்கலியுள் "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள், டீமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனே டொழுகலா, னீணுக நறும் பைந்தார் தயங்கப்பாய்ந் தருளினுற், பூணுக முறத்தழீஇப் போதந்தா னகலகலம், வருமுலை புணர்ந்தன வென்பதனு லென்றோழி, யருமழை தரல் வேண்டிற் றருகிற்கும் பெருமையளே" இது தரவு; இதனுள் இரண்டா

கோதை பரிபாடக் காண்கும்" எனத் தேமாவா னிற்றது. இனிப் பாட்டினைப் போக்கின்பின்வைத்ததனாற் போக்குப்போ னாற்சீரா னிறும்பாட்டும் வருஞ் சிறுபான்மையென்றுகொள்க. உ-ம். "காந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றீதே, பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு" (கலி.கசக) எனவரும். இங்ஙனம் வைப்பவே வருகின்ற ஐஞ்சீரடுக்கலும் ஆறுமெய் பெறுதலும் இப்பாட்டின்கணன்றி யேலாவாயின. இதனை யீற்றுக்கண் வைத்ததனானே மேற்கூறுங் கொச்சகமுந் தரவும் போக்குமின்றி யிப் பாட்டுமிடைந்தும் வருமென்பதூம் இவ்வதிகாரத்தாற் கொள்க. மெய் யென்றதனான் அடுக்குஞ்சீ ரதன் முதலினும் இறுதியினும் வருமென்று கொள்க. இயற்கைசிதையாமற் றோன்றுமெனவே கட்டளையுங் கட்டளை யல்லதுமென்ற வெண்பாவிலக்கணமிரண்டுஞ் சிதையாமைவருமென்றா ராம். வெளிப்படவென்றதனாற் றளைவிரவிவருதலுங் கொள்க. தரவும் போக்குமென்ற உம்மைகள் எண்ணும்மைகள். ஒழிந்த மூன்றும் இறந்தது தழீஇய எச்சவும்மை. கலிவெண்பாட்டுத் தனிநிலையின்றி விரவுறுப்பாயும் வருமென்றலின், "சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும், பிறர் நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல், சான்றவர்க் கெல்லாங் கடனானலிவ்விருந்த, சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பென் மான்ற, துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி, யொளியோ டுருவென்னைக் காட்டி யளிய

மடி யைஞ்சீரான் வந்தது. "அவனுந்தான், என லிதணத் தகிற்புகை யுண்டியங்கும், வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங், கானக நாடன் மகன்" இதனுள் முதற்கணின்றது கூன். "சிறுகுடியீரே, வள்ளி கீழ்விழா வரைமிசைத் தேன்றொடா, கொல்லை குரல்வாங்கி யீனா மலைவாண, ரல்ல புரிந்தொழுக லான்;" இதனுள் முதலாசிரிய வடி. "காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின், வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர், தாம்பிழையார் கேள்வற் றொழு தெழலாற் றம்மையருந், தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;" இவை மூன்றுங் கொச்சகமெனப்படும். "எனவாங்கு;" தனிச்சொல் "அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட, வென்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;" இது வெள்ளைச் சுரிதகமாகி யிடைவந்தது. "அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந், தொருபக லெல்லா முருத் தெழுந்தாறி, யிருவர்கட் குற்றமு மில்லையா லென்று, தெருமந்து சாய்த்தார் தலை; தெரியிழாய் நீயுநின் கேளும் புணர, வரையுறை தெய்வ முவப்ப வுவந்து, குரவை தழீஇ யா மாடக் குரவையுட், கொண்டு நிலைபா[illegible];" இவையிரண்டுங் கொச்சகம். "நல்லாய்;" தனிச்சொல். "நன்னா டலைவரு மெல்லை நமர் மலைத், தந்நாண்டாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல்;" இது பேரெண். "புனவேங்கை தாதுக்கும் பொன்னறை முன்றி, னனவிற் புணர்ச்சி

ளென், னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே, னணியலங் காவி ரைப் பூவோ டெருக்கின்,பிணையலங் கண்ணி மிலேந்து மணியார்ப்ப, வோங் கிரும் பெண்ணை மடலூர்ந்தெ னெவ்வநோய், தாங்குத றேற்ரு விடும்பைக் குயிர்ப்பாக, வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது, பாடுவென் பாய்மா நிறுத்து; யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப, மாமேவி நின்று மடல்புணையா நீந்துவேன், றேமொழி மாத ருறாஅ துறீஇய, காமக் கடலகப் பட்டு; உய்யா வருநோய்க் குயவாகு மைய, லுறீஇயா ளீத்தவிம் மா; காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ, ஞெணெழின் மூற்றி யுடைத்துள் ளழித்தரு, மாணிழை மாதரா ளேஎரெனக் காமன, தாணையான் வந்த படை; காமக் கடும்பகையிற் றோன்றினேர்க் கேம, மெழினுத லீத்தவிம் மா; அகையெரி யானுதென் னுருயி ரெஞ்சும், வகையினு னுள்ளஞ் சுடுதருமன்னே, முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர், தகையாற் றலைக்கொண்ட நோய்; அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற, நேரிழை யீத்தவிம் மா; ஆங்கதை, அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ, மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்ருே, ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ, ருயர்நிலை யுலக மூறீஇ யாங்கென், றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே" (கலி. கங௧) இது தரவும் போக்கும் பாட்டிடைமிடைந்த கலிவெண்பாட் டாசிரியச்சுரிதகத் தான்வந்தது. இவ்வாறே வெள்ளைச்சுரிதகத்தான்வருவனவுங் கொள்க.

---

நடக்குமா மன்ருே, நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே, கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்ருே; விண்டோய்கன் னாடனு நீயும் வதுவையுட், பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ, பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங் கேண்மை, கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;" இவை யிரண்டுந் தாழிசை. "மைதவழ் வெற்பன் மணவணி காணுமற், கையாற் புதைபெறூஉங் கண்ணுங் கண்ணே;" இது பேரெண் "என்னைமன், நின்கண்ணுற் காண்பென்மன் யான்; நெய்த லிதழுண்க ணின்கணு தென் கண்மன்;" இதுவுங் கொச்சகம். "எனவாங்கு" தனிச்சொல். "நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத், தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக, வேய்புரை மென்ருேட் பசலையு மம்பலு, மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச், சேயுயர் வெற்பனும் வந்தனன், பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே." (கலி. ந௬.) இது சுரிதகம். இதனுள், முதலடி யறுசீர்முடுகியல். இரண்டாவ தைஞ்சீர்முடுகியல். இது, இவ்வாறு வருவன கொச்சகக்கலிப்பாவெனப்படும். ஒத்தாழிசைக்குத் தாழிசையா கியவுறுப்பு மிக்குவந்தாற்போற் கொச்சகக்கலிக்கும் வெண்பாவாகிய வுறுப்பு மிக்குவருமெனக்கொள்க. இனி யீண்டோதப்பட்ட வுறுப்புக்கள் குறைந்தும், மயங்கியும், மிக்கும் வருபவை கலித்தொகையுட் கண்டு கொள்க. எ-து. உரையாசிரியருரை.

"கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே, பண்டறியா தீர்போல நோக்குவீர் கொண்டது, மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை, பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த, புனவரை யிட்ட மயங்குதார்ப் பீலி, பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி, யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி, நெடியோன் மகனயந் துகந்தாங் கனைய, வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச, மிடிய விடைக்கொள்ளுஞ் சாய லொருத்தி, கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி, னன்னே னொருவனேன் யான்; என்னெனும், பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே, யாடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ, வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக, நன்னுத லீத்த விம் மா; திங்க ளரவுறிற் றீர்க்கல்லா ராயினுந், தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய, லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய், கண்டுங்கண் ணோடா திவ் வூர்; தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும், பாம்பு மவைப்படி லுய்யுமாம் பூங்கண், வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம, முணர்ந்து முணரா திவ் வூர்; வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்றா, ரஞ்சலென் றாலு முயிர்ப்புண்டா மின்சீர், செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காம, மறிந்து மறியா திவ் வூர்; ஆங்க, என்கண் ணிடும்பை யறியினே னுங்கட், டெருளுற நோக்கித் தெரியுங்கா லின்னு, மருளுறு நோயொடு மம்ம ரகல, விருளுறழ் கூந்தலா ளென்னை, யருளுறச் செயினு மக் கறனுமா ரதுவே" (கலி. கசo.) இது 'பாடெனி' லென்றும், 'ஆடெனி' லென்றும் எதுகையியைந்த அளவடி 'என்னெனும்' என வேறுநின்றசீரோடுங்கூடி யைஞ்சீரடுக்கிற்று. இதனுள் 'ஆங்க' எனத் தனிச்சொல் வந்தது. "காராரப் பெய்த" (கலி. கoகூ.) என்னு முல்லைப்பாட்டு "இவடான், றிருந்தாச் சுமட்டின ளேனைத் தோள்வீசி, வரிக்கூழ் வட்டி தழீஇ யரிக்குழை, யாடற் றகையள் கழுத்தினும் வாலிதி, னுண்ணிதாத் தோன்றுநுசுப்பு" என்ன ஐஞ்சீரடுக்கியும் "இவடான், வருந்தநோய் செய்திறப்பினல்லான் மருந்தல்லள், யார்க்கு மணங்காதல் சான்றாளென் றார்ப்பெண்டிர், மாங்காய் நறுங்கடி கூட்டுவேம் யாங்கு, மெழுநின் கிளையொடு போவென்று தத்தங், கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும், வாயிலடைப்ப வரும்" என ஐஞ்சீரடுக்கிய சுரிதகத்தானும் வந்தது. "அரிதினிற் றோன்றிய யாக்கை புரிபுதாம், வேட்டவை செய்தாங்கே காட்டிமற்றாங்கே, யறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றன், றிறஞ்சேரார் செய்யுந் தொழில்க ளறைந்தன், றணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி, யணிநலம் பாடி வரற்கு; ஓரொருகா லுள்வழியா ளாகி நிறைமதி, நீரு ணிழற்

போற் கொளற்கரியள் போரு, ளடன்மாமே லாற்றுவே னென்னை மடன்மாமேன், மன்றம் படர்வித் தவள்; வாழி சான்றீர், பொய்தீ ருலகமெடுத்த கொடிமிசை, மையறு மண்டலம் வேட்டனள் வையம், புரவூக்குமுள்ளத்தே னென்னை யிரவூக்கு, மின்னு விடும்பைசெய் தாள்; அம்ம சான்றீர்; காந்தாங்கே யின்னுநோய் செய்யுமற் றிஃதோ, பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு; இடியுமிழ் வானத் திரவிருள் போழுங், கொடிமின்னுக் கொள்வேனென் றன்னள் வடிநாவின், வல்லார்முற் சொல்வல்லேனென்னைப் பிறர்முன்னர்க், கல்லாமை காட்டி யவள்; வாழி சான்றீர்; என்றாங்கே, வருந்தமா வூர்ந்து மறுகின்கட் பாடத், திருந்திழைக் கொத்தகிளவிகேட் டாங்கே, பொருந்தா தார் போர்வல் வழுதிக் கருந்திறை, போலக் கொடுத்தார் தமர்" (கலி. கசக.) இதனுள் "வாழி சான்றீர்," "அம்ம சான்றீர்" என ஈற்றுக்கண் வந்தசீர்களை முதலடிக்கட் பொருள்முடியுமாறுகூட்டி ஐஞ்சீரடிக்கியாங் கடுக்க அறுசீரா னவ்வாறுவந்ததாம். இதற்கும் அறுசீரடிக்கியும் எனக் கூட்டிப் பொருளுரைக்க. என்றாங்கு, தனிச்சொல். "புரிவுண்ட" (கலி. சசஉ.) என்னும் நெய்தற்கலியுள் "புரிவுண்டபுணர்ச்சியுள்" எனக் கலித்தளையும்வந்து "புல்லாரா மாத்திரை, யருகுவித்தொருவரை யகற்றலிற் றெரிவார்கண்" எனவும் "இணைந்து நொந்தழுதனணினைந்து நீடுயிர்த் தனள்" எனவும் இயற்சீர்நிரையாயன்றியும் பாவேறுபட்டு "எல்லையு மிரவுங் கழிந்தனவென் றெண்ணி யெல்லிரா, நல்கிய கேள்வனிவன்மன்ற மெல்ல" என ஐஞ்சீரடிவந்த வெள்ளைச் சுரிதகமும் பெற்ற கலிவெண்பாட்டு. முற்கூறிய சொற்சீரடியே ஈண் டைஞ்சீரும் அறுசீருமாயடுக்கின என்றுணர்க. இதற்கு இசைச்சீர்களை விதந்தோதவே கலிக்குநேர்ந்த சொற்சீரடி ஒத்தாழிசைக்கும் இதன்முற்கூறிய கலிவெண்பாட்டிற்கும் வாராவென்றுணர்க. இதற்கினமாகிய மூடிகியலும் அவ்விரண்டிற்கும் வாராமை கொள்க. இவற்றிற்கு வரையறை அம்போதரங்கத்திற் கோடியவரையறையே வேறின்றென வுணர்க. இனிப் பலவுறுப்பின்றி யவ்வாறு ஒருபாட்டே வரின் அதனை வெண்கலியென்பாரு முளர். நூற்றைம்பது கலியுள் அவ்வாறுவருவன இன்மையின் அது சான்றோர் செய்யுளொடு மாறுகொள்ளுமென மறுக்க. தாழம்படாமையின் இடைநிலைப்பாட்டென்றுதேயுந் துள்ளலுஞ் செப்பலும் என்னு மிருவகைக்கொச்சகமும் ஒருங்கு வாராமையிற் கொச்சகமென்னும் பேர் கொடாதும் பாட்டென்றார்; அதனை வெண்பாவியலான் வெளிப்படவருமெனவே வெள்ளைக்கொச்சகமெனப் படும். எ-று. (கூருசு.)

௧௫௰. பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே.*

இது நிறுத்தமுறையே அகநிலைக்கொச்சகக்கலி கூறுகின்றது. மேற் பாவினின்றநிலைவகையான் கொச்சகக்கலியாமென்று நூலறிந்த ஆசிரியர் கூறித்துணிந்தனர் எ-று.

அறை-துணித்தல் "அறைக்கரும்பு" (பொருந. கக௯) போல. பாநிலையென்றது மேலொருபோகெனக்கூறிய கொச்சகப்பாநிலையை நோக்கிற்று, அதுவுங் கொச்சகமாதலின். துணித்தன ரென்றதனால் அதிகாரத்தாற் சேட்படக்கூறிய "தரவின் றாகித் தாழிசை பெற்றும்" (செய். கசக) என்ற தொன்றனையுமே துணிந்து மாற்றியொழிந்தன பாவினின்றவகையான் இவ் வகநிலைக்கொச்சகமும் வருமென்றுணர்க. எனவே பரணிப்பாட்டுப்போல வெளிப்பட்டு அகநிலைக்கொச்சகம் வாராவென்றாராம். வகையென்றதனான் அதிகாரத்தானின்ற கலிவெண்பாவினது பாநிலையுங் கொள்ளப்படும். அது கொள்ளுங்கால் முன்னிற் சூத்திரத்திற்கூறிய நிலையெல்லாங் கொள்ளப் படும். "ஒருபொருணுதலிய" (செய். க௫௪) என்னுஞ் சூத்திரத்தினிலை கொள்ளலாகாதென்றுணர்க. எனவே ஒருபொருணுதலாது வெளிப்படத் தோன்றுங் கலிப்பாட்டினுறுப்பொத்துத் தரவும் போக்கும் பாட்டும் இடை மிடைந்தும் பாட்டுக் கொச்சகமாயும் அவை யைஞ்சீரும் அறுசீருமடுக்கி வருதலுமெல்லாங் கொள்ளப்படும்; இவ்வாறுவந்தன வெண்பாவிற் சிதைந்து ஓசையும் பொருளும் வேறாகலிற் கொச்சகமென்றார். தரவிணைந்து வாராது யாப்பின்வேறுபட்டு ஒருதரவே வந்தாற் கொச்சகமென்றலுந் தர விணைந்துழிச் சுரிதகம்பெறுதலும் வேறாகலிற் கொச்சகமென்றார். தர விணைந்து தனிச்சொல்லுஞ் சுரிதகமு முடன்பெறுதலும் எல்லாம் யாப்பின் வேறுபட்டகொச்சகமென்றலும், ஒத்தாழிசை மூன்றடுக்கிலு மவற்றின் வேறுபாடறிந்து கொச்சகமென்றலும், தேவபாணியாகாதவழிக் காமப் பொருள்பற்றிவாராது அறம் பொரு ளின்பம் வீடென்னு நான்கும்பற்றிப் பொருள் வேறுபடவந்தன கொச்சகமென்றலும், பாவேறுபட்டன கொச்சக மென்றலும், பிறவும் உணர்வோரே நூலறிபுலவர்; அல்லாதார் நூலுணரா ரென்பதறிவித்தற்கு நூனவில்புலவரென்றார். எனவே கொச்சகக்கலியுள் ஒருசாரானவற்றை இனமென்பார்க்கு அவை அவ்வப்பாக்களுள்வரின் இவ் வகையே கொச்சகமெனல்வேண்டும் அது பொருந்தாதென்றவாறாயிற்று. உ-ம். "செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு, பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம், பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய," "வ்கனகர்

* எ-து, பாநிலை வகை யுணர்-ற்று. (இதற்கு உரையாசிரியருரை யேட் டிலில்லை.)

கொள்ளா வலர்தலைத் தந்து, பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன், மக னல்லை மன்ற வினிது; செல்வினைச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி, யன்பற மாறியா முள்ளத் துறந்தவள், பண்பு மறிதிரோ வென்று வருவாரை, யென் றிறம் யாதும் வினவல் வினவிற், பகலின் விளங்குநின் செம்மல் சிதையத், தவலருஞ் செய்வினை முற்றாம லாண்டோ, ரவலம் படுதலு முண்டு" (கலி. கக) இது தரவிணைக்கொசசகம். கொச்சகம் வெண்பாவாயும்வருதலானுந் தாழிசையோடு தொடராதுவருதலானும் இவை கொச்சகமாயிற்று. ஒரு பொருணுதலி யிவ்வாறுவரினுங் கொச்சகமென்றுணர்க. "மாமலர் முண் டகந் தில்லையோ டொருங்குடன், கான லணிந்த வுயர்மணை லெக்கர்மேற், சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் றைசைத்த, கீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப், பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்; ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல், போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை, பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுத, லன்பெனப் படுவது தன்கிளை செறாமை, யறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல், செறிவெனப் படுவது கூறியது மறாமை, நிறைவெனப் படுவது மறைபிற ரறியாமை, முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல், பொறை யெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்; ஆங்கதை யறிந்தனி ராயினென் றோழி, நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க, தீம்பா லுண்டோர் கொள் கலம் வரைதலி, னின்றலை வருந்தியா ளெரஞ், சென்றனை களைமோ பூண்க நின் றேரே" (கலி. கஙங) இது தனிச்சொல்லின்றி யாசிரியச்சுரிதகம் பெற்ற தரவிணைக்கொச்சகம். "மின்னொளி ரவிர றலிடைபோழும் பெயலே போற், பொன்னகைத் தைவகிர் வகைநெறி வயங்கிட்டுப், பொழிலிடை விட்ட கமழ்நறும் பூங்கோதை, யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய், நன்னுதா னினக்கொன்று கூறுவாங் கேளினி, நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து, நுதலு முகனுந் தோளுங் கண்ணு, மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ, மைதேய்ந் தன்று பிறையு மன்று, மைதீர்ந் தன்று மதியு மன்று, வேயமன் றன்று மலையு மன்று, பூவமன் றன்று சுனையு மன்று, மெல்ல வியலு மயிலு மன்று, சொல்லத் தளருங் கிளியு மன்று; எனவாங்கு, அனையன பலபா ராட்டிப் பையென, வலையர் போலச் சோர்பத னொற்றியென், னெஞ்சு நெகிழ்க்த செவ்வி காணூஉப், புலையர் போலப் புன்க ணோக்கித், தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான், காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன், றொழூஉந் தொடூஉமவன் றன்மை, யேழைத் தன்மையோ வில்லை தோழீ" (கலி. ருரு) இது தனிச்சொல்லும் ஆசிரியச்சுரிதகமும்பெற்ற தரவிணை. "வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா, னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த, தொல் வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போற், பல்கதிர் ஞாயிறு

பகலாற்றி மலைசேர, வானூது கலுழ்கொண்ட வுலகத்து மற்றவ, னேனையா னளிப்பான்போ லிகலிருண் மதிசேப்பக், குடைநிழ லாண்டோற்கு மாளிய வருவாற்கு, மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை; மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த, போதுபோற் குவிர்தவென் னெழினல மெள்ளுவா, யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட, காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்; மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப், பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய், செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும், பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்; மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப், பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய், தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை, முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்; எனவாங்கு, மாலையு மலரு நோனா தெம்வயி, னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி, யுள்ளா தமைந்தோ ருள்ளு, முள்ளி லுள்ள முள்ளு ளுவந்தே"(கலி-ககஅ)இது "நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி" (செய். கடுரு) என்னுமிலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி பலவருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகமாயிற்று. இனி "அகன்ஞாலம்.... ...மயங்கியோரே" (கலி. கககூ) "எஃகிடை தொட்டகார்" (ஷை கூஉ) இவையும் இவ்வாறே வந்தன. இனி யாப்பின்வேறுபடவந்த "அருடீர்ந்த காட்சி" (கலி. கஉ0) "நயனும்வாய்மையும்" (கலி-ககூ0) என்பனவும் ஒக்கும். இனிப் பலவடுக்கிப் பொருட்டொடராய அறம்பொருளின்பம் வீடென்பன விராய்ப்பொருள் வேறுபடவருந் தரவுகொச்சகம் பின்னுள்ளோர்செய்த சிந்தாமணி முதலியனவாம். "கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப், பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதை, தொடிசெறி யாப்பமை யரிமுன்கைப் பணைத்தோளா, யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென, நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப், பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை, நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ், விரன்முறைச் சுற்றி மோக்கலு மோந்தன, னறூஅ வவிழ்ந்தன்னவென்மெல்விரற் போதுகொண்டு, செறூஅச் செங்கண் புதைய வைத்துப், பறூஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன், றொய்யி லிளமுலை யினியன தைவந்து, தொய்யலர் தடக்கையின் வீழ்பிடி யளிக்கு, மையல் யானையின் மருட்டலு மருட்டினன்; அதனால், அல்லல் களைந்தனன் றோழி நன்னக, ரருங்கடி நீவாமை கூறி னன்றென, நின்னொடு சூழ்வ றோழி நயம்புரிந், தின்னது செய்தா ளிவளென, மன்னா வுலகத்து மன்னுவ து[1]புரைமே" (கலி-ருச) "அதனால்"எனத் தனிச்சொற் பெற்று அடக்கியலில்லாச்சுரிதகத்தோடு அடிநிமிர்ந்தோடிற்று. "பான்

1 புகழே என்பதும் பாடம்.

மருண் மருப்பி னூல்புரை பாவடி, யீர்நறுங் கமழ்கடாத் தினம்பிரி யொருத்த, லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து, பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னு, மருளில் சொல்லு நீசொல் லினையே, நன்னர் நறுநுத லயந்தனை நீவி, நின்னிற் பிரியல னஞ்சலோம் பென்னு, நன்னர் மொழியு நீமொழிந் தனையே, அவற்றுள், யாவோ வாயன மாஅன் மகனே, கிழவ ரின்னோ ரென்னாது பொருடான், பழவினை மருங்கிற் பெயர்பு பெயர் புறையு, மன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின், றிமைப்புவரை வாழாண் மடவோ, ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே" (கலி. ௨௧) "அவற்றுள்"என ஐஞ்சீரடிவந்து தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம்பெற்று அடிமிழிந்தோடிற்று; "அகன்ஞாலம் விளக்கும்" (கலி. ௧௨௧) கொச்சகவொருபோகோடு ஒப்பாமாறு. "மன்று பார்த்து, நின்று தாயைக், கன்று பார்க்கு, மின்றும் வாரார்" இஃது இருசீர் நான்கடித்தரவு கொச்சகம். "தஞ்சொல் வாய்மை தேற்றி, யஞ்ச லோம்பென் றகன்ற, வஞ்சர் வாரா ராயி, னெஞ்ச மில்லா தேகாண்" இது முச்சீர் நான்கடித்தரவு கொச்சகம். "நீரலர் தூற்றத் துயிலா நெடுங்கங்குல், வாரல ராகி யவரோ வலித்தமைந்தா, ராலார் நாரைகா ளன்றில்கா ளன்னங்கா, ளூரலர் தூற்றயா னுள்ள முருகுவேனோ" இது நாற்சீர்நான்கடித்தரவுகொச்சகம். "கன்னி ஞாழற் கமழ்பூங் கானல் யான்கண்ட, பொன்னனங் கொடியை யின்றோ ரில்லை போலுமான், மன்னன் காக்கு மண்மேற் கூற்றம் வரவஞ்சி, யன்ன தொன்று படைத்தா யாயி னெவன்செய்கோ" இஃ தைஞ்சீர்நான் கடியான்வந்தது. இனி "நூனவில்புலவ"ரென்றதனான் இதனைக் கோவை யாக்கி யெழுத்தெண்ணி யளவியற்படுத்துச் செய்வனவுந் தரவுகொச்சகம். அவற்றுள் நேரெழுத்துவருவனவுங் கொச்சகமாம். உ-ம்."திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக், குரு ..............கின்றதே" (திருச்சிற்ற. ௧) "போதோ விசும்போ..........பதியே"(ஷை ௨) இவை பதினேழும் பதினாறு மாய்வந்த தரவுகொச்சகம். "குயிலைச் சிலம்படிக் கொம்பினை..........பளிக் கறையே" (ஷை ௩௦) "காரணி கற்பகங் கறறவர் நற்றுணை பாணரொக்கல், சிரணி.........மூதியமே" (ஷை ௪௦௦) இவை யோரோவெழுத்துமிக்க தரவு கொச்சகம். "காண்பா னவாவினாற் காதலன் காதலிபின் னடவா நிற்ப, நாண்பால ளாகுதலா னன்னுதறன் கேள்வன்முன் னடவா நிற்ப, வாண் பாண்மை குன்றா வயில்வே லவன்றனக்கு மஞ்சொ லாட்கும், பாண்பால் வரிவண்டு பாடு மருஞ்சுரமு மபதிபோன் றன்றே" இஃது அறுசீர்நான்கடித் தரவுகொச்சகம். பிறவு மன்ன. "இலங்கொளி வெண்மருப்பி னிட்டகை தூங்கவொ ரேந்தல் யானை, கலங்களு ரெய்துக் கதூஉங் கவளங் கடைவாய் சோரச், சிலம்பொழி குன்றென நின்றது செய்வ தெவன்கொ லன்னாய்" இஃது அறுசீர்மூன் றடிக்கொசசகம். "தண்ணந் துறைவன் றூர்மேற்

போன, வண்ண வண்டு வாரா தற்றே, வண்ண வண்டு வாரா தாயிற், கண்ணியு மில்லாதே காண்” இது நான்கடியாசிரியத்துள் இறுதி மூச்சீரான் வந்து யாப்பு வேறுபட்டது. “கிணங்கொள் புலாலுணங்கு மூன்றினின்று புள்ளோப் புதறலைக் கீடாகக், கணங்கொள்வண் டார்த்துலாங் கன்னி நறு ஞாழல் கையி னூன்றி, மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றாண்டோ, ரணங் குறையு மென்ப தறியே னறிவேனே லடையேன் மன்னோ”(சிலப்-கானல்) இஃது ஈற்றயலடிகுறைந்தது. இதனைப் பாமயக்கத்துக்கும் எற்றுகிற்றலின் ஈண்டுக்காட்டிற்று “அறுசீ ரடியே” (செய்-கச) என்னுஞ் சூத்திரத்திற் கூறிற்றேனுமென்பது. இது ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருதலுங் கொள்க. “கோடல்விண்டு கோபமூர்ந்த கொல்லைவாய், மாடுநின்ற கொன் றையேறி மெளவல்பூத்த பாங்கெலா, மாடுமஞ்ஞை யன்னசாய லாயவஞ் சொன் மாதரா, யாடன்மைந்தர் தேரும்வந்து தோன்றுமே” இது நடுவீரடி மிக்கது. “இரங்கு குயின்முழவா வின்னிசையாழ் தேனா, வரங்க மணி பொழிலா வாடும்போலு மிளவேனி, லரங்க யணிபொழிலா வாடுமாயின், மரங்கொன் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்” “வண் டுளர் பூந்தார் வளங்கொன்றைத் தாரன்றே” “முத்தரும்பிப் பைம் பொன் மலர்ந்து முருகுயிர்க்குந், தொத்தரும்பு கானற் றுறையோந், துறைவந் தெமது தொன்னலமு நாணு, நிறைவளையும் வெளவி நிறையற்றா னஞ் சேர்ப்பன்” இவை அடியும் அசையுஞ் சீருமிடைமடக்கிச் சிலவடி குறைந் தன. இவை யசையுஞ் சீரும் அடிமடக்கியும்வரும். “புன்னை நீழ னின்றார் யார் கொ, லன்னை காணின் வாழாளே தோழி” “மல்ல லூர விவ்வி லன்றாற், பல் பூங் கோதை யில்” இவை ஈரடியா யீற்றடி குறையாதுங் குறைந்தும்வந்தன. “கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம், பொய்தற் சிறுகுடி வாரனீ யைய நலம்வேண்டின்” இது ஈரடியா யீற்றடிமிக்கது. இதுவும் ஒருபொருண் மேன் மூன்றடுக்குதலுங் கொள்க. இன்னும் முற்கூறிய கொச்சகவொரு போகின்பகுதியாய் வேறுபட்டுவருவன வந்துழிக்காண்க. “வடிவுடை நெடு முடி வானவர்க்கும் வெலற்கரிய, கடிபடுநறும்பைந்தார்க் காவலர்க்குங் காவல னுங், கொடிபடு வரைமார்பிற் கோழியார் கோமானே; துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் தொடர்ப்புண்டாங், கிணைமலர்த்தாராருளுமே விதுவிதற்கோர் மாறென்று, துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கரு தாரே; அதனாற், செவ்வாய்ப் பேதையிவடிறத், தெவ்வா றுங்கொலி தெண் ணிய வாறே” இது தனிச்சொல்லுஞ் சுரிதகமும்பெற்றுப் பொருள்வேறு பட்ட தாழிசை. இனிக் கலிவெ[illegible]றுப்பொத்துப் பாகேற்படுவன வருமாறு. “ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம், புரப் பான் போல்வதோர் மதுகையு முடையன், வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ, னல்லோர்கட் டோன்று மடக்கமு முடையன், இல்லோர் புன்க

ணிகையிற் றணிக்க, வல்லான் போல்வதோர் வன்மையு முடையன், அன்று
னொருவன் றன் றுண்டமை விட்டெனைச், சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரி
ழாய் பன்மாணும்; நின்னின் றியமையலேன் யானென்னு மவனாயி,னன்றான்
சொ னம்புண்டல் யார்க்குமிங் கரிதாயி, னென்னுற்ற பிறர்க்குமாங் குள
கொல்லோ நறுநுதால்; அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனாயிற்,
றமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயி, னளியரோ வெம்போல
வீங்கிவன் வலைப்பட்டார்; வாழலேன் யானென்னு நீநீப்பி னவனாயி,
னேழைய ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயிற், சூழுங்கா னினைப்பதொன்
றறிகிலன் வருந்துவல், சூழுங்கா னறுநுதா னம்முளே சூழ்குவம்; அவனா
ணடப்பெயர்த் தமைக்குமாங் கொல்லாது, பேணின் ரெனப்படுதல் பெண்
மையு மன்றவன், வெளவி முயங்கு மாத்திரை வாவெனக், கூறுவேன்
போலக் காட்டி, மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே" (கலி-௪௭) இது
ஒன்றெனவும் அவனெனவுஞ் சொற்சீருந் தனிச்சொல்லும்வந்து இடை
நிலைப்பாட்டினுள் ஒன்றோரடிமிக்கு ஒருபொருண்மேல் மூன்றுவருதலின்
ஒத்தாழிசையாகாது கொச்சகமாய்க் கலிவெண்பாட்டின் வேறாயிற்று.
"வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு, வானீங்கு வைப்பின் வழங்காத்தேர்
நீர்க்கவாங், கானங் கடத்திரெனக் கேட்பின் யானொன், றுசாவுகோ வைய
சிறிது; நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின், கைபுனை வல்
வின் ஞாணுளர் தீயே, இவட்கே, செய்வுறு மண்டில மையாப் பதுபோன்,
மையில் வாண்முகம் பசப்பூரும்மே; நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்
டிப், புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே; இவட்கே, சுனைமா ணீலங் காரெ
திர் பவைபோ, னினைநோக் குண்க ணீர்நில் லாவே; நீயே, புலம்பிய லுள்ள
மொடு பொருள்வயிற் செலீஇய, வலம்படு திகிரி வாய்நீ வுதியே; இவட்கே,
யலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோ, லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே;
எனநின், சென்னவை யரவத்து மினையவை நீநீப்பிற், றன்னலங் கடை
கொள்ளப் படுதலின் மற்றிவ, ளின்னுயிர் தருதலு மாற்றுமோ, முன்னிய
தேஎத்து முயன்று செய்பொருளே" (கலி-௭) இது கலிவெண்பாவிற்கோதிய
வுறுப்பப்பெற்றதேனுந் தரவு வெண்பாவாய் ஒழிந்தன வெண்பாவன்மையிற்
கொச்சகமாயிற்று. "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவா, டாமரைக்
கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலா, னீருகை நறுந்தண்டார்
தயங்கப்பாய்ந் தருளினாற், பூணுக முறத்தழீஇப் போதந்தா னகலகலம்,
வருமுலை புணர்ந்தன வென்பதனா லென்றோழி, யருமழை தரல்வேண்டிற்
றருகிற்கும் பெருமையனே; அவனுந்தான், ஏன லிதணத் தகிற்புகை யுண்
டியங்கும், வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனி னிறாலென வேணி
யிழைத்திருக்குங், கானக நாடன் மகன்; சிறுகுடியீரே சிறுகுடியீரே, வள்ளி
கீழ்வீழா வரைமிசைத் தேன்றொடா, கொல்லை குரல்வாங்கி யீனா மலைவாழ்ந,

நல்ல புரிந்தொழுக லான்; காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின், வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர், தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றன்னையரும், தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்; என வாங்கு, அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட, வென்னையர்க் குய்த் துரைத்தாள் யாய்; அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந், தொருபக லெல்லா முருத்தெழுந் தாறி, யிருவர்கட் குற்றமு மில்லையா லென்று, தெருமந்து சாய்த்தார் தலை; நிரையிழாய் நீயுநின் கேளும் புணர, வரையுறை தெய்வ முவப்ப வுவந்து, குரவை தழீஇயா மாடக் குரவையுட், கொண்டு நிலைபாடிக் காண்; நல்லாய், நன்னா டலைவரு மெல்லை நமர்மலைத், தந்நாண்டாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல்; புனவேங்கைத் தாதுறைக் கும் பொன்னறை முன்றி, னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ, நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே, கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ; விண் டோய்கன் னாடனு நீயும் வதுவையுட், பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற் கொலோ, பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை, கண்டறியா தேன் போற் கரக்கிற்பென் மற்கொலோ; மைதவழ் வெற்பன் மணவணி காணா மற், கையாற் புதைபெறூஉங் கண்ணுங் கண்ணோ; என்னைமன், நின்கண் ணாற் காண்பென்மன் யான்; நெய்தல் விதழுண்கண், ணின்கண்ணா கென்கண் மன; எனவாங்கு, நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத், தகைமிகு தொகைவகை.........வினியே” (கலி-௩௯) இதனுள் “எனவித ணத்து” என்பது முதலிய கொச்சகங்கள் வெண்பாவாய்ப் ‘புனவேங்கை’ முதலியன துள்ளலோசை விராய்த் தளையொன்றிய கொச்சகமாய் ஒழிந்த பாவு மயங்கிச் சுரிதகமும் முடுகிவருதலின் இது கொச்சகமாயிற்று. “கொடு மிட னாஞ்சிலான்” (கலி-௩௮) என்னும் பாட்டுட் “பாஅய்ப் பாஅய்ப் பசந் தன்று நுதல், சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்” என முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடிவருதலின் இதுவுங் கொச்சகமாயிற்று. “மலிதிரையூர்ந்து” (கலி-௧௦௪) என்னும் முல்லைப்பாட்டுள் “இரிபெழு பதிர் பதிர் பிகந்துடன் பலர்நீங்க” “தாளெழு துணிபிணி யிசைதவிர் வின்றி” எனவும் முடுகுதலிற் கொச்சகமாயிற்று. இவற்றுட் கலிவெண்பாப்போலச் சொற்சீரடியும்வந்தன. பிறவு மன்ன. மேலைச்சூத்திரத்துள் இதற் கதி காரம்பட இடைநிலைப்பாட்டினை யீற்றின்வைத்தமையிற் றாவும் போக்கு மின்றி யிடைநிலைப்பாட்டேவருதலுங் கொச்சகமாம். உ-ம். “காலவை, சுடுபொன் வளைஇய வீரமைசுற்றொடு, பொடியழற் புறந்தந்த செய்யுறு கிண்கிணி; உடுத்தவை, கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேன், மையில் செந்துகிர்க் கோவை யவற்றின்மேற், றைஇய பூந்துகி லைதுகழ லொருசிறை; கையவை, யலவன் கண்பெற வடங்கச் சுற்றிய பலவுறு கண் ணுட் சிலகோ லவிர்தொடி; பூண்டவை, யெறியா வாளு மெற்று மருவுறு,

செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த, பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிலின், மையற விளங்கிய வானேற் றவிர்பூண்; சூடின, இருங்கடன் முத்தும் பன்மணி பிறவு, மொருங்குடன் கோத்த வுருளமை மூக்காழ்மேற், சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக, வரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச், சுரும்பாற் றுப் படுத்த மணிமருண் மாலை; ஆங்க, அவ்வும் பிறவு மணிக்கணி யாகநின், செய்வுறு திண்டேர்க் கொடிஞ்சினை கைப்பற்றிப், பைப்பையத் தூங்குநின் மெல்விரற் சீறடி, கோதலு முண்டீங் கென்கை வந்தீ, செம்மானின்பா லுண்ணிய; பொய்போர்த்து, பாண்டலை யிட்ட பலவல் புலையனைத், தூண்டிலா விட்டுத் துடக்கித்தாம் வேண்டியார், நெஞ்சம் பிணித்த தொழிலாத் திரிதரு, நுந்தைபா லுண்டி சில; நுந்தைவாய், மாயச்சூ டேறி மயங்குநோய் கைமிகப், பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா, ஞாயர்பா லுண்டி சில; அன்னையோ, யாமெம் மகனைப்பா ராட்டக் கதுமெனத், தாம்வந்தார் தாம்பா லவரொடு தம்மை, வருகென்றார் யார்கொலோ வீங்கு; என்பாலல், பாராட் டுவந்தோய் குடியுண் டீத்தை; என், பாராட்டைப் பாலோ சிலசெருக் குறித் தாரை, யுவகைக்கூத் தாட்டும் வரிசைப்பெரும் பாட்டொ டெல்லாம், பருகீத்தைத் தண்டுவென் ஞாயர் மாட்டைப்பால்" (கலி-அ௰) என இப்பாட்டு இடைநிலைப்பாட்டே முழுதும் வந்தது. இஃது உறழ்பொருட் டன்மையிற் கொச்சகம். இவை யெல்லாங் கலிவெண்பாவுறுப் பொத்துப் பாவேறுபட்ட கொச்சகம். "எருத்தேகொச்சகம்" (செய் ௧௫௩) என்னுஞ் சூத்திரத்தே அம்போதரங்கத்திற்குக் கூறியவளவே மேல்வருகின்ற மூன்றுபாக் கட்கு மளவென்றுகூறிப்போந்ததனுன் அளவு முணர்க. இனிக் கொச்சகவொருபோகுடன் மாட்டெறிதலின் அதனளவு இதற்கும் அளவாமெனின் ஆகா, வண்ணத்திற்கோதியவுறுப்பமைய வாராதது கொச்சகமாதலின் அதற் கோதியஅளவே கொச்சகவொருபோகிற்கு அளவாயுஞ் சிறிதுவேறுபட்டும் வரும். இது அங்ஙனம்வாராதென்றுகொள்க. இதற்கு இரண்டடிமுதற் பத்தடியளவும்வருவன தரவுகொச்சகமாமா றுதாரணத்திற் காண்க. (௧௫௫)

௧௫௬. கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்தும்
போக்கின் றாத லுறழ்கலிக் கியல்பே.*

இது முறையானே உறழ்கலி கூறுகின்றது

இ-ள். ஒருவர் ஒன்றுகூறுதற்கு மறுமாற்றம் மற்றொருவர் கூறிச் சென்று பின்னர் அவற்றையடக்குவதோர் சுரிதகமின்றிமுடிவது உறழ்கலியாம். எ-று.

* எ-து, உறழ்கலிப்பாவாமாறுணர்-ற்று. உறழ்கலிப்பாவிற் கிலக்கணம், கூற்றும், மாற்றமும் விரவிவந்து சுரிதகமின்றிமுடிதல். எ-று. இதனைக் கொச்சகக்கலியின் பின்வைத்தமையான், கொச்சகவுறுப்பின் ஒப்பன இதற் குறுப்பாகக்கொள்ளப்படும். உ-ம். "யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ, ரூராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை, வாரனீ வந்தாங்கே

போக்கின்றெனவே ஒழிந்தவுறுப்புக்களெல்லாங் கலிவெண்பாட்டிற் கோதியவாறே வருமென்பதூஉம், பா மயங்கிவருமென்பதூஉம், அம்போதரங்கத்தினளவே யளவென்பதூஉம் மேனின்ற வதிகாரத்தாற் பெற்றாம். இயல்பெனவே இயல்பன்றி விகாரவகையாற் சில போக்குடையவாதலும் அவை தாம் ஆசிரியமேயாகலும் சில தரவும் போக்குமின்றிவருதலுஞ் சிறுபான்மைகொள்க. போக்குடையன தரவின்றி வாராமையுங் கொள்க. வெள்ளைக்கொச்சகம் பலவந்து அவற்றுள் ஒன்றைச் சுரிதகமெனின் அதற்குப் போக்கியற்பொருண்மையின்மையான் அதனைநீக்கிப் போக்கியற் பொருண்மையின்றேனும் ஆசிரியம்வந்துழி யப்பாட்டிற் கோர் முடிவு காட்டிநிற்றலின் ஆசிரியமே போக்கியலாமெனக் கொண்டாம். நாடகச் செய்யுட்போல வேறுவேறு துணிபொருளவாகிய பலதொடர்ந்த வேறுபாடுநோக்கியும் பொருள்வேறுபாடுநோக்கியும் வரலாற்று முறைமை நோக்கியும் அதற்குரியதோர் இலக்கணத்தால் உறழ்கலியென வேறோர் செய்யுளென்றார். கொச்சகத்தின் அடங்காமையின் "மரபுநிலை திரிதல் செய்யுட்கில்லை, "மரபு வழிப்பட்ட சொல்லினை" (மரபியல் கo) என மரபு கூறலின். உ-ம் "அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம், புரிநெகிழ் முல்லை நறவோடார்ந்த, தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார், பொருமுரண்சீறச் சிதைந்து நெருநையி, னின்று நன்றென்னை யணி; அணைமென்றோளாய், செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ,னையத்தா லென்னைக் கதியாதீதீங்கின்மை, தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு மற்றஃது, அறிவல்யா னின்குளனைத்தாக நல்லார், செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார், கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின், ருருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி, யரிமத ருண்கண்ணாராக் கவவிற், பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ், செருவொழிந் தேன் சென்றீ யினி; தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை, யாற்றி னிறுப்பல் பணிந்து; அன்னதே யாற்றல் காண், வேறுபட்டாங்கே கலுழ்தி யகப்படின், மாறுபட்டாங்கே மயங்குதி யாதொன்றுங், கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ, மாணு செயினு மறுத்தாங்கே நின்வயிற், காணி னெகிழுமென்னெஞ்சாயி னென்னுற்றாய், பேணுய்நீ பெட்பச்

---

மாறு; ஒள்ளிழை, என்னிவை, ஓருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று, போரெதிர்ந் தற்றாப் புலவனீ கூறினென், னுருயிர் நிற்குமா றியாது." இது தலைமகன் கூற்று. "எஎ, தெளிந்தேம்யாம் காயாதி யெல்லாம்வல் லெல்லா, பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்கொடிந் தாங்கு, வருந்தனின் வஞ்சமுரைத்து" இது, தலைவி. "மருந்தின்று, மன்னவன் சீறிற் றவறுண்டோ நீநயந்த, வின்னகை தீதோ விலேன்" இது, தலைமகன். "மாண்மற்றுள்ளாத நாணிலிக் கிப்போர், புறஞ்சாய்ந்து கண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்திவனைப், பொய்ப்ப விடேமென நெருங்கிற் றப்பினெ, னென்றடி சேர்தலு முண்டு" (கலி. அகூ.) இப்பாட்டுச் சுரிதகம் வந்தவாறு கண்டு கொள்க. எற்றுக்கு இறுதிக்கண் வந்ததாகாதோவெனின், சுரிதகமாவது ஆதிப்பாட்டினு மிடைநிலைப்பாட்டினு முள்ளபொருளைத் தொகுத்துமுடிப்பது. இது, அன்னதன்றென்க. எ-து. உரையாசிரியருரை.

செயல்". (கலி. கூக) இது தரவும் பாட்டு முடைத்தாய் ஐஞ்சீரடுக்கியும் ஆறு மெய்பெற்றும் வந்தும் போக்கின்றியுற்ற உறழ்கலி. முற்கூறிய பொருளைத் தொகுத்துக்கூறுமையி னிறுதிநின்ற "பேணுய்நீ பெட்பச் செயல்" என்றது வெள்ளைச்சுரிதகமாகாதாம். அது "அன்னதேயாயினு மாகவற் றுயிழாய், நன்னகை யுண்க முயங்குவாய் நின்னெஞ்ச, மென்னெடு நின்றதெனின்" ( ) எனப் பின்னுமொன்று தலைவன் கூறற்கும் உடம்பட்டு நிற்றலின். இவ்வாறன்றி யாசிரியச் செய்யுளை முடித்துக்காட்டுதலின் அதனைச் சிறு பான்மை கொண்டார். நலமிக நந்திய நயவரு தடமென்றோ, ளலமா லமருண்க ணந்நல்லாய் நீயுறீஇய, வுலமா லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல்; பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா, யாரெல்லா நின்னை யறிந்ததூ மில்வழி, தளரியாளென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப், புல்லினத் தாயர் மகனேன் மற்றியான், ஒக்கும், புல்லினத் தாயனைநீ யாயிற் குடஞ்சுட்டு, நல்லினத் தாயரெமர்; எல்லா, நின்னெடு சொல்லி னேதமோ வில்லைமன்; ஏதமன் றென்னை வருவான் விடு; விடேன், உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு, மெல்லிய வாத லறியினு மெல்லியா, னின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண், டென்னெஞ்ச மேவல் செயின்; நெஞ்சேவல் செய்யா தெனநின்றுய்க் கெஞ்சிய, காதல்கொள் காமங் கலக்குற வேதிலார், பொய்ம்மொழி தேறுவ தென்; தெளிந்தேன் றெரியிழாய் யான்; பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண் பொழி, லல்கலகலறை யாயமொடாடி, முல்லை குருந்தொடு முச்சி வேய்ந் தெல்லை, யிரவுற்ற தின்னங் கழிப்பி யரவுற், றுருமி னதிருங் குரல்போற் பொருமுரணல்லேறு நாகுட னின்றன, பல்லா னினநிரை நாமுடன் செலற்கே" (கலி. ககங) இது போக்கிலக்கண மில்வழி யாசிரியச்சுரிதகம்பெற்ற உறழ்கலி. "வாரி நெறிப்பட்டு" (கலி. ககசு) என்னும் முல்லைப் பாட்டும் "சுணங்கணி வனமுலை" (கலி. சுO) என்னுங் குறிஞ்சிப் பாட்டுமது. "ஒருஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை, வெரூஉதுங் காணுங் கடை; தெரியிழாய், செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய், மெய்பிரிந் தன்னவர் மாட்டு; ஏடா, நினக்குத் தவறுண்டோ நீவீடு பெற்று, யிமைப்பி னிதழ் மறை பாங்கே கெடுதி, நிலைப்பா லறியினு நின்னொந்து நின்னைப், புலப்பாருடையர் தவறு; அணைத்தோளாய், தீயாரைப் போலத் திறனின் றுடற்றுதி, காயுந் தவறிலேன் யான்; மானோக்கி நீயழ நீத்தவ னுனது, நாணில னாயி னலிதந் தவன்வயி, னூடுதலென்னோ வினி; இனி, யாதுமீக் கூற்ற நூமில மன்ற, தகையது கண்டைப்பாய் நெஞ்சே பணியானுப், பாடில்கண் பாயல் கொள" (கலி. அஎ) இது தரவும் போக்குமின்றிவந்த உறழ்கலி. இவற்றுள் ஐஞ்சீரும் அறுசீரும் வந்தன. சொற்சீரடி வந்தன வந்துழிக் காண்க. பிறவு மன்ன. (கஇசு)

௧௫௭ ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை
யாயிர மாகு மிழிபுமூன் றடியே.*

இது நிறுத்தமுறையே ஆசிரியத்திற்கு அளவியல் கூறுகின்றது.

இ-ள். ஆசிரியப்பாவின் பெருக்கத்துக்கு எல்லையாயிரமாகும். சுருக்கத்திற்கெல்லை மூன்றடியாகும். எ-று.

உ-ம். நீல மேனி வாலிழை...பாகத் தொருவனிருதா ணிழற்கீழ், மூவகை யுலகு முகிழ்த்தன முறையே' (ஐங்குறு-வாழ்த்து) இது சுருக்கத்திற்கெல்லை. 1கூத்தராற்றுப்படை தலையளவிற்கெல்லை. மதுரைக்காஞ்சியும் பட்டினப் பாலையும் ஒழிந்த பாட்டேழும், பரிபாடலுங், கலியும் ஒழிந்த தொகையாறும் இடையளவிற் கெல்லை. பாட்டினெல்லை யென்றது அளவென்றதனான் அதனியற்றாகிய வஞ்சிக்கும் இவ்வாறே கொள்க. "செங்கண்மேதி கரும்புழக்கி, யங்கணீலத் தலாருந்திப், பொழிற்காஞ்சி நிழற்றுயிலுஞ், செழுநீர் நல்வயற் கழனி யூரன், புகழ்த லானுப் பெருவண்மையனே" இது சிற்றெல்லை. பட்டினப்பாலை யிடையளவிற் கெல்லை. மதுரைக் காஞ்சி தலையளவிற் கெல்லை. (௧௫௭)

௧௫௮ நெடுவெண் பாட்டு முந்நா லடித்தே
குறுவெண் பாட்டிற் களவெழு சீரே.†

இது முறையே வெண்பாவின் அடியளவை கூறுகின்றது.

இ-ள். நெடுவெண்பாப் பேரெல்லை பன்னீரடியையுடைத்து. குறுவெண்பாச் சிற்றெல்லை யீரடியையுடைத்து. எ-று.

இதனை வெண்பாட்டளவிற் கெல்லையென்னாது குறுவெண்பாட்டு நெடுவெண்பாட்டெனப் பெயர் கொடுத்துக் குறுமையும் நெடுமையும் அளவியலோடு படுத்துக் கொள்ளப்படுதலின் அளவியல் வெண்பாட்டு மூள

---

*எ-து, ஆசிரியப்பாவி னளவுணர்-ற்று. ஆசிரியப்பாட்டினளவிற்கெல்லையாவது, சுருங்கினது மூன்றடி, பெருமை யாயிரமடியாக விடைப்பட்டன வெல்லாவடியானும் வரப்பெறும். எ-று. சுருங்கினபாட்டிற்கு உ-ம் மேற்காட்டப்பட்டது. பெரியபாட்டு, பத்துப்பாட்டுள்ளுஞ் சிலப்பதிகாரத்துள்ளும் மணிமேகலையுள்ளுங் கண்டுகொள்க. "ஆசிரியநடைத்தேவஞ்சி' (செய். ௧௦௮.) என்றதனான் வஞ்சிப்பாவிற்கும் ஆயிரமடிப்பெருமையாகக் கொள்ளப்படும். எ-று. எ-தி. உரையாசிரியருரை.

† எ-து, வெண்பாவிற் கடிவரையறையுணர்-ற்று. நெடுவெண்பாட்டிற் கெல்லை பன்னிரண்டடி. குறுவெண்பாட்டிற்கு அளவடியுஞ் சிந்தடியுமாகிய விரண்டடியும். எ-று. எனவே இடையுள்ள வடிகளெல்லாமுரிய. உ-ம் மேற்காட்டுதும். எ-து. உரையாசிரியருரை.

---

1 மலைபடுகடாம்.

வென்பதூம், அது சிறப்புடைத்தென்பதூம் பெறுதும். எனவே, நெடு வெண்பாவின் பன்னீரடியிற் பாகமாகிய ஆறடியே யளவியல்வெண்பாவுக்குப் பேரெல்லையாகவும், அதன்பாகமாகிய மூன்றடியே குறுவெண்பாவிற்குப் பேரெல்லையாகவுங் கோடும். அங்ஙனங் கொள்ளவே நெடுவெண்பாவிற் கிழிந்த வெல்லை யேழடியாகவும் அளவியல் வெண்பாவுக்கு இழிந்த வெல்லை நான்கடியாகவுங் கொள்ளப்படும். இங்ஙனம் அளவியல்வெண்பாச் சிறப்புடைமை நோக்கி யாசிரியர் "அம்மைதானே யடிநிமிர் வின்றே" (செய். உருகு) என்று நெடுவெண்பா நேர்ந்திலர். அடிநிமிர் வின்றென்றது ஆறடியின் மிகாமையை; உரையிற் கோடலென்பதனாற் செப்பிக் கூறுஞ் செய்யுட்கு நான்கடியே மிக்க சிறப்புடைத்தெனக் கொள்க. "சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்" என்பதனாற் குறுவெண்பாவுஞ் சிறப்புடைமை பெறுதும். இக் கருத்தானே கீழ்க்கணக்கில் நான்கடியும் ஈரடியுமே மிகவந்தவாறும் முத்தொள்ளாயிரத்து நான்கடியே மிகவந்தவாறுங் காண்க. உ-ம். "யாதானு நாடாமால்" (திருக். நகள) [1]"இருதேவர் பார்ப்பா ரிடை" (ஆசாரக். நக) "துகடீர் பெருஞ் செல்வம்" (நாலடி. செல்வ) "இனிதுண்பா னென்பா னுயிர்கொல்லா துண்பான், முனிதக்கா னென்பான் முகனொழிந்து வாழ்வான், றனிய னெனப்படுவான் செய்தநன் றில்லா, னினிய னெனப்படுவான் யார்யார்க்கே யானு, முனியா வொழுக்கத் தவன்" (நான்மணி. சுo) "ஆரெயின் மூன்று மழித்தானடியேத்தி, யாரிடத்துந் தானறிந்த மாத்திரையா னாசாரம், யாரு மறிவ தறனாக மற்றவற்றை, யாசாரக் கோவை யெனத்தொகுத்தான் றீராத், திருவாயி லாய திறல்வண் கயத்தூர்ப், பெருவாயின் முள்ளியென் பான்" (ஆசாரக். காப்பு) என இவை முறையே வந்தன. ஒழிந்த நெடுவெண்பாட்டு வந்துழிக் காண்க. (கருஅ)

கருகூ அங்கதப் பாட்டள வவற்றோ டொக்கும்.*

இது வசைப்பாட்டெல்லை கூறுகின்றது.

இ-ள். வசைப்பாட்டி னெல்லை முற்கூறியவைபோல ஈரடிச்சிறுமையும் பன்னீரடிப் பெருமையுமாய் வரும். எ-று.

உ-ம். [2]"இருடீர் மணிவிளக்கத் தேழிலார்" இது நான்கடியான் வந்தது. பிறவு மன்ன. (கருகூ)

* எ-து, அங்கதப்பாட்டிற் களவுணர்-ற்று அங்கதப்பாட்டாகிய வெண்பாவிற்கெல்லை, சிறுமை யிரண்டடி, பெருமை பன்னிரண்டடி. எ-று. உதாரணம் சில காட்டப்பட்டன. ஏனைய வந்தவழிக் கண்டுகொள்க. எ-து. உரையாசிரியருரை.

1 இருதேவர் பார்ப்பா ரிடைபோகார் தம்மினு, மிக்கார் வழுத்திற் றெருழுதெழுக - வொப்பார்க் - குடன்செல்ல லுள்ள முவந்து. என்பது.

2 இப்பாட்டு முழுதையும் இவ்வியல் கஉரு-ஆம் சூத்திரவுரையிற்கூறினர்.

௧௬௦ கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
புறநிலை வாயுறை செவியறி வென்றிவை
தொகுநிலை யளவி னடியில வென்ப.*

இது "ஒருபொருணுதலிய" (செய். ௧௫௪) என்னுஞ் சூத்திரத்திற் சீர்வகைக்கலிவெண்பாவிற்கும், நால்வகை மருட்பாவிற்கும் அடிவரையறையின்மை கூறுகின்றது. கலி...றிவை எ-து கலிவெண்பாட்டு, கைக்கிளைச் செய்யுள், புறநிலைவாழ்த்துப்பொருண்மேல் வருஞ்செய்யுள், வாயுறைவாழ்த்துப்பொருண்மேல் வருஞ்செய்யுள், செவியறிவுறூஉப்பொருண்மேல் வருஞ் செய்யுள் என்றிவ்வைந்தும். தொகு...ப. எ-து பெருமைக் கெல்லையித்துணையெனத் தொகுத்துக்கூறுந் தன்மையையுடைய அளவால்வரும் அடியையுடையவல்லவென்று கூறுவர் புலவர். எ-று.

உ-ம். "சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினு மாடும்" (கலி. ௫௧) இது ஒருபொருணுதலிப் பதினைறடியான்வந்தது. "திருந்திழாய் கேளாய்" (கலி. ௬௫) என்பது இருபத்தொன்பதடியான்வந்தது. இதனைக் கைக்கிளையோடெண்ணுதலிற் கைக்கிளைப்பொருளொடுங் கலிவெண்பாட்டுவருதல் கொள்க. அது கலித்தொகைக்கணின்மையிற் காட்டாமாயினும். ஒழிந்தவுறுப்போடுகூடிய கலிவெண்பாட்டுக்கள்பெற்ற அடிவரையறையும் அவ்வுதாரணங்களுட் காண்க. இனிக் "கனவினிற் காண்கொடாக் கண்ணுங் கலந்த, நனவினுண் முன்விலங்கு நாணு.—மினவங்கம், பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார், செங்கோல் வடுப்படுப்பச் சென்று" (முத்தொள்.) இது புறப்புறக்கைக்கிளை. இதனைக் கைக்கிளைப் பொருண்மேல் வந்த கலிவெண்பாட்டெனின் இது சுட்டி யொருவர்ப் பெயர்க்கொண்ட பாடாண்டிணைப் புறப்பொருளாகலானுங் கலி வெண்பாட்டு அப் பொருண்மேல்வருதல் சிறு பான்மையாதலானும் இது பன்னீரடியினிகவாதுவருதலானும் வெண்பாவேயாம். இவ்வாறு புறப்பொருளான் வந்து இரண்டுறுப்பாயும் ஒருறுப்பாயும் பாவும் பொருளும் வேறுபட்டு வெள்ளடியினிகந்து வருங் கலிவெண்பாவாகிய உலாச்செய்யுள் அடிவரையன்றி வருமாறும் பெருந்திணைப் பொருண்மேல்வரும் மடற்செய்யுளும் ஒருறுப்பாய் அடியிகந்துவருமாறும் இக்காலத்துக் கூறுகின்றவற்றுட் காண்க. அது திருவுலாப் புறத்துள்ளும் "வாமான வீசன் வரும்" (ஆதியுலா.) என முடித்து

* எ-து, அடிவரையறையில்லாத செய்யுளுணர்த்ற கலிவெண்பாட்டுக் கைக்கிளைப்பொருட்செய்யுளுஞ் செவியுறையும் வாயுறைவாழ்த்தும் புறநிலைவாழ்த்துமென்னும் பொருண்மைக்கண் வரும் வெண்பாக்களும் அளவுவரையறுக்கப்படா. பொருண்முடியுங்காறும் வேண்டிய அடி வரப்பெறும். எ-று. எ-து. உரையாசிரியருரை.

மேல் வேறோருறுப்பாய வாறும் ஒழிந்த உலாக்களுள் வஞ்சியுரிச்சீர் புகுந்த வாறும் அடிவரையறை யின்மையுமாம். அகப்புறமும் புறப்புறமுமாய மருட்பாவாய்க் கைக்கிளை யடிவரையறையின்றி வந்தன வந்துழிக்காண்க. காமஞ்சாலா இளமையோள்வயின்வந்த கைக்கிளையுங் காட்சிமுதலிய கைக்கிளையும் ஆசிரியத்தினும் வஞ்சியினும் வாரா. எனவே யொழிந்தபாவி னுள் எல்லாக்கைக்கிளையும் வருமாயிற்று. "என்னை, புற்கை யுண்டு பெருந்தோ ளன்னே, யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னன் னம்மே, போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே, கல்லென் பேரூர் விழவுடை யாங்க, ணேமுற்றுக் கழிந்த மள்ளர்க், குமணர் வெரூஉந் துறையன் னன்னே" (புறம். அச) இது சுட்டி யொருவர்ப் பெயர்க் கொள்ளாத பாடாண்டிணைக் கைக்கிளை. "விடியல் வெங்கதிர்" (கலி. சகு) என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள் "கால்பொர நுடங்கலிற் கரங்கிசை யருவிநின், மால் வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ, புல்லாராப் புணர்ச்சியாற் புலம் பிய வென்றோழி, பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை" என்ப தூஉம் "நறவினை வரைந்தார்க்கும்" (கலி. கூகூ) என்னும் மருதப் பாட்டி னுள் "அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை யக்குடை, புறநிழற் பட் டாளோ விவளிவட் கண்டிகா, பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற் றுளை" என்பதூஉம் சுட்டி யொருவர்ப் பெயர் கொள்ளாத கைக்கிளையா மெனின் இவை தலைவனன்பின்மை மெய்யாயினன்றே கைக்கிளையாவது; அவ்வரைவு கடாவலும் ஊடலுங் காரணமாக அன்பிலனென்றலி னொரு தலைக் காமமன்று. ஒழிந்த அடிவரையின்றி வருமாறு மேற்கொள்க. (கசுo)

கசுக புறநிலை வாயுறை செவியறி வுறாவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதிற் றெரியின்
வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின வென்ப.*

இது கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போலவரு மென்றற்கு உடம்பட்டமைகண்டு ஈண்டுக் கூறுகின்றது.

இ-ள். இம் மூன்றும் முன்பு வெண்பாவும் பின்பு ஆசிரியமுமாய் வரும். எ-று.

---

* எ-து, மேலானவற்றுட் சிலபொருட்குரிய வேறுபாடுணர்-ற்று, புறநிலைவாழ்த்தும், வாயுறைவாழ்த்தும், செவியறிவுறூஉவும் மருட்பாவி னுலும் வரப்பெறும். எ-று. எனவே, மருட்பா நான்குபொருளினல்லது வரப்பெறாவென்றவாறாயிற்று. உதாரணம் வந்தவழிக்கொள்க. எ-து, உரையாசிரியருரை.

"மருட்பா வேனை யிருசீரல்லது" (செய். அரு) என்ற வழி இன்ன வாறு வருமென்னுமையின் இது கைக்கிளை மருட்பாப்போல வருமென் றற்கு முன்பு வெண்பா வியலினும் பின்பு ஆசிரிய வியலினும் முடியு மென்று அவை வருமுறைகூறினர். முன்னர் இம் மூன்று பொருட்கும் இலக்கணங் கூறிப் போந்தவற்றிற்கு இன்னவாறுஞ் செய்யுட்செய்த லுரித் தென்று ஈண்டு ஓர் செய்யுள் வேறுபாடு கூறினர், இது புறத்திணையுள்ளல் லது வாரா வென்றற்குத் திண்ணிதினென்றார். எனவே இவை கைக் கிளை மருட்பாப்போல ஆண்பாற் கைக்கிளையும் பெண்பாற் கைக்கிளையு மாய் அகனும்புறனும்பற்றிவாராவென்பது பெற்றாம். இயலென்று இருகாற் கூறியவதனான் இரண்டுபாவும் இயற்சீரான்வருதல் சிறப்புடைத் தென்க. 'பண்புற' என்றதனான் வெண்பாவினிழிபாகிய எழுசீரானன்றி யெண்சீரான் வருதலும், ஆசிரியத்தினிழிபாகிய மூன்றடிவரினும் எருத் தடி குட்டம்பட்டு வருதலும் வெண்பா நாலடிமுதற் பன்னீரடியளவு முய ர்தல் சிறப்புடைத்தெனவும் வெண்பாப் பலவடிவரினு மாசிரிய மூன்றி னிகவாவென்றுங்கொள்க. பாவின வென்றதனான் இவ்விருபகுதியுந் தத்தம் பாக்கள் வேறுவேறு நிகழுமென்று கொள்க. "எறும்பி யளையிற் குறும்பல் சுனைய" (குறுங். கஉ) என்னும் பாட்டுப்போல வோசை கலந்து வாரா. உ-ம். "தென்ற லிடைபோழ்ந்த தேனார் நறுமுல்லை, முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க், குன்றமர்ந்த கொல்லேற்றா னிற் காப்ப வென்றுந், தீராநண்பிற் றேவர், சீர்சால் செல்வமொடு பொலிமதி சிற ந்தே" இது புறநிலை. [1]இஃது அடியிகந்தது வந்துழிக்காண்க. "பல முறையு மோம்பப் படுவன கேண்மின், சொலன் முறைக்கட் டோன்றிச் சுடர்மணித்தே ரூர்ந்து, நிலமுறையி னாண்ட நிகரில்லார் மாட்டுஞ், சில முறை யல்லது செல்வங்க ணில்லா, விலங்கு மெறிபடையு மாற்றலு மன் புங், கலங்கசதங் கல்வியுந் தோற்றமு மேனைப், பொலஞ்செய் புனைகலனே டிவ்வாறி னாலும், விலங்கிவருங் கூற்ற நீக்கலு மாகா, தனைத்தாத னியிருங் காண்டிர்-நினைத்தக்க, கூறிய வெம்மொழி பிழையாது, [2]தேறிநீ ரொழுகிற் சென்றுபயன் றருமே" இது வாயுறை. "பல்யானை மன்னர் முருங்க வமருழந்து, கொல்யானைத் தேரொடுங் கோட்டந்து நல்ல, தலையாலங் கானம் பொலியத் தொலையாப், படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞ, ரடுக ளம் வேட்டோன் மருக வடுதிற, லாழி நிமிர்தோட் பெருவழுதி யெஞ் ஞான்று, மீர முடையையா யென்வாய்ச்சொற் கேட்டி, யுடைய வுழவரை நெஞ்சனுங்கக் கொண்டு, வருங்கா லுழவர்க்கு வேளாண்மை செய்யன், மழவ ரிமைக்கும் வரைசா ணிதியீட்டங், காட்டு மமைச்சனர் யாற்றத்

1 இஃதென்றது புறநிலையை.

2 தேறுநீரொழுகின் என்பதும் பாடம்.

தெளிய, லடைத்த வரும்பொரு ளாறன்றி வெளவலி, னத்தை பெரும் பொரு ளாசையாற் சென்று, பெருங்குழிசி, மன்ற மறுக வகழாதியென்று, மறப்புற மாசி மதுரையா ரோம்பு, மறப்புற மாசைப் படேற்க வறத்தா, லவையார் கொடோத் திருத்தி நவையாக, நட்டார் குழிசி சிதையாதி யொட்டார், செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் கவிபடைத்தாய், கற்றூர்க் கினைஞகிக் கல்லார்க் கடிந்தொழுகிச், செற்றூர்ச் செகுத்தநிற் சேர்ந்தாரை யாக்குதி, யற்ற மறிந்த வறிவிஞய் மற்று, பிவையிவை நீவா தொழுகி னிலையாய், பொருகட லாடை நிலமக, ளொருகுடை நீழற் றுஞ்சுவண் மன்னே” இது செவியுறை. (கசுக)

கசுஉ பரிபா டல்லே,
நாலீ ரைம்ப துயர்வடி யாக
வையைந் தாகு மிழிவடிக் கெல்லை.*

இது முறையே பரிபாடற் கெல்லைகூறுகின்றது.

இ-ள். பரிபாடற் குறுப்பாகிய வெண்பாவும், பொதுப்பாவும் நானூறடி பெருக்கத்திற் கெல்லையாகவும் இருபத்தைந்தடி சுருக்கத்திற் கெல்லையாகவும் பெறும். எ-று.

அவை 1தொகையுட் காண்க. (கசுஉ)

கசுஙு அளவியல் வகையே யனைவகைப் படுமே.†

இது பிறன் கோட் கூறல்.

இ-ள். யான் கூறிய அளவியலின் கூறுபாடு அத்துணைப்பகுதிப்படும். எ-று.

என்றது யான் சிறப்புடைத்தெனக் கூறிய பெருமைக்கெல்லை யத்துணைப்படுமெனவே பிறர்பெருமைக்கெல்லைகொள்ளாதது சிறப்பின்றென்றவாறாயிற்று. (கசுஙு)

* எ-து, பரிபாடற் கடிவரையறையுணர்-ற்று. பரிபாடற் செய்யுள், நானூறடியுயர்பாக விருபத்தைந்தடி யிழிபாக வுணர்த்திற் றென்றவாறு. எனவே, இடை யெல்லாவடியானும் வரப்பெறும். எ-று. கலிப்பாவினுள் ஒத்தாழிசைக்களவு மேற்கூறப்பட்டது. கலிவெண்பாட்டிக்குவரையறை மேற்கூறப்பட்டது. கொச்சகக்கலிப்பாவுக்கு வரையறைகூறுமையாற் பொருண்முடிவுகாறும் வரப்பெறுமென்று கொள்க. அவ்வழிப் பலவுறுப்பாகி வருதலின் அதற்குறுப்பாகிய செய்யுள் அளவிற்றுதல்வேண்டும். உறழ்கலியுங் கொச்சகக்கலிப்பாற்படும். எ-து, உரையாசிரியருரை.

† எ-து, மேற்சொல்லப்பட்ட......தொகுத்துணர்-ற்று இவ்வதிகாரத்தினு ளீண்ட திகரிக்கப்பட்ட அளவிய லீண்டுச்சொன்னவகைப்படும். எ-று, எ-து, உரையாசிரியருரை.

1 தொகையென்பது - எட்டுத்தொகை.

கசுச எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியி
னடிவரை யில்லன வாறென மொழிப.*

இது நான்குபாவிற்குமளவு முற்கூறிய அளவிற் படாதன கூறுகின்றது.

இ - ள். அகமும்புறமுமாகிய எழுநிலத்திலுந்தோன்றியசெய்யுளை யாராயின் அடிவரையின்றிவரும் இலக்கணத்தன ஆறென்றுகூறுவர் புலவர். எ-று.

எழுநில மென்றதற்குப் பாட்டு உரைநூல் முதலியனவுமாம். (கசுச)

கசுரு அவை தாம், நூலினா வுரையினா
நொடியொடு புணர்ந்த பிசியி னான
வேது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான.†

இது முற்கூறிய ஆறற்கும் பெயரும் முறையும் உணர்த்திற்று.

இ-ள். முற்கூறிய அடிவரை யில்லாதனதாம் நூலின்கண்ணுவனவும், உரையின்கண்ணுவனவும், நொடியின்மாத்திரையவாகிய பிசியின்கண்ணுவனவும், ஒருமொழிக்கேதுவாகிவரும் முதுமொழிக்கண்ணுவனவும், மறைத்துக்கூறுஞ்சொல்லாற்கூறிய மந்திரத்தின்கணுவனவும், கூறுகின்ற பொருளை யிடைக்கரந்துகூறுங் குறிப்பின் கண்ணுவனவுமென ஆறுவகைப் படும். எ-று.

நூலினா எ-து சூத்திரச் செய்யுட்களுள் ஆசிரியமாய் வந்து அளவை பெறுதனவற்றைநோக்கிற்று. அச்சூத்திரத்தைநோக்கிவருமுரையும் ஒரு செய்யுளாம். ஒழிந்தன வடக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் வரினும் ஈண்டுச் செய்யுளைநோக்குதற்கு அவற்றுக் கண்ண வென்றார். இவையும் அளவிகந்துவருவனவே. அளவு முற் கூறிற்றும். (கசுரு)

* எ-து, அடிவரையறையில்லாதன வரையறுத்துணர்-ற்று. எழுநில் மாவன:—பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பனவற்றுட் பாட்டொழிந்தவாறும் அடிவரையில்லை. எ-று. எ-து, உரையாசிரியருரை.

† எ-து, மேற்சொல்லப்பட்ட அறுவகையு மாமாறுணர்-ற்று. வாய் மொழியெனினு மந்திரமெனினு மொக்கும். அங்கதமாவது:—"செம் பொருள் கரந்த தென்றிரு வகைத்தே" (செய்-கஉச) என்றதனைக் கரந் தவங்கதமெனினுஞ் சொற்குறிப்பெனினு மொக்கும். அவை வருமாறு வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும். எ-து, உரையாசிரியருரை.

கசுசு அவற்றுள் நூலெனப் படுவது1
முதலு முடிவு மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
யுண்ணின் றகன்ற வுரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே.*

இஃது அந்நூல்கள திலக்கணங் கூறுகின்றது.

இ-ள். நூ...து. எ-து நூலென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது. முத...ன்றி. எ-து முன்னும்பின்னுமாறுபடாது. தொகை...காட்டி. எ-து தொகுத்தும் வகுத்தும் பொருள்காட்டி. உண்...ந்தி. எ-து தன்னுள்ளே யடங்கிநின்று விரிந்த வுரையோடு பொருந்தப்பட்டு. நுண்...பு. எ-து பருப்பொருட்டாகாது நுண்பொருட்டாகப் பொருள்விளக்கலாகிய அவ்விலக்கணம் அதனிலக்கணம். எ-று.

அது எழுத்து முப்பத்து மூன்றெனத் தொகுத்ததனைப் பின்னர்க் குறிலும் நெடிலும் மூவினமுஞ் சார்பிற்றோற்றமுமெண வகுத்தாற்போல்வனவும் பிறவுமென் றுணர்க. சாதிபற்றிப் படுவதென ஒருமையாற் கூறினர். (கசுசு)

கசுஎ அதுவே தானு மீரிரு வகைத்தே†

இஃது அந்நூற்பகுதி நான்காமென்கின்றது.

இ-ள். அந்நூற்பகுதி நான்காம். எ-று. (கசுஎ)

---

* எ-து, நூலாமாறுணர்-ற்று நூலென்று சொல்லப்படுவது. எடுத்துக் கோடற்படுவதும், அடுக்கும்பொருளும் மாறுபடாமற் கருதியபொருளைத் தொகையானும், வகையானுங் காட்டி, அதனகத்துநின்றும் விரிந்தவுரையோடு பொருத்தமுடைத்தாகி நுண்ணிதாகியபொருள்விளக்கலாவது நூற்கியல்பாம். எ-று. அகன்றவுரையோடு பொருந்துதலாவது:—சொல்லாத பொருண்மையெல்லாம் விரிக்கவேண்டியவழி அதற்கெல்லா மிடனுண்டாதல். எ-து, உரையாசிரியருரை.

† எ-து, நூல் பாகுபடுமா றுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட நூல், நான்கு வகையுடைத்து. எ-று. அவையாமாறு முன்னர்க்காட்டுதும், எ-து, உரையாசிரியருரை.

---

1 நூலெனப்படுவது நுவலுங்காலை என்ற பாடம் நச்சினார்க்கினியர் உரை ஏடுகளிலில்லை.

கசுஅ ஒருபொரு ளுதலிய சூத்திரத் தானு
மினமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானு
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபி னியலு மென்ப.*

இது அந்நான்கற்கும் பெயரும் முறையு முணர்த்திற்று.

இ-ள். ஒரு...னும். எ-து அந்நூல் ஒருபொருளேகருதிவருஞ் சூத்திரத் தானும், இன......னும். எ-து இனமாயபொருளைக்கூறிய வோத்தினானும், பொது...தானும். எ-து பலபொருட்குப் பொதுவாகிய இலக்கணங்களைக் கூறிய படலத்தானும். மூன்று...னும். எ-து மூன்றுறுப்பையடக்கிவரும் பிண்டத்தா னும். என்......ப. எ-து என்று கூறிய அத்தன்மைத்தாகியமரபினான் நடக்கு மென்றுகூறுவர் புலவர். எ-று.

ஆங்கென்ற மிகையாற் பிண்டமேயன்றிப் பிண்டியென்பதும் ஒன்றுள தென்று கொள்க. (கசுஅ)

கசுகூ அவற்றுட், சூத்திரந் தானே
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே.†

இது முறையே சூத்திரவிலக்கணங் கூறுகின்றது.

இ-ள். அவற்...ன்றி. எ-து அந்நான்கனுள் ஒருபொருணுதலுஞ் சூத்திர மாவது: ஒருபொருணுதலுங்காற் கண்ணாடி சிறிதாயினும் அகன்றுபட்ட பொருளை யறிவித்தாங்கு அறியத் தோன்றி. நாடு...ங்க. எ-து தெரிதல்வேண் டாதபடி அவ்வகன்ற பொருளை மிகவும் விளங்குமாற்றால். யாப்...பது வே. எ-து செய்யுளுட் டோன்றச்செய்து முடிக்கப்படுவது. எ-று. (கசுகூ)

---

* எ-து, மேற் றொகைகொடுக்கப்பட்ட தானமாமா றுணர்-ற்று. "ஒரு பொரு ளுதலிய சூத்திரத் தானும்" எ-து, ஆசிரியன் யாதொருபொருளைக் குறித்துக் கூறலானும். எ-று. "இனமொழி கிளந்த வோத்தி னானும்" எ-து, இனமாகியபொருளைச் சொல்லப்படும்ஒத்தினானும். எ-று. "பொது மொழி கிளந்த படலத் தானும்" எ-து, மேற்சொல்லப்பட்டவினங்கள்பல வற்றையுங் கூறப்படும் படலத்தானும். எ-று. "மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும்" எ-து, இம்மூன்றினையு முறுப்பாகவடக்கிய பிண்டத் தானும். எ-று. "ஆங்கனை மரபி னியலு மென்ப" எ-து, அம்மரபினானியலு நூல். எ-று. அவற்று ளிலக்கண முன்னர்க்கூறப்படும். எ-து, உரை யாசிரியருரை.

† எ-து, சூத்திரத்திற் கிலக்கணமுணர்-ற்று சூத்திரமாவது, கண்ணாடி நிழற்போல விளங்கித்தோன்றி யாராயாமற் பொருணனிவிளங்குமாறு, யாப்பின்கண்ணேதோன்ற யாப்பது. எ-று. ஆடிநிழலினறியத் தோன்று தலாவது, சூத்திரம்படித்தவளவிலே யதனாற் சொல்லப்படுகின்றபொரு

கஎ0 நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.*

இஃது ஓத்திலக்கணங் கூறுகின்றது.

இ-ள். இனமொழி கிளக்குங்காற் சிதர்ந்துகிடப்பப் பலவோத்தாகச்செய்யாது, மணியை நிரலவைத்தாற்போல ஓரினப்பொருளையெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஓத்தென்றுகூறுவர் சிறந்த சொற்புலவர். எ-று.

நேரினமணியெனவே யொருசாதியினுந் தம்மி னொத்தனவே கூறல் வேண்டும். எ-று. 'வேற்றுமையோத்தும்' 'வேற்றுமைமயங்கியலும்' 'விளிமரபும்' என மூன்றன்பொருளையும் ஒன்றாக வேற்றுமையோத்தென்னாது வேறுவேறுவைத்தவாறுகாண்க. (கஎ0)

கஎக ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.†

இது முறையே படலங் கூறுகின்றது.

இ-ள். ஒருபொருள்நெறியன்றிப் பலவேறுவகைப்பட்டபொருளெல்லாவற்றிற்கும் வேறுவேறிலக்கணங்கூறக்கருதி யவற்றுக்குப் பொதுமொழியாகத் தொடர்ந்துவரின் அது படலமாம். எ-று.

1'பொதுமொழி கிளந்த படலம்' எனவே யொருநெறிப்பட்ட பொருட்குப் பொதுவாய்வருதலையும்விலக்கி விரவியபொருட்குப் பொதுவாக மொழிவது படலமாயிற்று. படலமாவது அதிகாரமாம். (கஎக)

---

ளொருங்குதோற்றல். நாடுதலின்றிப் பொருணனிவிளக்கலாவது, தன்கணுக்கப்பட்ட சொற்குப் பொருளாராயாமற் புலப்படத்தோன்றுமாறு யாத்தல். உ-ம். "வேற்றுமை தாமே யேழென மொழிப" (தொல் சொல். வேற்று-க.) "விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே" (ஷை ஷை ஷை உ.) என்றவழி யாப்பினகண்ணே பொருடோன்ற யாத்தவாறு. கண்ணடி நிழற்போலக் கருதியபொருளுந் தோற்றியவாறு கண்டுகொள்க. எ-து, உரையாசிரியருரை.

* எ-து, ஒத்திற் கிலக்கணமுணர்-ற்று. ஒத்தவினமாகிய மணியை யொருங்கு சேரவைத்தாற்போல ஒரோவோரினமாகி வரும்பொருளை யோரிடத்தேசேரவைத்தா லோத்தென்று பெயராம். எ-று. எனவே, அவ்வினமாகிச்சேர்ந்த நிலைக்கு மோத்தென்று பெயராம். எ-று. அது வேற்றுமையோத்தென்பதனு னறிக. எ-து, உரையாசிரியருரை.

† எ-து, படலத்திற்கிலக்கணமாமாறுணர்-ற்று. ஓரினமாகிய நெறியின்றிப் பலநெறியான் வருவன பொருளானே பொதுமொழியாற் றொடர்புபடின் அது படலமெனப்பெயராம். எ-று. அது, கிளவியாக்க முதலாகளச்சவியலீறாகக்கிடந்த வொன்பதோத்தினும் வேறுபாடுடையவாயினும் சொல்லிலக்கண முணர்த்தினமையாற் சொல்லதிகாரமெனப் பெயர்பெறுதல். அதிகாரமெனினும் படலமெனினுமொக்கும். எ-து, உரையாசிரியருரை.

---

1. செய். கருக.

௧௱௭௨ மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவரது பிண்ட மென்ப.*

இது பிண்டங் கூறுகின்றது.

இ-ள். சூத்திரமும் ஓத்தும் படலமுமென்கின்ற மூன்றுறுப்பினையும் உள்ளடக்கிய தன்மைத்தாய்வரின் விளங்கியமொழியையுடையபுலவ ரதனைப் பிண்டமென்று பெயர்கூறுவர். எ-று.

அம்மூன்றனையும் உறுப்பெனவே பிண்டமென்பது உறுப்பியென்பது பெற்றாம். தொல்காப்பியமென்பது பிண்டம். அதனுள் எழுத்துச் சொற்பொருளென்பது படலம். ஓத்துஞ் சூத்திரமு மொழிந்த விரு கூறுமாம். தோன்றுமொழிப்புலவரென்றதனாற் பிண்டத்தினையுமடக்கிநிற்பதுவேறு பிண்டியெனப்படும். அது முதனூலாகிய அகத்தியம். என்னை? இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலின். (௧௱௭௨)

௧௱௭௩ பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்
றுரைவகை நடையே நான்கென மொழிப.†

இது "நூலினான வுரையினான" (செய். ௧௬௬) என நிறுத்த முறையே நூலுணர்த்தி யுரைகூறுகின்றது.

இ-ள். பாட்டிடை வைத்த குறிப்பினானும் எ-து ஒரு பாட்டினை யிடை யிடை கொண்டுநிற்குங் கருத்தினான்வருவனவும், எ-று. அவை தகடூர் யாத்திரையும், சிலப்பதிகாரமும் போல்வன. ஆண்டுப் பிறபாடை தழுவிவருவன தமிழுரை யாகாமையின் ஈண் டாராய்ச்சி யின்றாம். அதன்கட்டமிழுரை யுள்ளன ஈண் டடங்கும். பாவின் றெழுந்த கிளவி யானும் எ-து பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவனபோல்வன. சூத்திரம் பாட்டெனப்படா.

* எ-து, பிண்டமென்பதுணர்-ற்று. மூன்றுறுப்படக்கிய தன்மைத் தாயின், பிண்டமென்று சொல்லுவர். எ-று. மூன்றுறுப்படக்குதலாவது:- சூத்திரம் பலவுடைத்தாகி, ஓத்தும் படலமு மின்றாகிவரினும், ஓத்துப் பலவுண்டாகிப் படலமின்றிவரினும், படலம் பலவாகிவரினும் அதற்குப் பிண்டமென்னும்பெயராம். எ-று. அவற்றுள், சூத்திரத்தாற் பிண்டமாயிற்று, இறையனார் களவியல் ஓத்தினாற் பிண்டமாயிற்று பன்னிருபடலம் அதிகாரத்தாற் பிண்டமாயிற்று, இந்நூலென்றறிக. இவற்றை முறையே சிறுநூல், இடைநூல், பெருநூல் எனப்படும். எ-து, உரையாசிரியருரை.

† எ-து, உரை பாகுபடுமா றுணர்-ற்று. பல சொற்றொடர்ந்து பொருள் காட்டுவனவற்றுள் ஓசைதழீஇயவற்றைப் பாட்டென்றார். ஓசையின்றிச் செய்யுட்டன்மைத்தாய்வருவது, நன்னூலெனப்பட்டது. அவ்வகையின்றிச் செய்யுட்டன்மைத்தாய்வருவது, நூலெனப்பட்டது. பாட்டிடை

பாட்டும் உரையும் நூலுமென வேறேதலின். அன்றியுஞ் சூத்திரங் கருதிய பொருளையன்றி யுரையான் வேறோர்பொருள்கூறி அதனைத் தொடர்புபடுத்திக் கூறுமையின்; ஆண்டும் ஒருவன் கூறியதற்கு ஒருவன் பொருள்கூறுகின்றுனும். ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே உரைகூறுவனவுமொக்கும். பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும். எ-து பொருண்முறைமையின்றிப் பொய் யாகத் தொடர்ந்துகூறுவன. எ-று. அவை ஓர் யானையுங் குதிரையுந் தம் முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறுசெய்தனவென்று அவற்றுக் கியையாப் பொருள்பட்டதோர் தொடர்நிலையாய் ஒருவனுழை யொருவன்கற்று வரலாற்றுமுறைமையான் வருகின்றன. பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும். எ-து பொய்யெனப்படாது மெய்யெனப்பட்டு நகுதற்கேதுவாகுந் தொடர்நிலையானும். எ-று. இவை சிறுக்தூரிஇயுரையும், தந்திரவாக்கியமும் போல்வன. இவை பொய்யெனப்படாது உலகியலாகிய நகைதோன்றுதலின்; என் றுரைவகை நடையே நான்கென மொழிப. எ-து. என் றுரைப்பகுதி வழக்கு இந்நான்குமென் றுரைப்பர் புலவர். எ-று. வகையென்றதனுன் உரைப்பகுதி பிறிது முள. அவை மரபியலுட் கூறுப. (கஎகூ)

---

வைத்த குறிப்பாவது, பாட்டிடைவைக்கப்பட்டுப் பொருட்குறிப்பினுனும் உரையாம். எ-று. அவையாமாறு:—உ-ம் "ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்கால்" (கலி ருகூ.) என்னுங் குறிஞ்சிக்கலியினுள் "இவளைச், சொல்லா டிக் காண்பேன் றகைத்து" என்றது உரைக்குறிப்பு. இனி "ஒருஉக், கொர்டியியனல்லார்" (கலி-அஅ) என்னும் மருதக்கலியினுள் "ஈடியதமக் கியா சொல்லைத் தக்கரா மற்று" என்பதுமது சிலப்பதிகாரத்துள், ஆய்ச்சியர்துரவையுள் "கயலெழுதிய விமய நெற்றியி, னயலெழுதிய புலியும் வில்லு, நாவலந் தண்பொழின் மன்னரோ, டேவல் கேட்ப வர சாண்ட, மாலைவெண்குடைப் பாண்டியன் கோயிலுட், காலை முரசியம்பு மாதலி, னெய்ம் முறைநமக் கின்றாகுமென, வையைதன் மகளைக்கூஉய்க். கடைகயிறு மத்துங் கொண், டிடை முதுமகள்வந்து தோன்றுமன்" என் பது, பாவின்றெழுந்த கிளவியாவது, பாக்களையொழியத்தோன்றிய சொல் வகையானும் உரையாம். எ-று. வழக்கின்கண் ஒருபொருளைக்குறித்து வினவுவாருஞ் செப்புவாருங் கூறுங்கூற்று. அதுவு மிலக்கணம் பிழையா மற் கூறல்வேண்டுதலானும், ஒருபொருளைக் குறித்துச் செய்யப்படுதலா னுஞ் செய்யுளாம். இதனைக்குறித்தன்றே "செப்பும் வினுவும் வழாஅ லோம்பல்" என்பது முதலாகக் கூறப்பட்ட விலக்கண மெல்லாமென்று கொள்க. "பொருண்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்" ஈ-து, பொரு ளியைபில்லாத பொருளையுடைத்தாதலிற் பொய்ம்மொழியாயிற்று."பொரு ளொடு புணர்ந்த நகைமொழி யானு" மென்றது, பொருளைப்பொருந்திய நகைவழி மொழிவாய்வருகின்றது. எ-று. நகைமொழியாவது, மேற் சொல்லப்பட்டவரை பொருந்தாதென விகழ்ந்துகூறல், அவ்விகழ்ச்சியின் பின்னர்ப் பொருளுணர்ந்தும் உரை பிறக்குமாதலிற் பொருளொடு புணர்ந்த நகைமொழியானும்" உரை வருமென்றார். "என் றுரைவகை நான்கென மொழிப" ஈ-த், இவ்வுவகையினுனவுரை நான்குவகைப்படும். எ-று. எ-து. உரையாசிரியருரை.

கஎச அதுவே தானு மிரு வகைத்தே.*

இது அந்நான்கனுள் முதலன இரண்டும் ஒன்றாகவும் ஏனைய விரண்டும் ஒன்றாகவும் தொடுக்கப்படும்; அவற்றால் பயன்கொள்ளுங்காலத்து. எ-று. (கஎச)

களரு ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே
யொன்றே யார்க்கும் வரைநிலை யின்றே.†

இது மேனின்ற அதிகாரத்தான் இறுதிநின்ற இரண்டன்பகுதியுமாகிய ஒன்று செவிலிக்கே யுரித்து. ஒழிந்த இரண்டனுளாகிய ஒன்றும் வரைவின்றி எல்லார்க்கு முரித்து. எ-று.

தலைவியை வற்புறுக்கும் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுது போக்குதற் குரியர். எ-து. இக்கருத்தானே சான்றோர், "செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக், குறியவு நெடியவு முரைபல பயிற்றி, யின்னே வருகுவ ரின்றுணை யோரென. முகத்தவை மொழியவு மொல்லாள்" (நெடுநல் கநூ-ரு) என்றார் 1பாட்டினுள். பிறசான்றோரும் 2"செம்முகச் செவிலியர் பொய்ந் நொடி பகர" என்றார். மற்றும் என்றதனான் இவையே யன்றி வருகின்றபிசியுஞ் செவிலிக் குரித்தெனக. இனிப் பாட்டிடை வைத்தகுறிப்பும் பாவின்றெழுந்தகிளவியும் வரையறையின்றிவருமாறு பலவற்றுள்ளுங் காண்க. (களரு)

---

* எ-து, மேற்சொன்னவுரை இரண்டுவகைப்படும். எ-று. இரண்டு வகையாவது:—மைந்தர்க்குரைப்பனவும், மகளிர்க்குரைப்பனவுமாம். எ-து, உரையாசிரியருரை.

† எ-து. மேல் இருவகைப்படுமென்ற வுரையை யுரைத்தற்குரியாரை யுணர்-ற்று. மகளிர்க்குரைக்குமுரை செவிலிக்குமுரித்து, மைந்தர்க்குரைக்குமுரை யெல்லார்க்குமுரித்து. எ-று. செவிலியிலக்கணத்தி னுரைக்கின்ற வுரையும், பாட்டினுரைக்கின்றவுரையும் கூறுவரோவெனின், அவ்விடங்களின்வரு முரை பொருள்பற்றிவருதலி னப்பொருள் கூறலெனக. அன்றியும், "அதுவேதானும்" என்பது பொருளொடு புணர்ந்த நகைமொழியைச் சுட்டிற்றாக்கி யம்மொழி யிரண்டுங்கூறப்படுமெனப் பொருளுரைப்பினு மமையும். எ-து உரையாசிரியருரை.

---

1 'பாட்டு' என்பது பத்துப்பாட்டு.
2 செம்முது என்பதும் பாடம்.

௧௭௬ ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானுந்
தோன்றுவது கிளந்த துணிவி னானு
மென்றிரு வகைத்தே பிசிவகை நிலையே.*

இது முறையே பிசி யிரண்டென்கின்றது.

தன்கட் கிடந்த வொப்புமைக் குணத்தோடு பொருந்திவருமாற்றை யுவமப் பொருளானும், இனி யொன்றுகூற வொன்றுதோன்றுந் துணிவிற்றாகக் கூறுங் கூற்றானும் என் றிருகூற்றதாகும் பிசி கூறுபடு நிலைமை. எ-று.

அவை, "பிறை கவ்வி மலை நடக்கு" இது ஒப்பொடு புணர்ந்த வுவமம். இது யானையென்றும். "முத்துப் போற் பூத்து முகிழிற் கிளிவண்ண, நெய்த் தோர்க் குருதி நிறங்கொண்டு, வித்துதிர்த்து" என்பது மது. இது கமுகின் மேற்று. "நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி, னூராடு நீரிற்காக் கை" இது தோன்றுவதுகிளர்ந்ததுணிவு. இது நெருப்பென்றும். வகையென் றதனால் இது செவிலிக்கேயுரித் தென்க. (௧௭௬)

௧௭௭ நுண்மையுஞ் சுருக்கமு மொளியுடை மையு
மென்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ
மேது நுதலிய முதுமொழி யென்ப.†

இது முதுமொழிகூறுகின்றது.

இ-ள். நுண்மையுஞ்......தோன்றி எ-து: கூர்மையும், சொற்சுருங்கியிருத் தலும், விழுப்பமும், எளிதிற் பொருள்தெரிதலும் என்ற இந் நான்கும் விளங் கத்தோன்றி. குறித்த......வரூஉம். எ-து அறம் பொரு ளின்பமென்னு மூன் றனுள் ஒன்றை முடித்தற்கு வருமாயின். ஏது......என்ப. எ-து அங்ஙனம் வந்ததனை அப் பொருள் முடித்தற்குக்காரணமாகிய பொருளினைக் கருதிவரும் முதுமொழியென்பர் புலவர். எ-று.

"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக், கழுதை செவியரிந் தற்றே-வழுதியைக், கண்ட கருங்க ணிருப்பப் பெரும்பனைத்தோள், கொண்டன மன்னோ பசப்பு" இதனுள் ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்ததெனக் குறி த்து அப்பொரு ளியைபின்மை கூறி யதனைச் சொற்றொட ரினிதுவிளங்காதே னும் முற்கூறிய முதுமொழிக்கண்ணே யப்பொருளை முடித்தற்கேதுவாகிய இயைபின்மை கிடந்து முடிந்தவாறு காண்க. இதனுள் நுண்மைமுதலிய நான்குங்காண்க. பழமொழி யிவ்விலக்கணம் பற்றிச் செய்தது. (௧௭௭)

---

* எ-து, பிசிநிலைவகையாமாறுணர்-ற்று. ஒப்பொடுபுணர்ந்த வுவமை நிலையானும் பிசியாவதொன்று வருவதெனச் சொன்னது துணிவினானும் பிசியாம். எ-று. உ-ம்-"அச்சுப்போற் பூப்பூக்கு மம்மென்னும் காய்காய்க் கும்" எ-து, பிசி. இது உவமைபற்றிவந்தது. எ-து, உரையாசிரியருரை.

† எ-து, நுண்மைவிளங்கவும், சுருக்கம்விளங்கவும், ஒளியுடைமை விளங்கவும், மென்மைவிளங்கவும், என் றின்னோரன்னவிளங்கவும், தோன் றினகருத்தின்பொருளை முடித்தற்குவருமென்பவைகுறித்தன முது மொழியென்று சொல்லப்படும். எ-று. எ-து, உரையாசிரியருரை.

களஅ நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப.*

இது மந்திரச் செய்யுள் கூறுகின்றது.

இ-ள். சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்று பயக்கச்சொல்லுமாற்றலுடையார் அவ்வாணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்துச்சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப்படும். எ-று.

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க. தானேயென்று பிரித்தார், இவை தமிழ்மந்திரமென்றற்கும் மந்திரந்தான் பாட்டாகி யங்கத மெனப்படுவனவுள, அவை நீக்குதற்கு மென்றுணர்க. அவை, "ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த, காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய, வந்தண் பொதியிலகத்தியனா ராணையாற், செந்தமிழே தீர்க்க [1]சுவா" முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி, பரண கபிலரும் வாழி—யரணிய, லானந்த வேட்கை யான் வேட்கோக் குயக்கோட, னானந்தஞ் சேர்க சுவா" இவை தேற்கில் வாயில்திறவாத பட்டிமண்டபத்தோர் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவுஞ் சாவவும்பாடி யின்னவாறுகவெனச் 'சவிந்தற்பொருட்டாய்வந்த' மந்திரம் பாட்டாய்வருதலின் அங்கதமாயிற்று. இதனான் "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து, மறைமொழி காட்டி விடும்" (திருக். உஅ) என்றார். (களஅ)

களகூ. எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி யென்ப.†

இது முறையே கூற்றிடைவைத்த குறிப்புணர்த்துகின்றது.

இ-ள். எழுத்துமுடிந்தவாற்றானுஞ் சொற்றொடர்ந்தவாற்றானுஞ் சொற்படுபொருளானுஞ் செவ்வன் பொருளறியவரிதாகிப் பொருட்புறத்தே பொருளுடைத்தாயும் நிற்பது குறிப்பு மொழியாவது. எ-று.

---

* எ-து, மந்திரமாமா றுணர்-ற்று. நிறைந்தமொழியினையுடைய மாந்தர் தமதாணையாற்சொல்லப்பட்ட மறைந்தசொல் மந்திரமாம். எ-று. அது வல்லார்வாய்க் கேட்டுணர்க. எ-து உரையாசிரியருரை.

† எ-து, எழுத்தொடுஞ்சொல்லொடும்புணராதாகிய சொல்லினானுணரப்படும்பொருளின்புறத்தது குறிப்புமொழி. எ-று. மேல் அங்கதமோடு......ண்டுகுறிப்புமொழியென்றதனை னிச்சொல் வகைகுறித்தும் வருமென்றுகொள்க. புகழ்குறித்துவந்தாற் குற்றம் என்னையோவெனின் அதனை வெளிப்படக்கூறக்கேட்ட.....மினம்பயத்தலிற் குறிப்பினாற்கூறவேண்டுவது, வகையென்றுகொள்ளப்படும். எ-று. எ-து, உரையாசிரியருரை.

---

[1] சுவாகா என்பதுக்குச் சுவா என்றே ஏடுகளிலுள்ளது.

உ-ம். “குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையி, னடக்கிய மூக்கினர் தாம்” இது குஞ்சரமென்ப துணர்த்திற்று. இது கூறுகின்ற பொருளைக் கரந்துகூறப்பட்டு எதுமுதலியவற்றோடு புணராதுநின்றது. இது பாட்டுவடிவிற்றாய் வருதலிற் பிசியெனலுமாகாது. குறித்தபொருளை முடிய நாட்டினாற் சொல்லியலான் யாப்புவழிப்படாமையின் மரபழிந்து பிறவுங்குறை தலிற் பாட்டெனவும்படாதாயிற்று. அதனான் இது அடிவரையறையின் றாயிற்று. (கஎக)

1கஅ0 பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டி னியல பண்ணத்தி யியல்பே.*

கஅக அதுவே தானும் பிசியொடு மானும்.†

கஅஉ அடிநிமிர் கிளவி யீரா றாகும்.‡

* எ-து, பண்ணத்தியாமா றுணர்-ற்று. மேல் இத்துணையும் பாவின்றி வழங்குவனவும் எடுத்தோதினார். இனிப் பிறநூலாசிரியர்விரித்துக்கூறின இசைநூலின் பாவினமாமாறுணர்த்துதலின் இது... “பாட்டிடைக்கலந்த பொருளவாகி” எ-து பாட்டினிடைக்கலந்த பொருளையுடைத்தாகி எ-று. எனவே அவ்வடி, பாவிற்குரியபொருளேகொள்ளப்படும். “பாட்டினியல பண்ணத்தி” என்பது, பாட்டுக்களினியல்பையுடையவாம் பண்ணைத்தோற்று விக்குஞ் செய்யுட்கள். எ-று. பண்ணைத்தோற்றுதலின், பண்ணத்தி என்றார். அவையாவன:—சிற்றிசையும் பேரிசையு முதலாக இசைத்தமிழி லோதப்படுவன. அவையாமாறு வருகின்றசூத்திரத்தாற் காட்டுதும். எ-து, உரையாசிரியருரை.

† எ-து, மேற்சொல்லப்பட்டதனுள் ஒருதாரணமுணர்-ற்று. மேற் சொல்லப்பட்டபண்ணத்தி பிசியோடொத்தவளவிற்று. எ-று. பிசி எ-து இரண்டடியளவின்கண்ணேவருவதொன்றாகலின் இதுஇரண்டடியாம்.எ-று உ-ம். “கொன்றை வேய்ந்த செல்வனடியை, என்றுமேத்தித் தொழுவோ நாமே” இது, பிசியோடொத்தவளவிற்றாகிப் பாலையாழென்னும்பண்ணுக் கிலக்கணப்பாட்டாகிவருதலிற் பண்ணத்தியாயிற்று. பிறவுமன்ன, எ-து, உரையாசிரியருரை.

‡ எ-து, பண்ணத்தி பகுதிபடுமாறுணர்-ற்று. பண்ணத்தியெனினும் பாவினமெனினு மொக்கும். “நாற்சீர்கொண்டதடியெனப்படுமே” (செய் ௩உ.) என்றதனான் அடியென்பது நாற்சீரான்வருமென்று கொள்க. நாற் சீரின்மிக்குவரும்பாட்டுப் பன்னிரண்டும் அவ்வழி யவ்வடியின் வேறுபட்டு

1 இது முதலிய ஐந்து சூத்திரங்கட்கு நச்சினார்க்கினியருரை கிடைத்த ஏடுகளிலில்லை.

வருவனவுங் கொள்ளப்படும். எ-று. இதனாற்சொல்லியது இருசீரடி முதலாகிய எல்லாவடிகளானு மூவடிச் சிறுமையாக வேறிவரும் பாவின மென்றவாறும். பன்னிரண்டாவன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி யெனச் சொல்லப்பட்ட நான்குபாவினோடும் தாழிசை, துறை, விருத்தம் என்னு மூன்றினத்தையு முறழப் பன்னிரண்டாம். அவற்றுள், தாழிசை யாவது ஆசிரியத்தாழிசை, வஞ்சித்தாழிசை, வெண்டாழிசை, கலித்தா ழிசையென நான்காம். துறையாவது, ஆசிரியத்துறை, வஞ்சித்துறை, வெண்டுறை, கலித்துறையென நான்காம். விருத்தமாவது, ஆசிரிய விருத்தம், வஞ்சிவிருத்தம், வெளிவிருத்தம், கலிவிருத்தம் என நான்காம். அவற்றுள், ஆசிரியத்தாழிசையாவது மூன்றடியொத்துவருவது. அது "நீடற்க வினையென்ற நெஞ்சினுள்ளி நிறைமலர் சாந்தினோடு, வீடற்கு நன்மையின் விரிந்துசென்று விண்ணோடு மண்ணிடையே நண்ணும்பெற்றி, பாடற்கு மகளிர்க்கு......தசொற்சீர்ப்பகவன்ற னடியிணையே பணிந்து நாமே" எனவரும். அவ்வழி யொருபொருண்மேன் மூன்றடுக்கிவருவன சிறப்புடைத்து, என வொருசா ருதாரணங்காட்டுமாறு:—அவை, "பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாய, னீங்கு நம் மானுள் வருமே லவன்வாயில், லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீஇ" "கன்று குணிலாக் கனியுதிர்த்த மாமாய, னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற், கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீஇ" "கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்,எல்லை நம் மானுள் வருமே லவன்வாயின், முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீஇ" (சிலப்-ஆய்ச்சி.) இவை மூன்றடியான் மூன்றடுக்கிவந்த ஆசிரியத் தாழிசை. எ-று. இனி வஞ்சித்தாழிசை குறளடி நான்காய் ஒரு பொருண் மேல் மூன்றடுக்கிவரும். அவை, "மடப்பிடியை மதவேழந், தடக்கையால் வெயின்மறைக்கு, மிடைச்சுர மிறந்தோர்க்கே,நடக்குமென் மனனேகாண்;" "பேடையை...மனனேகாண்" "இரும்பிடியை...மனனேகாண்" அஃதேல் இவை மூன்றடுக்கிவருதலிற் கொச்சகவொருபோகெனவேண்டுமெனின் அவ் வடி......அளவடியான் வாராமையின் றாகாதென்க. இனி வெண்டாழிசை யாவது; மூன்றடியான்வந்து வெண்பாப்போலிறும். அது "நண்பி தென்று தீயசொல்லார்,முன்பு நின்று முனிவு செய்யா,ரன்பு வேண்டு பவர்"எனவரும். சிந்தியல் வெண்பா வொருபொருண்மேன் மூன்றடுக்கிவருவது. வெள்ளொத் தாழிசையென்பது. அது, "அன்னா யறங்கொ ணலங்கிளர் சேட்சென்னி, யொன்னா ருடைபுறம் போல நலங்கவர்ந்து, துன்னான் றுறந்து விடல்; எ௨ யறங்கொ ணலங்கிளர் சேட்சென்னி, கூடா ருடைபுறம் போல நலங்கவர்ந்து, நீடான் றுறந்து விடல்; பாவா யறங்கொ ணலங்கிளர் சேட்சென்னி, மேவா ருடைபுறம் போல நலங்கவர்ந்து,காவான் றுறந்து விடல்" எனவரும். கலித்தாழிசையாவது, அடிவரையின்றி யொத்துவந்ததும், ஈற்றடி சிலசீர்

மிக்குவருவதும். அது "வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங், கேள் வரும் போதி னெழால்வாழி வெண்டிங்காள், கேள்வரும் போதி னெழா தாய்க் குறுவியரோ, நீள்வரி நாகத் தெயிறேவாழி வெண்டிங்காள்" என வரும். இத்தாழிசையொருபொருண்மேன்மூன் றடுக்கிவருவண்வும் கொச் சகவொருபோகெனப்பட்ட கலித்தாழிசையெனப்படும். ஈரடிக்கு வருத லான். இனி ஆசிரியத்துறையாவது, நான்கடியா யிடையிடை சிலசீர் குறைந்துவரும். அது "கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருதிராயி, னரையிருள் யாமத் தடுபுலியோ தும்மஞ்சி யகன்று போக, நரையுருமோ, தங்கைவேலஞ்சுக தும்மை, வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையோ" எனவரும், வஞ்சித்துறையாவது: குறளடி நான் கினுற் றனிவருவது. அது "முல்லைவாய் முறுவலித்தன, கொல்லைவாய்க் குருகீன்றன, மல்லல்வாய்ம......மங்கின, செல்வர்தேர் வரக் காணேன்" எனவரும். இனி வெண்டுறையாவது:மூன்றடிச்சிறுமையாக வேழடிப் பெருமையாகவருவது. இறுதியடிக்கண்...சிலவருமாறு, "குழலிசைய வண் டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற் பாய, வழலெரியின் மூழ்கின வா லந்தோ வளியவென் றயல்வாழ் மந்தி, கலுழ்வனபோ னெஞ்சகைந்து கல்லருவி தூஉம், நிழல்வரை நன்னாட னீப்பானோ வல்லன்" எனவரும். மேலும் வந்தவழிக்கண்டுகொள்க. கலித்துறையாவது: நெடிலடியாகிய வைஞ்சீரடி நான்கினன்வருவது. ஓரடி பதினைந்தும், பதினாறும், பதினேழு மெழுத்துப்பெற்றுவருவன. அவை "யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித், தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான், றேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேற், கானும் புள்ளுங் கை தையு மெல்லாங் கரியன்றே" எனவரும். 1 "நல்லார் பழிப்பி னெழிற்செம் பவளத்தை நாணி நின்ற, பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த, வில்லா னளித்த விநாயக னேயென்று மெய்ம்மகிழ, வல்லார் மனத்தன்றி மாட்டா ளிருக்க மலர்த்திருவே" இது நேரசை முதலாகிய பதினறெழுத்தான் வந்தது. 2"கனியுந் தினைவொடு நாடொறுங் காதல் செயுமடியார்க், கினிய னிவனொரு வின்னுங் கிலனென வரும்வணங்கப், பனி வெண்பிறைநறுங் கொன்றைச் சடைப்பலி தேரியற்கை, முனிவன் சிறுவன் பெருவன் கொல் யானை முகத்தவனே" இது நிரையசையாகிய பதினே ழெழுத்தான்வந்தது. இனி ஆசிரியவிருத்தமாவது:—அறுசீர் முதலாக மிக்கவடிநான்கடியு மொத்து வருவது. அது, "இரைக்கு மஞ்சிறைப் புள்ளைவைக் ளெனப்பொரு தினவண்டு புடைசூழ, நுரைக்க ளென்னுமக் குழும்புகொ டெகுண்டெழ நுடங்கிய வலயத்தாற், றிரைக்க ரங்களிற்

1 மூத்தநாயனர் திருவிரட்டைமணி மாலை உ.
2 " " " ௪.

கஅரு அடியிகந்து வரினுங் கடிவரையின்றே.

கஅச கிளரிய வகையிற் கிளந்தன தெரியி
னளவியல் வகையே யனைவகைப் படுமே *

செழுமலைச் சந்தனத் திரள்களைக் கரைமேல்வைத், தரைக்கு மற்றிது குணகடற் றிரையொடு பொருதலைத் தவியாதே" (சூளா-கல்யாண ருக.) எனவரும். பிறவுமன்ன. வந்தவழிக்கண்டுகொள்க. இனி வஞ்சிவிருத்த மாவது: முச்சீரடி நான்காகிவரும். அது "இருது வேற்றுமையின்மையாற், சுருதி மேற்றுறக் கத்தினோ, டரிது வேற்றுமை யாகவே, கருது வேற்றடக் கையினாய்" (சூளா-சீயவதைச்-கஎ௦.) எனவரும். இனி வெளிவிருத்த மாவது: நான்கடியினானு மூன்றடியினானுமடிதோறுந் தனிச்சொற்பெற்று வரும். அவை, "ஆவா வென்றே யஞ்சினராழ்ந்தா ரொருசாரார், கூகூ வென்றே கூவிளி கொண்டா ரொருசாரார், மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தா ரொருசாரார, ஏகீர் நாகீ ரென்செய்து மென்றா ரொருசாரார்" இது நான்கடியான்வந்தது, மூன்றடியான்வந்தன வந்தவழிக்கண்டுகொள்க. இனி கலிவிருத்தமாவது: "தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா, மேம்பழுத் தளைந்தன சுளையும் வேரியும், மாம்பழக் கனிகளு மதுத்தண் டீட்டமுந், தாம்பழுத் துளசில தவளமாடமே" (சூளா-நகரச்-கூச.) எனவரும். இவை யெல்லாமுறையிற்கோட லென்பதனானும், பிறநூன்முடிந்தது தானுடம் படுதலென்பதனானுங் கொள்க. எ-து, உரையாசிரியருரை.

* எ-து, மேற்சொல்லப்பட்டபொருளுணர்-ற்று. ஈண்டுச் சொன்ன வகையினாற் சொல்லப்பட்டன ஆராயுங்காலத்து அளவியல் அவ்வகை பாகுபடும். எ-று. இதனாற்சொல்லப்பட்ட அடிவரை யுள்ளனவும் இல்லனவும் என விரு வகைப்படு மென்பதூஉம், அடிவரையுள்ளன:- ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி எனவும் தாழிசை, துறை, விருத்தம் எனவும்; அடிவரையில்லன:- நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்புமொழி என அறுவகைப்படுமெனவு முணர்த்தியவாறு. அஃதேல் மேல் "அளவியல் வகையே யனைவகைப் படுமே" (செய். கசுச) என்ற சூத்திர மிகையாகல்வேண்டுமெனின், அது புலவர்க்கு அடிவரையறுத்துக் கூறப்பட்டது. செய்யுளோனைத்தென வரையறுத்துணர்த் துதலாயிற்று. எ-து, உரையாசிரியருரை.

**கஅரு** கைக்கிளை முதலா வெழுபெருந் திணையு
முற்கிளந் தனவே முறைநெறி வகையின்.*

இது நிறுத்தமுறையே திணை யென்னும் உறுப்புக் கூறுகின்றது.

இ-ள். கைக்கிளை......திணையும். எ-து, கைக்கிளை முதலாக முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணையென்ற எழுநிலனும். முறை......வகையின். எ-து, அவற்றிற்கு முறைமை வழியாற் புறமென அடைத்த வெட்சிமுதற் பாடாண் பகுதி யீருகிய எழுபகுதியோடே கூட்ட முற......வே. எ-து முன்னர்க் கிளக்கப்பட்டனவேயாகச் செய்யுட் குறுப்பாய் நிற்கும். எ-று.

எனவே, அகமேழும் புறமேழும் அவ்விரண்டற்கும்பொதுவாகிய கரந்தை யொன்றுமாகப் பதினைந்தனுள் ஒன்று செய்யுட்குறுப்பாயல்லது வேறுறுப்பின் றென்றவாருயிற்று. (கஅரு)

**கஅசு** காமப் புணர்ச்சியு மிடந்தலைப் பாடும்
பாங்கொடு தழாலுந் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினு மடைந்தசார் போடு
மறையென மொழிதன் மறையோ ராறே.†

இது முறையே கைகோட்செய்யுட்குறுப்பாமாறு கூறுகின்றது.

கைகோளாவன களவு கற்பு. அவை தாங் காமத்தின்கண்ணெழுதலான் அவற்றுட்பிறந்த வுள்ளநிகழ்ச்சி யிடைவிடாதுமேற்சிறந்துபெருகி யகலாப் பகுதி யெனக் கொள்க. அவற்றைத் தொகுத்தவை செய்யுட் குறுப்பென்றார்.

---

* எ-து, நிறுத்தமுறையானே திணையாமாறுணர்-ற்று. திணையாவது கைக்கிளையு முல்லையுங் குறிஞ்சியும் பாலையு மருதமு நெய்தலும் பெருந்திணையும் என்னு மிவை முறைமையினுன் மேற்சொல்லப்பட்டன. எ-று. முறைமையினுற் சொல்லுதலாவது பாடாண்பாட்டினைக் கைக்கிளைப்புறமெனவும், வஞ்சியை முல்லைப்புறமெனவும், வெட்சியைக் குறிஞ்சிப்புறமெனவும், வாகையைப் பாலைப்புறமெனவும், உழிஞையை மருதப்புறமெனவும், தும்பையை நெய்தற்புறமெனவும், காஞ்சியைப் பெருந்திணைப்புறமெனவும் ஓதியநெறி கொள்ளப்படும். இவ்வாறுகொள்ளவே பதினுலுதிணையு மேழாகியடங்குமாயிற்று. எ-து, உரையாசிரியருரை.

† எ-து, கைகோள்வகையிற் களவாமா றுணர்-ற்று. இயற்கைப்புணர்ச்சியும், இடந்தலைப்பாடும், பாங்கற்கூட்டமும், தோழியாற்கூட்டமும் என்று சொல்லப்பட்ட நான்குவகையானு மவற்றைச் சார்ந்துவருகிளவியானும்வருவன களவென்றுகூறுதல், வேதமறிவோர்நெறி. எ-று. இதனுட் களவென்றது மறையென்றதனுன், இது தீமைபயக்குங்களவன்மைகொள்க. ஒடு - எண். எ-து, உரையாசிரியருரை.

காமப்......வும். எ-து இயற்கைப்புணர்ச்சியும், அதன்பின்ன ரிடந்தலைப்பாடும், 1அதன்பின்னர் அவன்வயிற் பாங்காகிய பாங்கற்குக்கூறி யவனாற்கூடுதலும், அதன்பின்னர் அவள்வயிற்பாங்காகிய தோழியையிரந்து குறைமுடித்துக் கோடலும். என்......பொடு. எ-து என்ற அந் நாற்பகுதிக்கண்ணும் பொருந்திய சார்பினால். மறை......றே. எ-து களவொழுக்கம் இதுவென்று பிறர்கருதச் செய்யுள்செய்தல் கந்திருவவழக்கம். எ-று.

கந்திருவர்க்கு மறையோர் ஓதிய நெறி அதுவாகலின் மறையோராறென்றார். என வினையெச்சம். எனவே பாங்கனுந் தோழியு முணர்ந்துழியுங் களவென்றல் மறையோர்வழக்கு. எ-று. இக்களவு இல்லதன்றி யுலகியலாதலின் நிறையுடையார் மறைவெளிப்படாதொழுகலிற் றுமேசென்று இடந்தலைப்பாட்டிற் கூடுதலும், அது நிகழாவழியுங் கூட்டநிகழ்ந்து அவள் ஆயத்திடைநின்ற வழியும் அவளருமையறிந்து பாங்கனையுடம்படுத்திக்கூடுதலும், அவன்தோழியைப்போலக்கூட்டுந்தன்மையிலனாதலிற் றோழியாற்கூடுதலுமென முறைமை கூறினார். களவு இந்நான்கு பகுதியானுமடங்கும். உ-ம். "கோடலெதிர் முகைப் பசுவீ முல்லை"(குறுந்தொகை-௬உ) இது இயற்கைப்புணர்ச்சிநிகழ்ந்தது. "உறுதோறுயிர்...தோள்" (திருக்குறள் ௧௧0௬) "சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய்" (நற்றிணை ௩௧) "வேட்ட பொழுதின......டோள்" (திருக்குறள் ௧௧0௫) இவை களவியலிற்கண்டுகொள்க. (௧௮௬)

௧௮எ மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலு
மிருமுத லாகிய வியனெறி திரியாது
மலிவும் புலவியு மூடலு முணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே.*

இது கற்பென்னுங் கைகோள்கூறுகின்றது.

இ-ள். மறை......லும். எ-து. மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும், தமர்கொடுப்பக் கரணவகையாற் பெறுதலும், இரு...து. எ-து என்னும் இவ்விரண்டுமுதலிய ஆசான்முதலியோர் செய்விக்கும் வழக்குநெறி திரியாது. மலி...தது. எ-து மகிழ்ச்சியும், புலத்தலும், ஊடலும், உணர்த்தலும் நான்கும் பிரிவுளப்பட்ட ஐந்தும் புணர்ந்தது. கற்...மே. எ-து கற்பெனப்படும். எ-று.

மலிவுமுதலிய வைந்துங் கைகோளின்பாற்சார்த்தித் தலைவனுந் தலைவியும் ஒழுகும் ஒழுகலாறெனவே படும். முன்னை மறைவெளிப்படுதலுந் தமரிற் பெறுதலுமென்னும் இரண்டும் பிறரோடுபட்டவொழுகலாறெனப்படும். அவை

* எ-து, கைகோள்வகையிற் கற்பாமா றுணர்த்திற்று...........

1அதன்பின் றன்வயிற் பாங்காகிய என்பதும் பாடம்.

ஆசான்முதலியோர்செய்வித்தலின், மலிதலென்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியுமுதலியவற்ருன் மகிழ்தல். புலவியென்பது புணர்ச்சியான்வந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங்கருதிக்கொண்டெய்ப்பதோர் உள்ளநிகழ்ச்சி. ஊடலென்பது உள்ளத்துநிகழ்ந்ததனைக் குறிப்புமொழியானன்றிக் கூற்றுமொழியானுரைப்பது. அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி யதற் கேதுவாகிய காரியமின்மை உணர்வித்தலெனப்படும். இல்லதுநடுக்க மயக்கந்தீரவுணர்த்துதலான் உணர்த்ததலெனவும் அதனை உணர்தலான் உணர்வெனவும்படும். புலவியாயினுணர்த்தாது குளிர்ப்பக்கூறித் தளிர்ப்பமுயங்குதன்முதலியவற்ரு னீங்கும். பிரிவு இந்நான்கற்கும் வேறுபடுதலிற் பின்வைத்தார். அதனை யூடலொடுவைப்பவே யவ்வூடலுட்பிறந்த துனியும் பிரிவின்பாற்படும். அது காட்டக்காணுது கரந்துமாறுதலின். உ-ம். "எம்மனை முந்துறத் தருமோ, தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" (அகம்-௧௯௫) இது மறைவெளிப்பாடு: "பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர, வோரிற் கூடிய வுடன்புணர் கங்குல்" (அகம்-அ௬) என்பது தமரிற்பெறுதல். "விரிதிரைப்பெருங்கடல்" (குறுந்-௧௦௧) இது மலிதல். "நாணுக் கடுங்குரைய ளாகிப், புலவி வெய்யளு முயங்குங் காலே" இது புலவி நோய்,"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை, நீசேர்ந்த வில்விளுய் வாராமை பெறுகற்பின்" (கலி-எஎ) இஃது ஊடல் "விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு, மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு, 1மாங்கவிந் தொழியுமென் புலவி" (கலி-எ௫) இஃது உணர்தல். "திறனல்ல யான் கழற யாரை நகுமிம், மகனல்லான் பெற்ற மகன்" (கலி - அ௬) இது துனி. துனித்தல், வெறுத்தல். பிரிவெனவே ஆறுமடங்கும். அவை முன்னர்க் காட்டினும். (௧அஎ)

௧அஅ மெய்பெற வவையே கைகோள் வகையே.

இது புறத்திணைக்கைகோள்கூறுகின்றது.

இ-ள். மெய்பெறக் கைகோள்வகை யவையே எ-து, பொருள்பெறவரும் கைகோட்பகுதி அகத்திணைக் கைகோளே. எ-று.

எனவே அகத்திற்குப்புறனுயினும் புறத்திணைக்கைகோள் அவ்வாறு வேறு வகைப்படக்கூறப்படா. பொதுவகையானே மறைந்தவொழுக்கமும் வெளிப்பாடும் என இரண்டாய் அடங்கும் அவை. எ-று. அவை வெட்சித்திணையுள்ளும் ஒழிந்ததிணையுள்ளுங் காண்க. (௧அஅ)

---

1'ஆங்குலந்தொழியும்' என்பதும் பாடம்.

௧௮௯. பார்ப்பான் பாங்கன் றோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியொ
டளவியன் மரபி னறுவகை யோருங்
களவினிற் கிளவிக் குரிய ரென்ப.*

இது கூற்றென்னுமுறுப்புணர்த்துகின்றது.

இ-ள். பார்ப்பான்முதலாகக் கிழவன்கிழத்தியோடெண்ணப்பட்ட கூற்றிற்கு எல்லையாக நடந்த முறைமையையுடைய அறுவருங் களவொழுக்கத்து நிகழ்ந்தன கூறினாராகவல்லது ஒழிந்தோராகச் செய்யுள்செய்யப்பெறார். எ-று.

நன்றுந் தீதுமாராய்ந்து உறுதிகூறுதலிற் பார்ப்பானை முற்கூறித் தலைவன் வழிநின்றொழுகும் பாங்கனைப் பிற்கூறினார். தோழிகூற்றிற் செவிலிகூற்றுச் சிறுபான்மைவருதலின் அதனைப் பின்வைத்தார். சிறப்புடையன பிற்கூறினார். அவ்விரண்டும் ஒன்றற்கொன்று சிறப்புடைமையு முணர்க. உ-ம். "சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை, நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென் செய்யுந், தேருங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே" (கலி-௯) இது பார்ப்பான் கூற்று. "காமங் காம மென்ப காம, மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்...... தோனோயே. (குறுந் உ௦௪) இது பாங்கன்கூற்று. ஏனைய முன்னர்க் காட்டினும். (௧௮௯)

௧௯௦ பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற வறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.†

இதுவுமது.

அவ்வெண்ணப்பட்ட வறுவரும் பார்ப்பார்முதலாக முற்கூறிய அறுவரோடேகூடத் தொகுத்து இப்பன்னிருவருங் கூறியகூற்றாகச் செய்யுள்செய்யப் பெறுங் கற்பினுள். எ-று.

கிளவியென்னுஞ்சொல் ஈண்டுப் பொருண்மேற்று. இசைப்பின்னரது நாடகமாதலின்: பாணன்பின் கூத்தனும், பெண்பாலாகலின் விறல்படஆடும் விறலி அவர்பின்னும், அவ்வினத்துப் பரத்தை அவர்பின்னும், அகப்பொருட்குச் சிறவாமையின் அறம்பொருள்கூறும் அறிவர் அவர்பின்னும், ஏதிலாராகிய கண்டோர் அவர்பின்னும் வைத்தார். தொன்னெறிமரபின் என்றதனால்,

---

* எ-து, களவினிற் கிளவிக்குரியராமா றுணர்-ற்று......மரபென்றதனால், பார்ப்பானினும், பாங்கனினும் சிலரே யிதற் குடம்படுவோரென்று கொள்க. பார்ப்பான்-உயர்குலத்தோனாகிய தோழன். பாங்கன்-ஒத்தகுலத்தினு மிழிந்த குலத்தினுமாகிய தோழன். எ-து, உரையாசிரியருரை.

† எ-து, கற்பின்கட் கூறத்தகுவாரை யுணர்-ற்று. பாணன்முதலாகச் சொல்லப்பட்ட வறுவரும், மேற்சொல்லப்பட்ட பார்ப்பார்முதலாகிய வறுவரும் ஆகிய பன்னிருவரும், மேற்சொல்லப்பட்ட கற்பின்கட் கூறற்குரியர். எ-று. "தொன்னெறிமரபிற் கற்" பென்றதனான், அவர் குலந்தோறுந் தொன்றுபட்டு வருகின்ற நெறியையுடையரென்று கொள்க. எ-து, உரையாசிரியருரை.

பாகனும் தூதுகூறலு மமையும். அவை புறப்பொருட்குச் சிறந்தன. "செவ் வழி நல்யா ழிசையினென் பையெனக், கடவுள் வாழ்த்திப் பையுண்மெய்ந் நிறுத், தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே" (அகம்-கச) இது பாணன் கூற்று. "ஆடலிற் பயின்றனை யென்று தென்னுரை, யூடலிற் றெளிதல் வேண்டும்" என்பது கூத்தன்கூற்று. "மரந்தலை மணந்த நனந்தலைக் கானத், தலந்தலை ஞெமயத் திருந்த குடிஞை, பொன்செய் கொல்லனி னினிய தெளிர்ப்பப், பெய்ம்மணி யார்க்கு மிழைகிளர் நெடுந்தேர், வன்பான் முரம்பி னேமி யதிரச், சென்றிசின் வாழியோ பனிக்கடு நாளே, யிடைச்சுரத் தெழிலி யுறைத்தென மார்பிற், குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு, நறுந் தண்ணியளா னோகோ யானே" (நற்றிணை-௯௪) இது கண்டோர்கூற்று. "விதையர் கொன்ற முதையற் பூழி, யிடுமுறை நிரப்பிய வீரிலை வரகின், கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை, யரலை யாங்காட் டிரலையொடு வதியும், புறவிற் றம்மஃ நயந்தோ ளூரே, யெல்லி விட்டினன் வேந்தெனச் சொல்லுபு, பரியல் வாழ்கநின் கண்ணி காண்வர, விரியுளைப் பொலிந்த வீங்குசெலற் கலிமா, வண்பரி தயங்க வேறித் தண்பல, கான்யாற் றிடுமணற் கரைபிறக் கொழிய, வெல்விருந் தயரு மனைவி, மெல்லிறைப் பணைத்தோட் டுயின்மா போயே" (நற்றிணை ௨௧) இது பாகன்கூற்று. ஒழிந்தன கற்பியலுட் காண்க. (௧௯0)

௧௯௧ ஊரு மயலுஞ் சேரி யோரு
நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்னையுங்
கொண்டெடுத்து மொழியப் படுவ தல்லதைக்
கூற்றவ ணின்மை யாப்புறத் தோன்றும்.*

இது பெரும்பான்மையுங் கூறப்படாதோரைக் கூறப்படுகின்றது.

இது களவிற்கும் கற்பிற்கும் பொது. உ-ம். "ஊ ரலரெழச் சேரி கல்லென, வானு தலைக்கு மறனி லன்னை", (குறுந்-உ௬உ) "தெரிகணை நோக்கிச் சிலை நோக்கிச்......சாய்த்தார்தலை" (கலி-௯௧) "எந்தையு,நிலனுற......யென்னும்" (அகம்-௧உ) என்றாற் போல்வன கொள்க. "துறந்ததற் கொண்டு துயரடச் சாய்" (ஐங்குறு-௯௯௯) இது அயலோர்கூற்றுச் சிறுபான்மைவந்தது. அகத்திணைக்கண் இங்ஙனம் வருமெனவே புறத்திணைக்கண் அவர்கூறவும் பெறுமென்பது. இது நோக்கிப் பெரும்பான்மை கூறாதாரையுங்கூறினர். முன்னையமூன்றும் பெண்பாலும், நோய்மருங்கறிநர் இருபாலும், ஒழிந்தார் ஆண்பாலுமாமென்றுணர்க.(௧௯௧)

---

* எ-து, மேற்சொல்லப்பட்ட விருவகைக் கைகோளிற்குமுரியதோர் மரபுணர்-த்துறு. ஊரிலுள்ளாரும், சேரியிலுள்ளாரும், அயன்மனையிலுள்ளாரும், நோய்ப்பக் கங் குறிப்பினாலறிவாரும், தந்தையும், தமையனும் இருவகைக்கைகோளினும் பட்டதனையுட்கொண்டு பிறிதொன்றையெடுத்துமொழியினல்லது பட்டாங் குக்கூறலின்மை வலியுற்றுத்தோன்றும். எ-று. எனவே வலியில்வழிச் சிறு பான்மை நிகழவும்பெறும். "எந்தையு, நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப, வெவனில் குறுமக ளியங்குதி யென்னும்"(அகம்-௧உ)இது, தந்தை யுட்கொண்டு கூறியது. பிறவுமன்ன. எ-து உரையாசிரியருரை.

கசுஉ கிழவன் றன்னொடுங் கிழத்தி தன்னொடு
நற்றாய் கூறன் முற்றத் தோன்றாது.*

இஃது எய்தாததெய்துவித்தது.

இ-ள். கிழவனோடும் கிழத்தியோடும் இடையிட்டு நற்றாய்கூறுதல் நிரம்பத்தோன்றாது. எனவே அல்லுழிக்கூறப்பெறும் நற்றாயும். எ-று.

உ-ம். "செறிந்த சேரிச் செம்மன் மூதூ, ரறிந்த மாக்கட் டாகுக தில்ல" (அகம்-கரு) இது நற்றாய் அல்லுழிக்கூறியது. தாயென ஒருமையாற் கூறவே தலைவியுடையநற்றாயாயிற்று. தந்தை, தன்னையர்க்கும் இஃது ஒக்கும். முற்றவென்றதனால், தலைவன்றமர்யாவருங் கூறாரெனவுணர்க. தோன்றாதென்றதனானே புறத்திணைக்கண் வரைவின்றி வழக்கிற்குப்பொருந்துமாறு கொள்க, (கசுஉ)

கசுஈ ஒண்டொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.†

இதுவுமது.

இ-ள். ஒள்ளியதொடியினையுடையசெவிலியோடும், தலைவனோடும், தலைவியோடும் இடைச்சுரத்துக் கண்டோர்மொழிந்தன முதனூலிற்கண்டது. எ-று.

ஒண்டொடிமாதரென்றார் செல்வச்சிறப்புடைமைதோன்ற. கண்டதென மிகைபடக்கூறியவதனால், தலைவி நடைமெலிந்து அசைந்தமைகண்டாரல்லது ¶சேர்ந்தனை செல்லென்னார்; என்றும் அவ்விருவர்கூட்டத்தன்றி, தனித்துழிக் கூறாரென்றுங் கொள்க. உதாரணம் முற்காட்டினாம். (கசுஈ)

---

* எ-து, நற்றாய்க்குரியதோர்மரபுணர்-ற்று. தலைமகன்றன்னொடுந் தலைமகளோடும் நற்றாய்கூற லில்லை. எ-று. எனவே, ஏனையோர்க்கே கூறுமென்றவாறும். எ-து, உரையாசிரியருரை.

† கண்டோர்க்குரியதோர்மரபுணர்-ர்று. ஒண்டொடிமாதராவார் நற்றாயுந் தோழியுஞ் செவிலியும். இவரோடும் தலைமகனோடுந் தலைமகளோடுங் கண்டோர்கூறுதல் காணப்பட்டது. எ-று. எனவே, ஏனையோர்கேட்பக் கூறிற்றில்லை யென்றவாறும். எ-து, உரையாசிரியருரை.

---

¶ "நல்லோண் மெல்லடி நடையு மாற்றா, பல்கதிர்ச் செல்வன் கதிரு மூழ்த்தன, னணித்தா வுயரத் தோன்றுவ தெம்மூர், மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே" என்பது. இது "கண்டோர் மொழிதல் கண்ட தென்ப" (அகத்-சுo) என்பதனுரையிற் காட்டியது.

௧௯௪ இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்.*

இதுவுங் கூற்றுவிகற்பங்கூறுகின்றது.

இ-ள். இடைச்சுரத்தி லுடன்போய்க் கிழத்தியொடுங் கிழவன் நீதிநூல் வழியாற் கிளத்தற்கும் உரியன். எ-று.

அது தலைவிதமர் இடைச்சுரத்திற்கண்ணுறின் அவர்கேட்க அவட்குக் கூறுவானாய் வழக்கியல்கூறலும் உரியனென்க. நீதிநூல் பிறழக்கூறின் இராக்கதமாம். உ-ம். "நுமர்வரி னோர்ப்பி னல்லது தமர்வரின், மூந்நீர் மண்டில முழுது மாற்றா, தெரிகணை விடுத்தலோ விலனே, யரிமதர் மழைக்கண் கலுழ் வகை யெவனே" உம்மையான் அவ்வாறன்றி மருட்டிக்கூறவும் பெறும். உ-ம். "அழிவிலர் முயலு மார்வ மாக்கள், வழிபடு தெய்வங் கட்கண் டாஅங், கலமரல் வருத்தந் தீர...மாறே" (நற்றிணை-௯) இது தெய்வம்போல விடுந்தன்மையினை யல்லையெனமருட்டினான். (௧௯௪)

௧௯௫ ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தி னெடுத்தே.†

இதுவுங் கண்டோர் கூற்று.

இ-ள். கண்டோர்கூறுங் கூற்றும் தலைவன் தலைவியொடுமொழிந்தாற் போல வழக்கியலாணையாற் கிளத்தற்குரியர். எ-று.

---

* எ-து, தலைமகனுக்கு முரியதோர்மரபுணர்-ற்று. தலைமகளை யுடன் கொண்டுபோகு மிடைச்சுரத்தின்கண், தலைமகன், தலைமகள் வழக்குநெறி யாணையானேகூறுதற்குமுரியன். எ-று. உம்மை யெதிர்மறை. ஆணை யென்பது 1ஆக்கினை, வடமொழித்திரிபு. மெல்லியல் காமநிகழுமிடத்து ஆக்கினை கூறப்பெருனுமாயினும் ஈண்டு வேண்டுமென வெடுத்தோதப்பட்டது. உ-ம். "நீவிளை யாடுக சிறிதே யானே, மதகளி றுருஞ்சிப் பராரை வேங்கை, மணவிடு மருங்கி னிருபுறம் பொருந்திய, மாவரி னஞ்சேன் போக்குவெ, னுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே" (நற்-௩௬௨) என்பதனுட் கண்டுகொள்க. மெல்லியமகளிர்முன்னர் உண்மைகூறுத லாகாமையி னிதுவழுவமைத்தவாறு. எ-து உரையாசிரியருரை.

† எ-து, தலைமகனுந் தலைமகளுமல்லாதார்க்குரியதோர்மரபுணர்-ற்று. தலைமகனையுந் தலைமகளையும் ஒழிந்த பதின்மரும், அத்தலைமகனொடுந் தலைமகளோடுஞ்சொல்லிப்போந்தமரபினாற் சொல்லப்பெறுவர் இடனுங் காலமுங் குறித்து. எ-று. "மொழிந்தாங்" கென்பதனை வழங்கியலாணையெனினு மமையும். அஃதாவது: தலைமகனைப் பார்ப்பானும் பாங்கனுங் கழறலும், தோழி யியற்பழித்தலும், தலைமகளைச் செவிலியலைத்தலும், பாணர் கூத்தர் பாசறைக் கீழேசென்று கூறலும், தோழி தலைமகனை வற்புறுத்தலு முதலாயின. எ-து, உரையாசிரியருரை.

---

1சிலபிரதிகளில் "ஆச்சினை" என் றெழுதப்பட்டுள்ளது.

தலைவனுந் தலைவியும் ஒழிந்தோராவார் கண்டோர். அவர் வழக்கியலாணை யாற் கிளத்தற்கு உரியர் என்பார் முன்னத்தினெடுத்துக்கூறுப என்றார். அதிகாரத்தான் அறநூற்கருத்தான் உரைப்பரென்க. "பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை, மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செயு, நினையுங்கா னும்மக ணுமக்குமாங் கனையளே" (கலி. க) எனவரும். இங்ஙனம் வழக்கியலாணையாற் கிளவாதன "கண்டோர் மொழிதல் கண்டது" (அகத். ௪0) என்பதனாற் கூறிற்று. (கக௫)

கக௬ மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியு
நினையுங் காலைக் கேட்குந ரவரே.*

இது கேட்போரென்னுமுறுப்புக்கூறுகின்றது.

இ-ள். முன்னர்க் கூற்றிற்குரியர் என்ற பன்னிருவருள், தலைவிகிளவியையும் தலைவன் கிளவியையும் கேட்டற்குரியர் அவ்விருவரையும் ஒழிந்த பதின்மரும். எ-று.

மனையோள்கிளவியுங் கிழவன்கிளவியும் என்பதனை மேற்போயின கூற்றிற்கும் கூட்டுக. கூட்டவே, அவ்விருவர் கிளவி மேற்கூறுவனவும் கேட்பனவும் எனவும், தத்தம்கிளவி கூறவும் கேட்கவும் பெறுரெனவும் கூறியவாறாயிற்று. இங்ஙனம்விலக்கியவற்றுள் வேறுபடவருவன மேற்கூறுகின்றார். தத்தங்கிளவியைத் தம்மிற்றாம் கேட்பரென்றலை விதந்தோதவேண்டாமையின், தலைவனுந் தலைவியுங் கேட்பரென்றாரயினர். நினையுங்காலை என்றதனால் தலைவனுந் தலைவியும் தனித்தனிகூற அவற்றைக்கேட்ட பதின்மரும் தாங் கேட்ட கூற்றிற்குச் செய்யத்தகுவன தம்மு ளாய்ந்துகோடற்கு உரியர் என்று கொள்க. எனவே தலைவன்கூறப் பரத்தைகேட்டலுந், தலைவிகூறப் பரத்தைகேட்டலு முதலியவற்றுள்,புலனெறிவழக்கிற்கு ஏலாதன விலக்கப்பட்டன. உ-ம்."விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற,நின்மார் படைதலி னினிதா கின்றே"(அகம். ௫௮) இது தலைவிகூற்று. தலைவன் கேட்டது. "வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே" (நற்றிணை. க) இது தலைவன்கூற்று. தலைவி கேட்டது. "நின்கேள், புதுவது பன்னாளும்பாராட்ட யானு, மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர"(கலி. உ௪)

* எ-து, மது. தலைமகனுந் தலைமகளுங் கூறக்கேட்போர் மேற்சொல்லப்பட்ட பதின்மரும். எ-று. இதுவு முதலாகக் கேட்போரைக் கூறுகின்றது.

எனவும் "மாலையு முள்ளா ராயிற் காலே, யாங்கா குவன்கொல் பாண வென்ற, மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்" (அகம். கச) எனவும், "உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ" (அகம். கஎ) எனவும், தண்டா ரகலமு முண்ணுமோ பலியே" (குறுந். ௩௬உ) எனவும், எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ" (கலி. கசஉ) எனவும், இவை தோழியும் பாணனும் செவிலியும் அறிவரும் கேட்பத் தலைவிகூற்று வந்தன. "இடிக்குங் கேளிர் நுங்குறை யாக" (குறுந்தொகை. ௫அ) எனவும், "எலுவ சிறாஅ ரேம் முறு நண்ப" (குறுந். கஉ௯) எனவும், "ஊர்க பாக வொருவினை கழிய" (அகம். சச) எனவும், "பேரமர் மழைக்கண் ணின்றோழி செய்த, வாரஞர் வருத்தங் களையா யோவென" எனவும், "சான்றவிர் வாழியோ சான்றவிர்" (கலி. க௩௯) எனவும், இவை பார்ப்பானும் பாங்கனும் பாகனும் தோழியும் கண்டோரும் கேட்பத் தலைவன் கூற்றுநிகழ்ந்தன. "ஒன்றித் தோன்றும் தோழி மேன" (அகத். ௩௯) என்றலின், தோழிகூற்றும் தலைவிகூற்றேயாம். (க௯௬)

கக௯எ பார்ப்பா ரறிவ ரென்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே.*

இதுவுமது.

இ-ள். பார்ப்பாரும் அறிவருமென்கின்ற இருவர்கூற்றும் அகமும் புறமுமாக யார்க்குஞ் செய்யுளென்றவற்றோடும் பொருந்திவருதலின் அகத்திணையோர்க்கும் புறத்திணையோர்க்குங் கேட்டலை வரையார். எ-று.

இனி வரையாரென்றதனை யெச்சப்படுத்துச் சிலர்க்கு வரையப்படு மென்றுகொள்க. அவை பார்ப்பார்கூற்றுந் தலைவனுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்பினல்லது பிறர்கேட்டற்கேலாமையும், இவர்கூற்றுந் தலைவனுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டற்குரிமையும் புறத்திணைக்கண்ணும் பொதுவியற்கரந்தையோர்க்கும் பார்ப்பார்கிளவி யேலாது அறிவர்கிளவி யேற்குமென்றலும் பிறவுமாம். எனவே தலைவி அறிவர் வாயிலாயவழி மருமையும் புறத்திணைத்தலைவர்க்குமவ்வாறே அவர்வழிநிற்றல்வேண்டுமென்பதூஉங் கூறிற்று. அறிவராவார் முக்காலமு முணர்ந்தோரும் புலநன்குணர்ந்தபுலமையோரும். உ-ம். கூறியவற் றுள்ளும் பிறவற்றுள்ளுங் காண்க. (கக௯எ)

* எது, பார்ப்பாரும், அறிவருங் கூறுங்கூற்றுக் கேட்போரையுணர்...ற்று. பார்ப்பார், அறிவரென்றுசொல்லப்பட்ட இருவர்கூற்றும் எல்லாருங்கேட்கப் பெறுவர் எ-று. எ-து உரையாசிரியருரை.

௧௬அ பரத்தை வாயி லெனவிரு வீற்றுங்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பய மிலவே.*

இதுவுமது.

இ-ள். பரத்தையும் வாயில்களும் என்னும் இரண்டுவேறுபாட்டின் கண்ணும் கிழத்தி கேட்பாளாகக்கருதிக் கூறுதகூற்றுப் பயமில. எ-று.

கிழத்தியைச்சுட்டாவெனத் தலைவிபாங்காயினர்கேட்பக்கூறுதலு மமையும். உ-ம். "செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதிவ, ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி" இது தலைவிக்குப் பாங்காயினர்கேட்பக் கூறியது. வாயில்களுந் தலைவியூடல்தீரவேகூறவேண்டுதலின் அவள் கேட்பவேகூறுவராயிற்று. இன்னு மதனானே தோழிகேட்ப வாயில்கள் கூறினு மமையும். உ-ம். "ஒருயிர் மாத ராகலி னிவளுந், தோரா துடன் றனண் மன்னே" இது வாயில்கள்கூறத் தலைவிகேட்டலுந் தோழி கேட்டலுமாம். (௧௬அ)

௧௬௯ வாயி லுசாவே தம்மு ளுரிய.†

இதுவுமது.

இ-ள். முற்கூறிய அதிகாரத்தாற் றலைவியைச்சுட்டி யொருவ ரொருவர்க் குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும். எ-று.

அவையுந் தலைவிகேட்பவென "தண்ணந் துறைவன் கொடுமை, நம்மு னாணிக் கரப்பா டும்மே" (குறுந்-௯.) இது பாடினி பாணர்க்குரைத் தது. "மலரைப் பொருவடி மானுந் தமியண்மன் னன்னொருவன், பலரைப் பொருதென் றிழிந்துமின் ருள்பள்ளி காமனெய்த, வலரைப் பொருதென் றழல்விழித் தோனம் பலம்வணங்காக், கலரைப் பொருச் சிறியாளென்னை கொல்லோ கருதியதே" (திருச்சிற்-௩௬௭) இதுபோல்வன பிறவும் வாயில்கள் தம்முட்கூறின. உம்மை யெதிர்மறையாகலின் கேட்குநரவரெனப்பட்டவரன்றித் தம்முட்டாங்கேட்டல் சிறுபான்மை யாம். (௧௬௯)

---

* என்பதுவும், ஒருசார்கூற்றிற்குரியாரியல்புணர்.........ற்று. பரத்தை யென்றும், வாயிலென்றுஞ்சொல்லப்படும் வேறுபாட்டினுந் தலைமகளைச்சுட்டாக் கூற்றுப் பயனில்லை எ-று. எ-து உரையாசிரியருரை.

† எ-து, வாயில்கட்குரியதோர்மரபுணர்.........ற்று. வாயில்களும் உசா விடத்துக் கிழத்தியைவிடாது தத்தம்மு ளுசாவுதலுமுரித்து எ-று. உ-ம், வந்தவழிக்கண்டுகொள்க. எ-து உரையாசிரியருரை.

உ00 ஞாயிறு திங்க ளறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
யவையல பிறவு நுவலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்.*

இது கேட்போருங் கூற்றும் வேறுபடவருமாறுகூறுகின்றது. அவை பொருளியலுள் 1வழுவமைதிகூறுவனவுங் கேட்குநவுமாய் ஈண்டு வருதலின் ஆராய்கின்றார்.

இ-ள். ஞாயிறுமுதல் நெஞ்சீறாக்கூறியனவும் அவைபோல்வன பிறவும் மேற் "செய்யா மரபிற் றொழிற் படுத் தடக்கியும்" (பொருளியல்-உ) எனப் பொருளியலுட் பொதுவகையாற் கூறியவாற்றான் அவைதாங் கூறுவன போலவுங் கேட்பன போலவுங் கூறுமாறமையு மென்று கூறுவர் புலவர். 'எ-று.

கூற்றும் உடன்கூறினார் மேற்கூற்றிற்குரியன இவையென வரையறுமையின். பொழுதாவன: மாலையும், யாமமும், எற்பாடும், காரும், கூதிரும், பனியும், இளவேனிலும்போல்வன. பிறவுமென்றதனால்

* எ-து, கழிபடர்ப்பொருண்மைக்குவருவதோர் மரபுவழுவருதலைநுதலிற்று. ஞாயிறுமுதலாக, நெஞ்சீறாகச்சொல்லப்பட்ட பதினொன்றும் அத்தன்மையபிறவுமாகிய மக்களல்லாதபொருண்மை யெய்தியநெறியினாற் சொல்லினபோலவுங் கேட்குநபோலவுஞ் சொல்லியாங் கமையப்பெறும் எ-று. ஆங்கு அசை. உ-ம் "பழுதறு ஞாயிறே பாடறியா தார்கண்" (கலி-கசரு) எனவும், "மாதர் முகம்போ லொளிவிட வல்லையேல், காதலை வாழி மதி" (திருக்-ககசஅ) எனவும், "உறுகி தூக்கத் தூங்கிய வறிவே, சிறிதுநீ விரைய லென்னு மாயிடை" (நற்-உஅச) "நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர், ஊர்ந்த வழிசிதைய வூர்ந்தியா லோதமே, பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே, யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே" (சிலப்-கானல்) இதனுள், கடலுங் கானலும் புள்ளு மரமுங் கூறப்பட்டது. "மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப், பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்" (கலி-ககஅ) "வருந்தினை வாழிய நெஞ்சே" (அகம்-எக) "மன்றப் பனைமென் ......மாங் தளிரே" எ-ம், இந்நிகரனகொள்க. இத்துணையுங்கூறப்பட்டன கேட்போரியல்பு. எ-து உரையாசிரியருரை.

1. "நோயுமின்பமும்" என்னுஞ்சூத்திரம் (பொருளியல்-உ).

புல்லும் புதலும் முதலியனவுங்கொள்க. உ-ம். "கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி, னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித், தருகுவை, யாயிற் றவிருமென் னெஞ்சத், துயிர்திரியா மாட்டிய தீ". (கலி-கசஉ.) "வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங், கேள்வரும்போழ்தி னெழால் வாழி வெண்டிங்காள்" 1"உறுதி தூக்கத் தூங்கிய வறிவே" (நற்றிணை கஅச) "சேர்ந்த நங் காதலர் நேமி நெடுந்திண்டேர், ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே, பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே, யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே" (சிலப்-கானல்வரி) "பொங்கிரு முந்நீ ரகமெலா நோக்குபு, திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயா, லெங்கே ளிதனகத் துள்வழிக் காட்டீமோ" (கலி.-கசச) "காய்ந்த நோயுழப்பாளைக் கலக்கிய வந்தாயோ......மாலை" (கலி-கஉ0) "நீ காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே" (கலி.-கஉடு) எனவரும். புள்ளெனவே வண்டு முதலியனவும் அடங்கும். "அம்மெ னிணர வடம்புகா ளன்னங்காள்" (சிலப்-கானல்.) ஒழிந்தன வந்துழிக்காண்க. (உ00)

உ0க ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்
கருமநிகழ்ச்சி யிடமென மொழிப.*

இது களமெனப்பட்ட வுறுப்புக் கூறுகின்றது.

இ-ள். பலவும் ஒருவழித் தொக்கவற்றுச்செல்லாம் ஓரிலக்கணத் தான்முடியுங் கருமநிகழ்ச்சியை யிடமென்று கூறுப. எ-று.

---

* எ-து, நிறுத்தமுறையானே இடமாமாறுணர்......ற்று. ஒருநெறிப்பட வருதல் ஓரியன்முடிதலாவது, அகத்தின்கண் களவென்றானுங் கற்பென்றானும் வரின், விரிவகையொன்றானும்பற்றிவருதல். புறத்தின்கண் நிரைகோடலானும், மீட்டலானும், மேற்சேறலானும், எயில்வளைத்தலானும் யாதானு மோரியல்பு பற்றிவருதல். கருமநிகழலாவது அப்பொருளைப்பற்ற யாதானுமொரு வினைநிகழு மிடம். இன்னும், "கருமநிகழ்ச்சி" யென்றதனான் தன்மை, முன்னிலை, படர்க்கையெனவுங் கொள்ளப்படும். உ-ம். "செல்லாமை யுண்டேல் லெமக்குரை மற்றுநின், வல்வரவு வாழ்வார்க் குரை" (திருக்-ககடுக) என்றவழிப் பிரி பொருண்மைநிகழுமிடனாயிற்று. முன்னின்றானைக் கையற்றுநுதலுதலின் முன்னிலையென்னு மிடமாயிற்று; யாதுமோர்பொருள் நிகழ்வுழி அதற்காகு மிடத்தொடுநிகழ்தல்வேண்டுமென்று இப்பொருண்மை கூறப்பட்டது. ஒரு நெறிப்படாதும் ஓரியன்முடியாதும்வரு மிடம் வழுவாம். அஃதாவது புணர்தல் வேண்டித் தோழியை யிரந்து குறையுறுவான், அவ்விடத்திற்குத்தக்கவுரை கூறாது தன்னாற்றலும், ஆற்றாமையும், பிறவுங் கூறல். உ-ம். "மெல்லிய னல்லா

---

1 களவியல். கசுட-ம் சூத்திரவுரையி லிப்பாட்டை யெடுத்தோதினார்.

களமெனினும் இடமெனினு மொக்கும். அது ஒருசெய்யுட்கேட்டால் இது இன்னஇடத்துநிகழ்ந்ததென்றறிதற்கு ஏதுவாயதோருறுப்பு. அது காட்சியும் ஐயமுந் துணிவும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையும் இன்னோரன்னவும் ஒரு நெறிப்பட்டு இயற்கைப்புணர்ச்சியென்னும் ஓரிலக்கணத்தான்முடியுமென்பது. கருமநிகழ்ச்சியென்பது காமப்புணர்ச்சியென்னுஞ் செயப்படுபொருணிகழ்ச்சி. இது வினைசெயிடம். "எலுவசிறு அர்" (குறுங்-கஉக) "கேளிர்வாழியோ" (ஷை-உ௮0) என்பன பாங்கற் கூட்டமிடனாக ஒருவழிப்பட்டன. பிறவு மன்ன. இது புறத்திணைக்கு மொக்கும், (உ0க

உ0உ இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்தியன் மருங்கிற் றெரிந்தன ருணரப்
பொருணிகழ் வுரைப்பது கால மாகும்.*

இது காலமென்னுமுறுப்புக்கூறுகின்றது.

இ-ள். இறப்......து. எ-து இறப்பும் நிகழ்வும் எதிர்வும் என்னும் மூன்று காலத்தே. இயன்......மருங்கில் எ-து எல்லாத்திணையும் நிகழ்கின்றநிகழ்ச்சிக்கண்ணே. பொருணிகழ்வுணரத்தெரிந்தன ருரைப்பது காலமாகும். என்பது பொருணிகழ்ச்சியுணரத் தெரிந்தனராயுரைப்பது காலமென்னும் உறுப்பாம். எ-று.

---

யமையா யதுவிறந், தொன்னூர்கட் கூற்றுட்கு முட்குடைமை-யெல்லாஞ், சலவருட் சாலச் சலமே நலவரு, ணன்மை வரம்பாய் விடல்" இதனானுமறிக. அன்றியும், "நெடும்புன லுள் வெல்லு முதலை யடும்புனலு, ணீங்கி னதனைப் பிற" (திருக்-சகரு) எனவும், "உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா, லெண்ணப் படவேண்டா தார்" (திருக்-கஉஉ) இது தன்மையாரையு முன்னின்றுரையுமொத்துப் படர்க்கையாரைத் தொழிற்படுத்துதலின் உண்ணற்கவென்னும் படர்க்கைசேரப் படர்க்கைப்பொருளொடுசேர முடிந்துநின்றது. பிறவுமன்ன. எ-து உரையாசிரியருரை.

* எ-து நிறுத்தமுறையானே காலமாமாறுணர்......ற்று. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலமெனக் கூறப்பட்டியலும்பக்கத்தி னாராய்ந்து நோக்குமாறு பொருணிகழ்ச்சியைக்கூறுமது காலம் எ-று. உ-ம். "முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே, மலைய னொள்வேற் கண்ணி, முலையும் வாரா முதுக்குறைந் தனளே" இது, இறந்தகாலத்தின்கட் புணர்ச்சியுண்மைதோன்றவந்தது. இனி, "அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும், பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த, நன்னெடுங் கூந்த னரையொடு முடிப்பினு, நீத்த லோம்புமதி பூக்கே ழூர" (நற்-க0) என்றவழி நிகழ்கால விளமைப்பருவந்தோன்றவந்தது. இதனுள், "நீத்தலோம்புமதி" யென்பது எதிர்காலங்குறித்துநின்றது. இவ்வகையிற் காலமு மிடனு மெல்லாச்செய்யுளின்கண்ணும் வருமென்றுணர்க. எ-து உரையாசிரியருரை.

உ-ம். "வில்லோன் காலன கழலே......முன்னியோரே" (குறுந்-௭.) இதனுள் வில்லோன் தொடியோளென்பன பொருள். முன்னியோர். என்-து, தம்பொருள் நிகழ்ச்சியாகலின் இஃது இறந்தகாலமெனப்படும். இதற்குச் சிறந்தாரவர்களாதலின் அவர்களே பொருளாயினர். "மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே,யரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப், பெருந்தோணுணுகிய நுசுப்பிற்,கல்கெழு கானவர் நல்குறுமகளே"(குறுந்-௭௧) இது நிகழ்காலம் "பகலும் பெறுவையிவ டடமென் றோளே" (கலி-௪௧) இஃதெதிர்காலம். புறத்திற்கு மிவ்வாறே யின்றியமையாதென்பது;பெரும்பொழுதுஞ் சிறுபொழுதும் முதல், கரு, உரிப்பொருளோடு கூடித் திணையாகலின் இக்காலம் அவற்றின்வேறும். (௨௦௪)

௨௦௫ இதுநனி பயக்கு மிதன்மா றென்னுந்
தொகைநிலைக் கிளவி பயனெனப் படுமே.*

இது பயனென்னும் உறுப்புக் கூறுகின்றது.

இ-ள். இது மிகவும்பயக்கும் இதனானெனத் தொகுத்துக் கூறப்படும் பொருளும் பயனென்னுமுறுப்பாம். எ-று.

உ-ம். "மாறுக் காதலர் மலைமறந் தனரே, யாறுக் கட்பனி வரலானாவே, வேறு மென்றோள் வளைநெகி ழும்மே, கூறாய் தோழியாம் வாழுமாறே" இது தோழியைத் தூதுவிடுதல்பயனாகவந்தது. இது புறத்திற்குமொக்கும். இங்ஙனம் பயனுறுப்பாகவே செய்யுள்வருமாறுணர்க. (௨௦௫)

---

* எ-து, நிறுத்தமுறையானே பயனுமாறுணர்......ற்று. யாதானுமொரு பொருளைக்கூறியவழி யதன்பின்பு மிதுபயக்குமென விரித்துக்கூறாது முற்கூறியசொல்லினானே தொகுத்துக்கூறுதல் பயனெனப்படும் எ-று. உ-ம். "சூரல் பம்பிய சிறுகான் யாறே, சூரர மகளி ராரணங் கினரே, வாரல் வரினே யானஞ் சுவலே, சார னாட நீவர லாறே" இதனாற் பயன் வரைந்துகோடல் வேண்டுமென்பது. "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று" (திருக்-௩௨௩) இதனாற் பயன் வேண்டுவோர் இவ்வாறு செய்யவேண்டுமென்றல். இவ்வகையினானே......புளாயினும் பயன்படக்கூறல் வேண்டுமென்பது பயனென வொருபொருள்கூறினர். எ-து உரையாசிரியருரை.

உ0ச உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்.*

இது மெய்ப்பாடென்னும் உறுப்புக் கூறுகின்றது.

அஃதாவது உலகத்தார் உள்ளநிகழ்ச்சி ஆண்டுநிகழ்ந்தவாறே புறத்தார்க்குப்புலப்படுவதோ ராற்றான் வெளிப்படுதல். உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்துவந்தபொருளானே கண்ணீரரும்பல், மெய்ம்மயிர்சிலிர்த்தன்முதலிய சத்துவம்படுமாறு வெளிப்படச்செய்வது மெய்ப்பாடென்னுமுறுப்பாம். எ-று.

அது தேவருலகமுதலியவற்றைக்கூறினுங் கண்டாங்கறியச் செய்யுள் செய்தல் செய்யுளுறுப்பென்றார். உ-ம். "மையற விளங்கிய மணிமருளவ்வாய்தன், மெய்பெறா மழலையின் விளங்குபூ ணனைத்தரப், பொலம்பிறையுட் டாழ்ந்த புனைவினை யுருள்கல, நலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர, வருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகி, லரிபொலி கிண்கிணியார்ப்போவா தடிதட்பப், பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக், கால்வறேர் கையி னியக்கி நடைபயிற்றா, வாலமர் செல்வ னணிசால் பெருவிறல்,போல வருமென் னுயிர்" (கலி-அக) இவைபோல்வனவற்றுள் அவ்வாறு காண்க. தலைவருபொருளான் எனவே நோக்குறுப்பானுணர்ந்த பொருட்பிழம்பினைக்காட்டுவது மெய்ப்பாடாமென்றுகொள்க. (உ0ச)

உ0ரு எண்வகை யியனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின ததுவே.†

........................................................................

* எ-து, நிறுத்தமுறையானே மெய்ப்பாடுவருமாறுணர்......ற்று. யாதானுமொன்றைக்கூறிய வழி யதனகப்பொருண்மையைவிசாரித் துணரக்கூறுதலின்றி, யவ்விடத்துவரும் பொருண்மையின் மெய்ப்பாடுதோன்றமுடிப்பது, மெய்ப்பாடெ......பபாமென்றவாறு. உ-ம். "ஐயோ வெனின்யான் புலியஞ்சுவலே, யுய்த்தனன் கொளினே மார்பெடுக் கல்லே, னென்போற் பெருவிதுப்புறுக வென்னை, யின்னு செய்த வறனில் கூற்றே, நிரைவளை முன்கை பற்றி, வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே" (புறம்-உருரு) இதனுள், அழுகையாகிய மெய்ப்பாடு புலப்படவந்தவாறு கண்டுகொள்க. செய்யுட்செய்வார் மெய்ப்பாடு தோன்றச்செய்கவென்பது கருத்து. எ து உரையாசிரியருரை.

† எ-து, மெய்ப்பாடாமாறுணர்......ற்று. அது, நகைமுதலாகிய வெட்டு மெய்ப்பாட்டுநெறியையும் பிழையாதாகி மேற்சொல்லப்பட்ட விலக்கணத்தையுடைத்து. எ-று. அஃதாமாறு மெய்ப்பாட்டியலிற்காட்டுதும். எ-து உரையாசிரியருரை.

உ0சு சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை
புல்லிய கிளவி யெச்ச மாகும்.*

இது முறையே யெச்சமென்னுமுறுப்புக்கூறுகின்றது.

இ-ள். கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தொடுபொருந்தியகிளவி யெச்சமென்னுமுறுப்பாம். எ-று.

முடிவுகொளியற்கையெனவே செய்யுட்கண்ணதன்றிப் பின்கொணர்ந்துமுடித்தல் பெற்றாம். உ-ம். "செங்களம் படக்கொன்ற... குலைக்காந் தட்டே" (குறுந்-க) இக்காந்தளால் யாங் குறையுடையமல்லமெனத் தலைவற்குக்கூறிற் கூற்றெச்சமாம். அக்கூற்றுஞ் செய்யுட்குச் சிதைவின்மையின் அதுகாண்பாயாகிற் காணெனத் தலைவியைநோக்கி யிடத்துய்த்துக் கூறிற் குறிப்பெச்சமாம். அவனைக்கூடுகவெனத் தான் கூறாளாகலின் (உ0சு)

உ0எ இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பதை முன்னம்.†

இது முன்னமென்கின்ற உறுப்புக் கூறுகின்றது.

இ-ள். இவ்விடத்துத் தோன்றிய இம்மொழி கூறற்குரியோருங் கேட்டற்குரியோரும் இன்னாரென்று அச்செய்யுட்கட் டோன்றின் அறியாமற் றுணங்ஙனமறிதற் குரித்தாக நாட்டியதோர்டத்தே கூறுவோர்க்குங் கேட்போர்க்கும் ஏற்றவுரையாகச் செய்யுளுட்கிடத்திக் கூறுவது முன்னம். எ-று.

---

* எ-து, நிறுத்தமுறையானே எச்சவகையாமாறுணர்..... ற்று. பிறிதோர் சொல்லொடும், பிறிதோர்குறிப்பொடும் முடிவுகொள்ளுமியற்கையைப்பொருந்தினசெய்யுள் எச்சமாகும் எ-று. எனவே சொல்லெச்சங் குறிப்பெச்சமென விருவகையாயின. அது, எச்சவியலுள் "பிரிநிலைவினை" யென்னுஞ்சூத்திரத்துள் "பிரிநிலைவினை" என்பது முதலாகச்சொல்லப்பட்ட.........வகையானும் வருவன சொல்லெச்சமாம். குறிப்பென்றோதப்பட்டது குறிப்பெச்சமாகும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, நிறுத்தமுறையானே முன்னமாமாறுணர்......ற்று. இவ்விடத்திம்மொழியை யிவர்க்குச்சொல்லத்தகுமெனக் குறித்து, அவ்விடத் தவரவர் தம்மொழியையுரைப்பது முன்னமாம் எ-று. எனவே, இடமுங்காலமுமொழிந்து கேட்போர்க்குத்தக்கவாறுமொழிதலுஞ் செய்யுளுறுப்பென்றவாறும். "வந்தது கொண்டு வாராததுமுடித்த" லென்பதனாற் காலமுங் கொள்க. எ-து உரையாசிரியருரை.

இவரிவர்க்குரியவென்றறிவான் செய்யுட்கேட்போனெனவும், அவ் விடத்தவரவர்க் குரைக்கவென்றார் ஆசிரியரெனவுங் கொள்க. என்றென் பது ஈண்டு வினையெச்சம். சொல்லெச்சமன்று. அறியவென வொருவினை வருவிக்க. அது உரைப்பதையென்னும் வினைப்பெயரொடுமுடியும். உ-ம். "யாரிவ னெங்கூந் தற் கொள்வா னிதுவுமோ, ரூராண்மைக்கொத்த படிறுடைத்து" (கலி-அகூ) என்றக்கால் இது கூறுகின்றாள் தலைவியென்பது உங் கூறப்பட்டான் தலைவனென்பதூஉம் முன்னத்தான் உணரப்பட்ட வாறு காண்க. இவை அகம் புறமென்னும் இரண்டற்கும் பொது. (உ0எ)

உ0அ இன்பமு மிடும்பையும் புணர்வும் பிரிவு
மொழுக்கமு மென்றிவை யிழுக்கு நெறியின்றி
யிதுவா கித்திணைக் குரிப்பொரு ளென்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை யென்ப.*

இது பொருளென்னும் உறுப்புக் கூறுகின்றது.

இ-ள். இன்...ன்றி. எ-து இன்பமுந்துன்பமும் புணர்தலும் பிரித லும் உலகவொழுக்கமு மெனப்பட்ட இவை தப்பும்வழியின்றி. இது...து எ-து இத்திணைக்குரியபொரு ளிதுவாகவென்று ஆசிரிய ரோதிய பொரு ளன்றி. பொது...ப எ-து அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட்கூறெனப்படும். எ-று.

இன்பத்துன்பங்கூறுதலிற் புறத்திற்குங்கொள்க. ஒழுக்கம் இரண்டற்குங்கொள்க. வகையென்றதனாற் புலவன்றான் வகுத்ததே பொருளென்றுகொள்க. அதுவின்றிச் செய்யுள்செய்தலாகாதென்பது கருத்து. உ-ம். "கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப், பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்,தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ, நாணொடு மிடைந்த கற்பின் வாணுத, லந்தீங் கிளவிக் குறுமகண், மென் றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே" (அகம்-க) என்றாற் போலப் புலவன் வகுப்பனவாம். இப்பாட்டுப் பாலையேனும் முல்லை முதலியனவற்றிற்கும் இப்பொருள் பொதுவாம். பொதுமையென்றது எல்லாவுரிப்பொருட்கு மேற்றுப் பலவேறுவகையவாகச்செய்தல். இவ் வாறுவருவன புறப்பொருள்கூறியவற்றுள்ளுங்காண்க. (உ0அ)

---

* எ-து, நிறுத்தமுறையானே பொருளாமாறுணர்......ற்று. இன்பமும், துன்பமும், புணர்வும், பிரிவும், ஒழுக்கமுமென்றுசொல்லப்பட்டவை வழுவு நெறியின்றி யத்திணைக் குரிப்பொருளென்னாது, எல்லாப்பொருட்கும் பொது வாகிநிற்கும்பொருள், பொருள்வகையாம் எ-று. எ-து உரையாசிரியருரை.

௨0௬ அவ்வ மாக்களும் விலங்குமன்றிப்
பிறவவண் வரினுந் திறவதி னாடித்
தத்த மியலான் மரபொடு முடியி
னத்திறந் தானே துறையெனப் படுமே.*

இது துறையென்னும் உறுப்புக் கூறுகின்றது.

இ-ள். அவ்வ.. றி. எ-து ஐவகைநிலத்திற்கு முரியவெனப்படும் பல்வேறுவகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றி. பிற திறவதின் னாடியவண்வரினும். எ-து பிறவற்றைத் திறவிதாக ஆராய்ந்த செய்யுட்கண்ணே புலவன் படைத்துச்செய்யினும் ஒக்கும். உ-ம். "ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்காற், கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு, கழும முடித்துக் கண்கூடு கூழை, சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி, தீங்கதிர் விட்டது போல முகனமர்ந், தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கே யோர், வல்லவன் றைஇய பாவைகொ னல்லா, ருறுப்பெலாங் கொண் டியற்றி யாள்கொல் வெறுப்பினால், வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங் கொ லாண்டார், கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற், பல்கலைச்சில்பூங் கலிங்கத்த ளீங்கிதோர், நல்கூர்ந்தார் செல்வ மகள்" (கலி-௫௬) இதனுள் ஞாழல்முடித்தாளென நெய்தற்றலைவிபோலக்கூறி "ஊர்க்கானிவந்த பொதும்பருள்" என்றதனான் மருதத்துக்கண்டான்போலக்கூறிப் பின் குறிஞ்சிப்பொருளாகிய புணர்தல்நிமித்தம் உரிப்பொருளாகமுடித்தான். இவ்வாறுமயங்கலுங் குறிஞ்சித்துறைப்பாற்பட்ட துறையுறுப்பான்வந்த தென்க. இது ஓதிய இலக்கணமன்றாயினும் முற்கூறிய பொருள்வகை போற் புலவர்செய்ததோருறுப்பு: இதுவுங் கொள்ளப்பெறுமென்றார். இது புறத்திற்கும் ஒக்கும். (௨0௬)

௨௧0 அகன்று பொருள் கிடப்பினு மணுகிய நிலையினு
மியன்று பொருண் முடியத் தந்தன ருரைத்தன்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்.†

இது மாட்டென்னும் உறுப்புக் கூறுகின்றது. மாட்டுதலாவது கொண்டுவந்துகொளுத்துதல்.

* எ-து, துறையாமாறுணர்......ற்று. அகப்பொருளாகிய எழுபெருந் திணைக்கும், புறப்பொருளாகிய எழுபெருந்திணைக்கும் உரியமாந்தர் உயர்ந்து பட்ட மாவும், புள்ளும். உம்மையான் மரமுதலாயினவும், "பிறவவண்வரினு" மென்றமையான், நிலம், நீர், தீ, வளி, முதலாயினவுஞ் செய்யுட்கண்வருமிடத் துத் திறப்பாடுடைத்தாகவாராய்ந்து தத்தமக்கேற்றியபண்போடும், பொருந்திய மரபோடுமுடியி னிவ்வாறு திறப்பாடுடைத்தாய்வரும் துறையென்றுகூறப்படும் எ-று. எ-து உரையாசிரியருரை.

† எ-து, நிறுத்தமுறையானே மாட்டேறுணர்......ற்று. இதுவும்

இ-ள். அகன்—றும். எ-து பொருள்கொளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும் அணுகிக்கிடப்பச் செய்யினும். இயன்...தல். எ-து இவ்விருவகையானுஞ் சென்று பொருண்முடியுமாற்றாற்கொண்டு வந்து கூட்டியுரைப்பச்செய்தல். மாட்...கின். எ-து மாட்டென்னும் உறுப்பென்றுகூறுவர் செய்யுள்வழக்கினுள். எ-று.

இது மொழிமாற்றுப்பொருள்கோளன்றிப் புலவர் வேறுசெய்வதோர்செய்கை. இது பலபொருட்டொடராற் பலவடியான்வரும் ஒரு செய்யுட்கண்ணும், பலசெய்யுளைப் பலபொருட்டொடரால் ஒருகதையாகச் செய்யுமிடத்தும் வரும். உ-ம். முருகாற்றுப்படையுள் "மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற், கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக், கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட், கோபத் தன்ன தோயாப் பூந்துகில், பல்காசு நிரைத்த சில்காழல்குற், கைபுனைந்தியற்றாக் கவின் பெறுவனப்பி, னைவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச், சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித், துணையோ ராய்ந்த விணையீ ரோதிச், செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு, பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித், தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத், திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன், மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத், துவர முடித்த துகளறு முச்சிப், பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட், டுளைப்பூ மருதி னொள்ளிணர் அட்டிக்,கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும், பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர், நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ், நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை, தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின், குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர், வேங்கை நுண்டா தப்பிக் காண்வர, வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக், கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி, வாழிய பெரிதென் றேத்திப் பலருடன், சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச், சூர மகளி ராடுஞ் சோலை, மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்துச், சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட், பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்......பார் முதிர் பனிக் கடல்" (திருமுருகாற்றுப்படை) இதனுள் அடிமுதல் மேனியீறாயுள்ளவற்றையுடைய சூரமகளிர்பலருடனே கிள்ளி, இடையிடுபு, வைத்து, பண்ணி, செரீஇ, இட்டு, வளைஇ, திளைப்ப, கொட்டி, அப்பி, தெறியா, எத்திப், பாடி, ஆடும் வெற்பில் அடுக்கத்துச் சோலையிற் காந்தட்கண்ணி மலைந்த சென்னியனென அகன்றும் அணுகியும் மாட்டியவாறுணர்க. இப் பாட்டும் பிறபாட்டுக்களும் இவ்வாறே மாட்டுறுப்புவருமாறுணர்க. 1ஆரிய

1 "ஆரிய மன்னர் பறையி னெழூந்தியம்பும், பாரி பறம்பின்மேற் றண்ணுமை-காரி, விறன்முள்ளூர் வேங்கைவீ தாஅணுந் தோளா, ணிற னுள்ளூ ருள்ள தலர்" என இதனுள், பாரி பறம்பின்மேற்றண்ணுமை தாஅணுந் தோளாள் எனவும், நிறன் விறன்முள்ளூர் வேங்கைவீ எனவும், உள்ளூருள்ளதாகிய அலர் ஆரியமன்னர் பறையினெழூந்தியம்பும் எனவும், முன்னும் பின்னுங் கொள்வழியறிந்துகொளுவப் பொருளை திரியைந்தவாறு கண்டுகொள்க. என்றார் சேனாவரையர் (தொல்-சொல்-எச்ச-௧௩.)

மன்னர் பறையின்" என்பதுமது. இனிப் பலசெய்யுட்கண்வருமாறு சிந்தாமணியுள் யாங்கூறியவுரைகள்பலவற்றானு முணர்க. அருமையும் பெருமையும் உடையவாய்ப்பரந்தசொற் றொடர்ந்துபொருள்தருவதோ ரின்பம்நோக்கிச் சான்றோர் இம்மாட்டிலக்கணமே யாண்டும் பெரும் பான்மைவரச் செய்யுள்செய்தலிற் பின் தொடர்நிலைச்செய்யுள்செய்த வர்களும்இம்மாட்டிலக்கணமே யாண்டும்வரச் செய்யுள்செய்தார். இதுவும் பொருள்வகைபோற் புலவர்செய்துகொண்டதாயிற்று. (உ௧0)

உ௧௧ மாட்டு மெச்சமு நாட்ட லின்றி,
யுடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே.*

இது எய்தியதுவிலக்கிற்று.

இ-ள். தொடர்நிலையென்பது முற்கூறிய இருவகைத்தொடர்நிலைச் செய்யுள். மாட்டு...றி. எ-து முற்கூறிய மாட்டும் எச்சங்களும் நிறுத்த லின்றி உடனிலைமொழியினும் பெறும். அச்செய்யுட் கிடந்தவாறே யமையச்செய்யினுஞ் செய்யுட்டன்மையைப் பெறும். எ-று.

உ-ம். முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும், வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய, வாரேன் வாழிய நெஞ்சே" வேலினும் வெய்ய கான மவன், கோலினுந் தண்ணிய தடமென் றோளே" அகன்றுகிடந்து மாட் டின்றிவந்தது. "யானே யீண்டையேனே" (குறுந்-௫௪) என்னும் பாட்டு அணுகி மாட்டின்றிவந்தது. சிந்தாமணியுள் மாட்டும் எச்சமுமின்றி யுடனிலையாயமைந்தனபலவும் யாம்கூறியவுரையானுணர்க. எச்சமும் மாட்டும் என்னாத முறைபிறழ்ச்சியானே எச்சமுதலிய நான்குறுப்புமின்றி அச்செய்யுள் வரப்பெறும் என்று கொள்க. "வாரா ராயினும் வரினு மவர் நமக், கியாரா கியரோ தோழி நீர்நிலைப், பைம்போ துளரிப் புதன்மலி யொண்பொறிக், கருவிளை யாட்டி நுண்மு ளீங்கைச், செவ்வரும் பூழ்த்த வண்ணத்துய்மல ருதிரத் தண்ணென், றின்னுதெறிதரும் வாடையோ டென்னா யினள் கொ லென்னு தோரே" (குறுந்-௧௧0) இது எச்சமின்றி வந்தது. "தாமரை புரையுங் காமர் சேவடி" (குறுந்-கடவுள்வாழ்த்து) இப் பாட்டு முன்னமின்றிவந்தது. "மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே" (குறுந்-எ௧) இப்பாட்டுப் பொருளின்றிவந்தது. "ஈயற்புற்றத்து" (அகம்-அ) என்னும் பாட்டுத் துறைவகையின்றி வந்தது. மாட்டும் எச்சமு மெடுத்தோதினார் முன்னமும் பொருளுந் துறைவகையும்போல இன்றி யமையாச்சிறப்பினவல்லவென்றற்கு. (உ௧௧)

* எ-து,........இவ்விரண்டும் சூத்திரத்தாற்பொருள்விளங்கும். எ-று உரையாசிரியருரை.

உ௧௨ வண்ணந் தானே நாலைந் தென்ப.*

இது முறையே வண்ணம் இத்தனைபகுதித்தென்கின்றது.

இ-ள். வண்ணந்தாம் இருபதென்றுகூறுவர் புலவர். எ-று.

தானேயென்றார். அவை நூறும்பலவுமாக வேறுபடக்கொள்ளினும் இவ்விருபதின்கண்ணேயடங்கும் வேறு சந்தவேற்றுமைசெய்யாவென்றற்கு. அது நுண்ணுணர்வுடையோர்க்குப் புலனாமென்றுணர்க. (உ௧௨)

உ௧௩ அவைதாம், பாஅ வண்ணந் தாஅவண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ண
மியைபு வண்ண மளபெடை வண்ண
நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ண நலிபு வண்ண
மகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ண
மொழுகு வண்ண மொரூஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ண
முருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றாங்கன மறிப வறிந்திசி னோரே.†

இது மேற்கூறப்பட்டவண்ணங்களினதுபெயர்வேறுபாடுகூறுகின்றது.

இ-ள். முற்கூறிய நாலைந்தும் அவ்விருபது பெயர் வேறு..........
(இதுமுதல் ஆறு சூத்திரங்கட் குரையில்லை.)

உ௧௪ அவற்றுட், பாஅ வண்ணஞ்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்.‡

---

* எ-து, நிறுத்தமுறையானே வண்ணமாமாறுணர்......ற்று. வண்ணமாவன, வண்ணமாய்வருவது எ-று. அவற்றின்பாகுபாடு முன்னிற்சூத்திரத்தாற் காட்டுதும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, வண்ணவுறுப்பாமாறுணர்......ற்று. இதுவுஞ் சூத்திரத்தாற் பொருள்விளங்கும். எ-து உரையாசிரியருரை.

‡ எ-து, பாவண்ணமாவது சொற்சீர்த்தாகி நூலின்கட்பயின்றுவரும் எ-று. உ-ம். "அ இ உ அம்மூன்றுஞ்சுட்டு" எ-ம், "கொல்லேயையம்; எல்லே யியக்கம்" எனவும்வரும். எ-து உரையாசிரியருரை.

உ௧௫ தாஅ வண்ண,
மிடையிட்டு வந்த வெதுகைத் தாகும்.*

உ௧௬ வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்.†

உ௧௭ மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே.‡

உ௧௮ இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே.§

உ௧௯ அளபெடை வண்ண மளபெடை பயிலும்.$

இ-ள். இரண்டளபெடையும் பயிலச் செய்வது. எ-று.

உ-ம். "மாஅ மலரொடு விராஅய்ப் பராஅம்" 1"கண்ண்டண்ண் ணெனக் கண்டுங் கேட்டும்" எனவரும். "தாஅம் படுநர்க்குத் தண்ணீ ருளகொல்லோ, வாஅம் பல்விழி யன்பனை யறிவுறில், வாஅம் புரவி வழுதி யொ டெம்மிடைத், தோஒ நுவலுமிவ் வூர்" இஃதளபெடைத் தொடை யாம். (உ௧௯)

* எ-து, தாவண்ணமாவது இடையிட்டெதுகையான்வரும் எ-று. எ-து உரையாசிரியருரை.

† எ-து, வல்லிசைவண்ணமாமாறுணர்.........ற்று. வல்லெழுத்துமிக்கு வருவது....................யன்ன தொடர்பு முடப்புன்னைக்கீழ்க்கட்......ட்டுக் கண்ணிதொடுப்பவர் தாழைப்பூங்கொட்டி.........ட்டி யுள்ளம்விடாது நிலையு மெனவிட்டொட்டொட்டி நீங்காதோ வொட்டு எ-று. எ-து உரையாசிரிய ருரை.

‡ எ-து, மெல்லிசைவண்ணமாமாறுணர்......ற்று. மெல்லெழுத்துமிக்கது மெல்லிசைவண்ணமாம் எ-று. எ-து உரையாசிரியருரை.

§ எ-து,...உ-ம். "வால்வெள் ளருவி வரமிசை யிழியவுங் கொ...ன" எ-து உரையாசிரியருரை.

$ எ-து, அளபெடைவண்ணமாமாறுணர்......ற்று. அளபெடைபயின்று வருவது அளபெடைவண்ணமாம் எ-று. உ-ம். "தாஅட் டாஅமரை மல ருழக் கிப், பூஉக் குவளைப் போஒ தருந்திக், காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய், மாஅத் தாஅண் மோஒட் டெருமை" எனவரும். எ-து உரையாசிரியருரை.

1 "கண்ண்ணென்பது சீர்நிலையெய்தித் தேமாவாயிற்று. "தண்ண் ணென என்றவழித் தட்பத்திற்குச்சிறப்புக்கூறுதற்காக இயற்சீர்க்கண் ணகரவொற்றினைமிகக்கொடுத்து அளபெடுத்துச் செய்யுள்செய்தான்" என்றார் முன்னும் (செய்-௧௮.)

உஉ0 நெடுஞ்சீர் வண்ணநெட் டெழுத்துப் பயிலும்.*

இது நெடுஞ்சீர்வண்ணங் கூறுகின்றது.

இ-ள். நெடுஞ்சீர்வண்ணமாவது நெட்டெழுத்துப்பயின்றுவரும்.எ-று.

உ-ம். "மாவா ராதே மாவா ராதே" எனவரும். "நீரூர் பாணு யாறே காடே, நீலூர் காயாப் பூவீ யாதே, யூரூர் பாகா தேரே, பீரூர் தோளாள் சீறூ ரோளே" இதுவு மிறைக்கவியாம். (உஉ0)

உஉக குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்.†

இது குறுஞ்சீர்வண்ணங் கூறுகின்றது.

இ-ள். குறுஞ்சீர்வண்ணமாவது குற்றெழுத்து மிக்குவரும். எ-று.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (அகம்-ச) எனவரும். "உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச், சிறுகொடி யவரை பொதி தளை யவிழக், குறிவரு மிதுவென மறுகுபு, செறிதொடி நறுநுத லழிய,லறி யலை யரிவையவர் கருதிய பொருளே" இதுவும் மிறைக் கவியாம். (உஉக)

உஉஉ சித்திரவண்ண,
நெடியவுங் குறியவு நேர்ந்துடன் வருஉம்.‡

இது சித்திரவண்ணங் கூறுகின்றது.

இ-ள். சித்திரவண்ணமாவது நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் ஒப்ப விராய்ச் செய்வது. எ-று.

1"சார ஞட நீவா லாறே" எனவரும். "ஊர்வழியூர் தொர்தார் வாசி பேரச், சேரி சார்வரி தொல்லாதிப், பீர்தீர் தோழி தோளே" இதுவும் மிறைக்கவியாம். பல்வண்ணம் படுதலின் இதனைச் சித்திரவண்ண மென்றார். (உஉஉ)

---

* எ-து, நெட்டெழுத்துப்பயின்றுவருஞ்சீரினையுடைய வண்ணம் நெடுஞ் சீர்வண்ணமாம் எ-று. உ-ம். "நீரூர் பாணு யாறே காடே, நீலூர் காயாப் பூவீ யாதே" எனவரும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, குற்றெழுத்துப்பயின்றுவருவது குறுஞ்சீர்வண்ணமாம் எ-று. உ-ம். "உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச், சிறுகொடி யவரை நெறி தளை யவிழ" எனவரும். எ-து உரையாசிரியருரை.

‡ எ-து, சித்திரவண்ணமாமாறுணர்.........ற்று. நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் சார்ந்துவரும் எ-று. உ-ம். "ஒரூர் வாழினுஞ் சேரனு மார்வ முயங் கார்" எனவரும். எ-து உரையாசிரியருரை.

---

1. "சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வாரல் வரினே யானஞ் சுவலே
சார ஞட நீவா லாறே" என்பது

உஉங நலிபு வண்ண மாய்தம் பயிலும்.*

இது நலிபுவண்ணங் கூறுகின்றது.

இ-ள். நலிபுவண்ணம் ஆய்தம்பயின்றுவரும். எ-று.

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை, வேண்டும் பிறன்கைப் பொருள்" (திருக்-களஅ) "னஃகான் றஃகா னுன்கனுரு பிற்கு" (தொல், எழுத்-உக) எனவரும். நலிபென்பது ஆய்தம். "எஃகோ டவன் கேட்ப வேமறந்தாள் போதென்று, யஃகுநீர்க் கான்யாற் றவிர்மண லெக்கர் யேல்" என்றுற் றெருடைப்பாற்படும். (உஉங)

உஉச அகப்பாட்டு வண்ண,
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே.†

இஃது அகப்பாட்டுவண்ணங் கூறுகின்றது.

இ-ள். அகப்பாட்டுவண்ணமாவது முடித்துக்காட்டாத்தன்மையாலே முடிந்ததன்மேலே நிற்பதாம். எ-று.

அது தன்னைமுடித்தற்குரிய ஈற்றசை யேகாரத்தான்வாராது இறுதி இடையடிபோன்றுநிற்பது. "பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்பியும், புன்னை நுண் டாது நம்மொடு தொகுத்தும், பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியு, மணந்ததற் கொவ்வான் றணந்துபுற மாறி, யினைய னாகி யீங்குத் துறந்தோன், பொய்த லாயத்துப் பொலந்தொடி மகளிர், கோடியர் வெண் மண லேறி, யோடுகல னெண்ணுந் துறைவன் றோழி" "ஆணமில் பொரு ளெமக் கமர்ந்தனை யாடி" எனவரும். (உஉச)

---

* எ-து,............

† எ-து, அகப்பாட்டுவண்ணமாவது முடியாததன்மையின் முடிந்ததன் மேலது எ-று. உ-ம். "பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்பியும், புன்னை நுண் டாது நம்மொடு தொகுத்தும், பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியும், மணந் ததற் சேர்வான் றணந்து புறமாறி, யினைய னாகி யீங்குத் துறந்தோன், பொய்த லாயத்துப் பொலந்தொடி மகளிர், கோடியர் வெண்மண லேறி, யோடுகல மெண்ணுந் துறைவன் றோழி" எனவரும். எ-து உரையாசிரியருரை.

உஉரு புறப்பாட்டு வண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும்.*

இது புறப்பாட்டு வண்ணங்கூறுகின்றது.

இ-ள். புறப்பாட்டுவண்ணமாவது இறுதியடிப் புறத்ததாகவுந் தான் முடிந்ததுபோன்றுநிற்றல். எ-று.

"இன்னு வைகல் வாரா முன்னே, செய்ந்நீ முன்னிய வினையே, முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே" (புறம்-௩௬௩.) 'முன்னியவினையே' முடிந்ததுபோன்றுமுடியாதாயிற்று. (உஉரு)

உஉசா ஒழுகு வண்ண மோசையி னொழுகும்.†

இஃது ஒழுகுவண்ணங் கூறுகின்றது.

இ-ள். முற்கூறியவாறன்றி யொழுகியவோசையாற்செய்வது ஒழுகு வண்ணம். எ-று.

ஒழிந்தனவும் ஒழுகுமேனும் அவற்றின் வேறிலக்கணமுடைய "அம்ம வாழி தோழி காதல, ரின்னே பனிக்கு மின்னு வாடையொடு, புன்கண் மாலை யன்பின்று நலிய, வுய்யல ளிவளென் றுணரச் சொல்லிச், செல்லுநர்ப் பெறினே சேய வல்ல, வின்னினி யிறந்த மன்னவர், பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே" எனவரும். (உஉசா)

---

* எ-து, புறப்பாட்டுவண்ணமாவது முடிந்ததுபோன்று முடியாதாகிவரும் எ-று. உ-ம். "நிலவுமண லகன்றுறை யலவ னேவலின், னெறிமணிப் புள்ளின மொய்ப்ப நெருநலும், வந்தன்று கொண்கன் றேரே யின்றும், வருகுவ தாயிற் சென்றுசென்று வம்பர் ததைந்த, புன்னைத் தாதுகு தண்பொழில் மெல்ல, மென்முலை ஞெமுங்கப் புல்லினெ வனே, மெல்லியை நீயே நல்காது விடுவை யாயின், வைகலும் படர்மதி யுள்ளமொடு, மடன்மாவேறி, யுறுதுய ருலகுட னறியச், சிறுகுடிப்பாக் கத்துப் பெரும்பழி தருமே" எனவரும். எ-து உரை யாசிரியருரை.

† எ-து, ஓசையானொழுகிக்கிடப்பது ஒழுகுவண்ணமாம் எ-று. உ-ம். "அம்ம வாழி தோழி காதல, ரி......... பனிக்கு மின்னு வாடையொடு, புன்கண் மாலையு மின்று நலிய, வுய்யுல ளிவளென வுணரச் சொல்லிச், செல்லுநர்ப் பெறினே சேய வல்ல, வின்னினி யிறந்த மன்னவர், பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே" எனவரும். எ-து உரையாசிரியருரை.

உஉஎ ஒரூஉ வண்ண மொரீஇத் தொடுக்கும்.*

இஃது ஒரூஉவண்ணங் கூறுகின்றது.

இ-ள். ஒரூஉவண்ணமாவது யாற்றொழுக்குப்போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றினை யவாவாமை அறுத்துச்செய்வது. எ-று.

"யானே, யீண்டை யேனே யென் னலனே, யானா நோயொடு...மன் றத் தஃதே" (குறுந்-கூஎ.) எனவரும். "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே, பெரியகட் பெறினே" (புறம்-உநரு) என்பதுமது. இஃது யாப்புப்போலப் பொருளைக் கோசையே;கோடலானும் அடியிறந்துகோட லானும் யாப்பெனப்படாது. இனியெல்லாத் தொடையும் ஒரீஇச் செந் தொடையாற் றொடுப்பது ஒரூஉவண்ணமெனக்கூறிப் 1"பூத்த வேங்கை" என்பது உதாரணங்காட்டுவது தொடைப்பகுதியாம். (உஉஎ)

உஉஅ எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்.†

இது எண்ணுவண்ணங் கூறுகின்றது.

இ-ள். எண்ணுவண்ணமாவது அடிக்கண்ணே பயின்றுவருவது.எ-று.

இது காரணப்பெயர் "நன்ன னேறை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி, பொன்னணி வல்விற் 2பொன்றுறை யென்றாங்கு" (அகம் - சச) எனவரும். "நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழல்" (பதிற்று-இரண்டு-கச) "நுதலுந் தோளுந் திதலை யல்குலும்" (அகம்-கககூ) என்பதுமது. (உஉஅ)

---

* எ-து, ஒரூஉவண்ணமாவது நீங்கினதொடையாகிக்கிடப்பது எ-று. அது செந்தொடையாம். உ-ம். "தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே, யான்சென் றுரையின மன்னோ,சொல்லாய் வாழி தோழி வரைமிசை, முள்ளாற் பொதுளிய வலங்குகுலை நெடுவெங், கதிர்பொங்கு வரலின மழை துவைப்ப, மணிநிலா விரியுங் குன்று கிழவோற் கரு......மே." எ-து உரையாசிரியருரை.

† எ-து, எண்ணுப்பயின்றுவருவது எண்ணுவண்ணம் எ-று. உ-ம். "நில நீர் வளிவிசும் பென்ற நான்கி, னளப்பரியையே, நாள்கோ டிங்கள் ஞாயிறு கனையழ, லைந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை" (பதிற்றுப்பத்து-கச) எனவரும். எ-து உரையாசிரியருரை.

---

1 "பூத்த வேங்கை வியன்சினை யேறி" இதனை இவ்வியல் நூற்றுப் ருத்திரவுரையிலெடுத்துக் காட்டினர்.

2 புன்றுறை எனவும் பாடமுண்டு.

உஉகூ அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்.*

இஃது அகைப்புவண்ணங் கூறுகின்றது.

இ-ள். அகைப்புவண்ணமாவது விட்டுவிட்டுச் சொல்லும் ஓசையை யுடையது. எ-று.

அகைத்தல் அறுத்தலாதலிற் காரணப்பெயர். ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில்பயின்றும் அற்றும் வருவது. "வாரா ராயினும் வரினு மவர் நமக், கியாரா கியரோ தோழி" (குறுந்-ககO) எனவரும். "தொடுத்தவேம் பின்மிசைத் துதைபோந் தையிடை, யடுத்தவ ரு மலே யட்டுண் டுண்ண,லென்பா னியன்ற வேனே முயற்சி, யம்பசும்பு தானே யெதிர்முயன்ற வேந்த, ருயிர்முடிக்கும் வேலின் னவன்" என்பதுமது. ()

உருO தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்.†

இது தூங்கல்வண்ணங் கூறுகின்றது.

இ-ள். தூங்கல்வண்ணமாவது தூங்கலோசைத்தாகி வரும். எ-று.

அது வஞ்சிபோலற்றுச் சேறல்1 "யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின், றானூட யானுணர்த்தத் தானுணரான், றேனூடும்" (முத் தொள்.) எனத் தூங்கல் வண்ணம்வந்தது. (உருO)

உருக ஏந்தல்வண்ணஞ்,
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.‡

இது ஏந்தல்வண்ணங் கூறுகின்றது.

இ-ள். ஏந்தல்வண்ணமாவது ஒருகாற்சொல்லியசொல்லானே சொல் லப்படும் பொருள்சிறப்பச் செய்தல். எ-று.

ஏந்தல் ஒருசொன்மிகுதல். உ-ம். "வைகலும் வைகல்......துணரா தார்" (நாலடி-ருக) "கூடுவார் கூடல்கள் கூட லெனப்படா, கூடலுட் கூடலிலே கூடலுங்-கூட, லரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப், பிரிவிற் பிரிவே பிரிவு" எனவரும். (உருக)

---

* எ-து, அகைப்புவண்ணமாவது அறுத்தறுத்தியலும் எ-று. உ-ம். "தொடுத்த வேம்பின் மிசைத்துதைந்த போந்தைமிடை வசைத்தவர்" என வரும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, தூங்கல்வண்ணமாவது வஞ்சியுரிச்சீர்பயின்றுவரும். உ-ம். "வசையில்புகழ் வயங்குவிண்மீன், திசைதிரிந்து தெற்கேகினும்" (பட்டினப் பாலை-க, உ) எனவரும். எ-து உரையாசிரியருரை.

‡ எ-து, ஏந்தல்வண்ணமாவது சொல்லியது சொல்லினிற் சொல்லப்பட் டது சிறக்கும் எ-று. உ-ம். "கூடுவார் கூடல்கள் ........ பிரிவு" எனவரும். எ-து உரையாசிரியருரை.

---

1 இப்பாட்டுமுழுதையும் கற்பியல் கசு-ம் சூத்திரவுரையிலெடுத்தோதினர்.

உ௬உ உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்.*

இஃது உருட்டுவண்ணங் கூறுகின்றது.

இ-ள். உருட்டுவண்ணமாவது அராகந்தொடுக்குமது. எ-று.

உருட்டிச்சொல்லப்படுவது அராகமாதலின், ஞெகிழா துருண்ட வோசைத்தாகலின், இது குறுஞ்சீர்வண்ணத்தின்வேறாம். உ-ம். "உருகெழு முருகிய முருகெமன வதிர்தொறு, மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்"1 எனவரும். (உ௬உ)

உ௬௩ முடுகுவண்ண,
மடியிறந் தோடி யதனோ ரற்றே.†

இது முடுகுவண்ணங் கூறுகின்றது.

இ-ள். முடுகுவண்ணமாவது முடுகியல்தொடுத்த அடியோடு பிறவடி வேறுபடத் தொடர்ந்தோடுவது. எ-று.

உ-ம். "நெறி யறி செறி குறி புரி திரிபு" (கலி-௬௧) என்னுஞ் சுரிதகமும் "இரிபெழு பதிர்பதிர் பிகந்து" (கலி-௧௦௪) என்பது முதலி யனவுமாம். இவை வேறுபாடு நோக்கி யிதனைச் சொற்சீரடியும் முடுகிய லடியுமெனப் பரிபாடற்கு விதந்தோதினர். (உ௬௩)

உ௬௪ வண்ணந் தாமே யிவை யென மொழிப.‡

இது புறனடை

இ-ள் சந்தவேற்றுமைசெய்வன இவையல்லது வேறில்லை. எ-று.

---

* எ-து, உருட்டுவண்ணமாவது அராகந்தொடுக்கும் எ-று. உ-ம். "தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை தழலென விரிவன பொழில்" எனவரும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, முடுகுவண்ணமாவது நாற்சீரடியின்மிக் கோரடியராகந்தொடுக்கும் எ-று. உ-ம். "நெறியறி செறிகுறி புரிதிரி பறியா, வறிவனை முந்துறீஇத் தகைமிகு தொகைவகை" (கலி-௬௧) எனவரும். எ-து உரையாசிரியருரை.

‡ எ-து, மேற்கூறப்பட்டவண்ணமெல்லாந் தொகுத்துணர்...ற்று. வண்ணங்களாவன மேற்சொல்லப்பட்டன எ-று. இதனாற்பெற்றதென்னை? இப் பொருண்மை மேற்பெறப்பட்டதாலெனின் ஒருபயன்கூறினாரென்க. என்னை? வண்ணம் பாகுபடுகின்றது தொகையினானன்றே இன்னும் வேற்றொரு...... குப்பாகுபடுப்பதேயாகுமென்றறிவித்தல். அஃதாவது குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம் என்று நிறுத்து அகவல், ஒழுகல், வல்லிசை, மெல்லிசை யென்பனவற்றோ டுறழ இருபதாம். அவற்றைத் தூங்கிசை, எர் திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை யென்பனவற்றோ டுறழநூ....... றறை குறிலகவற்றூங்கிசைவண்ணம் நெடிலகவற்றூங்கிசைவண்ணம் எ வொருசாராசிரியர் வழங்குப. எ-து, உரையாசிரியருரை.

---

1 "செஞ்சுடர் வடமேறு" என்னும் பாட்டிற்காண்க. (செய்...)

வண்ணமாவது சந்தம். தாமேயென அவற்றின்சிறப்புக் கூறிற்று. இதன்கருத்துப் பாக்களோடும் பிறவற்றோடும் உறழ அது பலவகைப் படுத்தினால் வரையறையின்றாமாயினும் அவையெல்லாம் இருபதின் கூறாகிய சந்தவேற்றுமையாவதல்லது சந்த வேற்றுமை விளங்காவாறாயிற்று. (உகூச)

உகூரு சின்மென் மொழியாற் றாய பனுவலி
னம்மை தாமே யடிநிமிர் பின்றே.*

இதன் தொகைச்சூத்திரத்துள் ஆறுதலையிட்டவந்நாலைந்துமெனக் கூறுபடுத்தி வேறுநிறீஇப் பின்ன ரெட்டுறுப்பெனக்கூறியதென்னை யெனின் அவை யொரோசெய்யுட்கோதிய வுறுப்பென்பதூஉம் இவை பல செய்யுளுந் திரண்டவழி இவ்வெட்டுறுப்பும்பற்றித் தொகுக்கப்படுமென்ப தூஉம் அறிவித்தற்கெனக்கொள்க. இவற்றை வனப்பென்று பெயர் கூறிற்றுப் பலவுறுப்புந் திரண்டவழிப்பெறுவதோ ரழகாதலின். இப் பெயர் சூத்திரத்தாற் பெறவேண்டுவார் "வனப்பிய றானே வகுக்குங் காலைச், சின்மென் மொழியால்" எனப்பாடமோதுப. 1இது பெரும்பான்மை பல செய்யுளுறுப்பாய்த்திரண்டுபெருகிய தொடர்நிலைக்குப் பெறுவதோ ரழகென்பதூஉம், சிறுபான்மை தனிச்செய்யுட்கும் இவ்வழகு கொள்ள வேண்டுமென்பதூஉம், இருபத்தாறுறுப்பும் அங்ஙனந் திரண்டசெய்யுட்கு முரித்தென்பதூஉம் உணர்த்துதற்குத் தொகைச்சூத்திரத்தைப் பிரித் தோதிப் பின்னும் ஓரினப்படுத்தி யொருசூத்திரமாகவே யோதினா ரென் றுணர்க. இவ்வனப்பை யொரோசெய்யுளுட்கொள்ளின் மாத்திரை முதலியவற்றின் அழகு பிறவாதாம். இங்ஙனம் வருப்பவே தனிநிலைச் செய்யுளுந் தொடர்நிலைச்செய்யுளும் எனச் செய்யு ளிரண்டாயிற்று. இனிக் கூறுகின்றன தொடர்நிலைச்செய்யுளென் றுணர்க.

இது முறையே அம்மை கூறுகின்றது. அம்மை குணப்பெயர். அமைதிபட்டு நிற்றலின் அம்மையாயிற்று.

இ-ள். சின்...யால். எ-து சின்மையாய் மெல்லியவாய சொல்லானும் தாய...பனுவலின். எ-து இடையிட்டு வந்த பனுவல் இலக்கணத்தானும். அடிநிமிர் பின்றுதான் அம்மை. எ-து அடிநிமிர்பின்றாய்வருவது தான் அம்மையெனப்படும். எ-று.

---

* எ-து, நிறுத்தமுறையானே வனப்புப்பாகுபடுக்குமாறு அம்மையாகிய செய்யுளுணர்......ற்று. சிலவாய் மெல்லியவாகியமொழிகளானே தொடுக்கப் பட்ட அடிநிமிர்வில்லாதசெய்யுள் அம்மையாகும் எ-று. உ-ம். "அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய், தன்னோய்போற் போற்றாக் கடை" (திருக் குறள்-கூகரு) எனவரும். எ-து உரையாசிரியருரை.

1 இங்ஙனம் பாடங்கொண்டார் பேராசிரியர்-உரையாசிரியரும். நச்சினார்க்கினியர் "வனப்பியறானே வகுக்குங்காலை" என்னும் அடியில்ல தாகவைத்தே உரைகூறுதல்காண்க.

அடிசிமிராதென்றது ஆறடியின்எருமையை. சிலவாதல் சொல்லெண்ணுச் சுருங்குதல். மெல்லியவாதல் சிலவாகியசொற்களும் எழுத்தினுன் அகன்று காட்டாது சிலவெழுத்தான்வருதல். தாயபனுவலின் என்பது அறம்பொருளின்பமென்னு மூன்றற்கு மிலக்கணங்கூறுவனபோன்றும் இடையிடையே அன்றுயுந் தாவிச்செல்வதென்றவாறு. அங்ஙனம்வந்தது பதினெண்கீழ்க்கணக்கு. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானுஞ் சிறுபான்மை யாறடியானு மோரோசெய்யுள்வந்தவாறும் அவை சின்மென்மொழியாய்வந்தவாறும் அறம்பொருளின்பத்திலக்கணங்கூறிய பாட்டுக்களும் பயின்றுவந்தவாறும் இடையிடையே கார்நாற்பதுங் களவழிநாற்பது முதலியன வந்தவாறுங் காண்க. உள்ளுறுப்பாய்ப் பதினெட்டையும் வனப்பெனப் படுமென்றுங்கொள்க. "பொருள்கருவி காலம் வினையிடனே டைந்து, மிருடீர வெண்ணிச் செயல்"(திருக்-சுஎ௫) இஃது இலக்கணங்கூறலிற் பனுவலினென்ருர். "மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண், பலர்காணும் பூவொக்குமென்று" (திருக்-கககஉ) இஃது இலக்கிய மாதலில், தாயவென்ருர். தாவுதல் இடையிடுதல். அதனுள்ளுறுப்பாகிய பாட்டுக்கடோறும் மாத்திரை முதலியவுறுப்புக்களேற்பன பலவும்வருமாறும் இவ் வனப்பெட்டனுள் ஏற்பனபலவும் வருமாறு முணர்க. ஆசாரக்கோவையுள்"ஆரெயின் மூன்றும்" (தற்சிறப்புப்) ஆறடியாற் சிறுபான்மைவந்தது. (உ௩௫)

உ௩௬ செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுமே.*

இது முறையே அழகு கூறுகின்றது.

இ-ள். வழக்குச்சொற்பயிலாமற் செய்யுளுட்பயின்றுவருஞ்சொல்லானே சீர்த்துப் பொலிவுபெறப்பாடின் அப்பகுதிஅழகெனப்படும். எ-று.

அவ்வகையென்றதனுன் அவை வேறுவேருகவந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றுணர்க. அவை [1]நெடுந்தொகை முதலிய தொகையெட்டுமாம். அது தலைச்சங்கத்தாரையொழிந்தோர் சிறுபான்மை வழக்கும் பெரும்பான்மை செய்யுட்சொல்லுமாக இவ்விலக்கணத்தாற் செய்தவாறே இக்காலத்துச் செய்யினுமாம். எ-று. தாயபனுவலின்மையின் மூவடிமுப்பது முதலியனவும் அழகின்பாற்படும். இவற்றுள்ளும் ஒரோசெய்யுட்கண் மாத்திரை முதலியவுறுப்பும் இவையும் ஏற்ற வகையான் வருமாறு காண்க. (உ௩௬)

* எ-து, நிறுத்தமுறையானே யழகென்னுஞ்செய்யுளுணர்.........ற்று. செய்யுட்குரியசொல்லினற் சீர்புனைந்துதொடுப்பின் அவ்வகைப்பட்டசெய்யுள் அழகெனப்படும் எ-று. உ-ம். "துணியருந் பரப்பகங் குறைய வாங்கி, மணிகிளரடுக்கன் முற்றிய வெழிலி, காலொடு மயங்கிய கனையிரு ணடுநாள், யாங்குவந்தனையோ வோங்கல் வெற்ப, நெடுவரை மருங்கிற் பாம்பென விழிதருங், கடுவரற் கலுழி நீந்தி, வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே" எனவரும். எ-து உரையாசிரியருரை.

1 நெடுந்தொகை என்பது அகநானூறு.

உ௩௭ தொன்மைதானே,
யுரையொடு புணர்ந்த பழமை மேற்றே.*

இது தொன்மைகூறுகின்றது.

இ-ள். தொன்மையாவது உரைவிராஅய்ப் பழமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவன. எ-று.

அவை பெருந்தேவனார்செய்த பாரதமும், தகடூர்யாத்திரையும் போல்வன. சிலப்பதிகாரமும் அதன்பாற்படும். (உ௩௭)

உ௩அ இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்னெறிப் புலவர்.†

இது தோல்கூறுகின்றது. அஃது இருவகைய. கொச்சகத்தானும் அகவலானுஞ் செய்யப்படுவனவாம்.

இ-ள். இழுமென்னுமோசையையுடைய மெல்லென்ற சொல்லானே அறம் பொருளின்பம் வீடென்னும் விழுமியபொருள்பயப்பச் செய்யினும் ஆசிரியப்பாட்டான் ஒருகதைமேற்றொடுப்பினுந் தோலென்றுகூறுவர் பழநெறியையறிந்த புலவர். எ-று.

யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது (செய்-கசக) என்றவழிப் பொருள்வேறுபட்டுக் கொச்சகத்தாற்செய்யப்படுவன தோலாம். எ-று. இவை பொருட்டொடர். அவை சிந்தாமணி முதலியன. அவை

---

* எ-து, நிறுத்தமுறையானே தொன்மைச்செய்யுளாமாறுணர்......ற்று. உரையொடும்பொருந்திப்போந்த பழமைத்தாகிய பொருண்மேல் வருவனவாம். அவை இராமசரிதை பாண்டவசரிதை முதலாயினவற்றின்மேல்வருஞ்செய்யுள். எ-து உரையாசிரியருரை.

† எ-து, நிறுத்தமுறையானே தோலாகியசெய்யுளாமாறுணர்-ற்று. இழுமென்மொழியினுன் விழுமியபொருளைக்கூறினும் பரந்தமொழியான் அடிநிமிர்ந்தொழுகினும் தோலென்னுஞ்செய்யுளாம் எ-று. உ-ம். "பாயிரும் பரப்பகம் புதையப் பாப்பக, மாயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத், துணிதரு வெள்ளத் துயிலெடை பெயர்க்கு, மொளியினுன் காஞ்சி யெளிதெனக் கூறி, னிம்மை யில்லை மறுமையில்லை, நன்மை யில்லைத் தீமை யில்லைச், செய்வா ரில்லைச் செய்பொரு ளில்லை யறிவா ரில்லை............" (மார்க்கண்டேயனுர்காஞ்சி) இழுமென்மொழியால் விழுமியதுவந்தது. "திருமழை தலைஇய விருணிற விசும்பி, னென்னுங் கூத்தராற்றுப்படை" பரந்தமொழியா னடிநிமிர்ந்துவந்தது. எ-து உரையாசிரியருரை.

பாவிற்கினமாகிய துறையும் விருத்தமும் பற்றிச் செய்தன வென்பார்க்கு அப்புலவர்செய்யுட்செய்கின்ற காலத்திற்குநூல் தொல்காப்பியமாயவாறும் அவர் இனங் கொள்ளாதவாறும் அவ்வினங்கட்காம் இலக்கணக்குறைபாடுடையவாறுங் கொச்சகம்போற் சிறப்பின்மையும் முன்னர் விளங்கக்கூறியவற்றைக்கொண்டும் பின்புசெய்தநூல்கள் முன்புசெய்த செய்யுட்கு விதியாகாதவாறுங்கொண்டு மறுக்க. பின்னோர் தாஞ்செய்த நூல்கட்கு அவை உதாரணமாகக் காட்டலின் அச்செய்யுள் அந்நூல்கட்குமுன்னுயவாறுமுணர்க. இனித் தொல்காப்பியனுரையொழிந்த ஆசிரியர் பதினொருவருட் சிலர் இனமுங்கொண்டார். அதுபற்றி யாப்பருங்கல முதலியவற்றினும் இனங்கொண்டாரென்பார்க்கு அவர்கள் அகத்தியனார்க்குமாறாக நூல்செய்தவராவர். அவை வழிநூலெனப்படாவென்று மறுக்க. இனியாசிரியப்பாவான் அடிமிமிர்ந்துவந்தன தேசிகப்பா முதலியன. (உஙஅ)

உஙகூ விருந்தே தானும்,
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே.*

இது விருந்து கூறுகின்றது.

இ-ள். விருந்தென்றுகூறப்படுவதுதானும் புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைச்செய்யுளின்மேற்று. எ-று.

தானுமென்றவும்மை யிறந்ததுதழீஇ யிற்று. முற்கூறிய தோல் பழையகதையைப் புதிதாகக்கூறலென்றும், இது பழையதும் புதியதுமாகிய கதைமேற்றன்றித் தான் புதிதாகப்படைத்துத் தொடர்நிலைச்செய்யுள் செய்வதென்றும் பொருள்தருதலின் அவை முத்தொள்ளாயிரமும் பின்னுள்ளார் பாட்டியன்மரபிற்கூறிய கலம்பகச்செய்யுள் முதலியவற்றைப் பாடுதலுமாயிற்று. (உஙகூ)

உசO ஞகாரை முதலா ளகார வீற்றுப்
புள்ளி யிறுதி யியைபெனப் படுமே.†

இஃது இயைபு கூறுகின்றது.

இ-ள். ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் பதினொருபுள்ளியுள் ஒன்றனையீறாகக்கொண்டு செய்யுளைப் பொருட்டொடராகச்செய்வது இயைபெனப்படும். எ-று.

* எ-து, நிறுத்தமுறையானே விருந்தென்னுஞ்செய்யுளுணர்.........ற்று. விருந்தாவது மு ர்பு......ப்புதிதாகப்புனைந்த யாப்பின்மேலது எ று. புதிதாகப் புனைதலாவது ஒருவன்சொன்னமொழியினிழல்வழியின்றித் தானே தோற்று வித்தல். அது வந்தவழிக் கண்டுகொள்க. இது பெரும்பான்மையு மாசிரியப் பாவைக்குறித்தது. எ-து உரையாசிரியருரை.

† எ-து, நிறுத்தமுறையானே இயைபாமாறுணர்.....ற்று. ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள, என்னும் பதினொருபுள்ளியுமீறாகவருஞ்செய்யுள் இயைபென்னுஞ்செய்யுளாம் எ-று. உ-ம். வந்தவழிக் கண்டுகொள்க. எ-து உரையாசிரியருரை.

இயைபென்றதனானே பொருளியைதல்பெற்றாம். பாந்தமொழியாலடிநிமிர்ந்த தோல் உயிரீற்றவாயேவரும். னகரவீற்று னிற்றுப் பொருடொடர்ந்தன மணிமேகலையும், உதயணன்கதையும். ஒழிந்த வொற்றுக்களுக்கும் இலக்கணமுண்மையின் இலக்கியம் இக்காலத்து வீழ்ந்தன போலும். எனப்படுவதென்றதனான் இக்காலத்தார் கூறும் அந்தாதிச்சொற்றொடருங்கொள்க. (உ௪0)

உ௪க [1]சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்
தோதல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.*

இது புலன்கூறுகின்றது.

இ-ள். பாடி மாற்றங்களானே செவ்விதாகக்கூறப்பட்டு ஆராய்ந்து காணாமை பொருள் தானே தோன்றச்செய்வது புலனென்றுகூறுவார் அறிவறிந்தோர். எ-று.

அவை விளக்கத்தார்கூத்து முதலிய வெண்டுறைச்செய்யுளென்று கொள்க. (உ௪க)

உ௪உ ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா வைந்தடி யொப்பித்
தோங்கிய மொழியா னோங்கன மொழுகி
னிழைபி னிலக்கண மியைந்த தாகும்.†

இஃது இறுதிநின்ற இழைபுகூறுகின்றது.

இ-ள். ஒற்...து. எ-து வல்லொற்றெடுத்த வல்லெழுத்துப்பயிலாமல் குறள்...து. எ-து இருசீர்முதல் எழுசீரடியளவும் அவ்வைந்தடியினையும் ஒப்பித்து. ஓங்கி...ன். எ-து நெட்டெழுத்துப்போல் ஓசைதரும். மெல்லெழுத்தும் லகார ளகாரங்களுமுடைய சொல்லானே முற்கூறியவாறே தெரிந்தமொழியாற் கிளந்து ஓதல்வேண்டாமற் பொருள் புலப்படச் செய்யும். இழை...கும். இழைபினது இலக்கணம் பொருந்திற்றாம். எ-று.

* எ-து, நிறுத்தமுறையானே புலன்என்னுஞ் செய்யுளாமாறுணர்...ற்று. .........டுக்கப்பட் டாராயவேண்டாது பொருள்விளங்குவது புலனென்னுஞ் செய்யுளாம் எ-று. உ-ம். பாற்கடன் முகந்த பருவக் கொண்மூ, .........செறி முரசின் வழங்கி யொன்னார், மலைமுற்றின்றே வயங்குதுளி சிதறிச், சென்றவ டிருமுகங் காணக் கடுந்தே, ரின்று புகக் கடவுமதி பாக..., மாவொடு புணர்ந்த மாஅல் போல, விரும்பிடி யுடைய தாகப், பெருங்காடு மடுத்த காமர் களிறே" எனவரும். எ-து உரையாசிரியருரை.

† எ-து, நிறுத்தமுறையானே இழைபாமாறுணர்.........ற்று. ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்தடக்காது ஆசிரியப்பா.........நாலெழுத்தாதியாக இருபதெழுத்தின்காறும் பரந்த பதினேழுநிலத்தின் ஐந்தடியும் முறையானே வரத் .........ன்னுஞ் செய்யுளாம் எ-று. உ-ம். "போந்து போந்து சார்ந்து சார்ந்து,

1 தெரிந்த மொழியான் என்பதும் பாடம்.

கழிநெடிலடியானும் வருமென்றாரேனும் எழுசீரின்மிகாதென்று கொள்க. ஒப்பித்தென்றதனாற் பெரும்பான்மை நாற்சீரடியான்வருஞ் செய்யுட்கண்ணே யொழிந்த நான்கடியும்வருமென்றுகொள்க. அவ்வாறு வருவன கலியும் பரிபாடலும்போலு மிசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன என்றுணர்க. இவ்வைப்பு இனத்திற்குரியவாதலிற் றேர்தல் வேண்டாது பொருள்தோன்றச்செய்கவென்றார். இத்தொல்காப்பியனார் மேற்கூறியது இசைத்தமிழாகலின் அதற்கு அதிகாரம்பட இதனை ஈற்றுக் கண்வைத்தார். இனி யாப்பருங்கலமுதலியவற்றிற் கூறிய சித்திரகவி யினையும் ஈண்டுச்சேரக் கூறுகவெனின் யந்திரமு மந்திரமுமாய்த் தெய்வத் திற்கே யுரியவாகக்கூறும் மிறைக்கவி இம்முப்பத்தினான்குறுப்பும்போல வகனைந்திற்குரிய சான்றோர்செய்யுட்குறுப்பாய் வாராவென்றும் அத் திணைக்குரியமரபு வழுவிற்றென்றுங் கருதித் தொல்காப்பியனார்கூறாமை யானும் அவற்ற திலக்கணங்கூறிய ஆசிரியர் [illegible] சான்றோர்செய்யுட்களுட் காணாமையின் [1]“வடவெழுத்தொரீஇய எழுத் தொடு புணர்ந்த சொல்” லானன்றி வடவெழுத்தாற் பெரும்பான்மை வரச் செய்யுள் தாமேசெய்து இலக்கியமாகக் காட்டினாராதலானும் யாமும் இம்மிறைக்கவி யிலக்கணம் ஈண்டுக் கூறாமாயினாம். (௨௪௨)

௨௪௩ செய்யுண் மருங்கின் மெய்பெற நாடி
யிழைத்த விலக்கணம் பிழைத்தனபோல
வருபவுள வேனும் வந்தவற் றியலாற்
றிரிபின்றி முடித்த றெள்ளியோர் கடனே.*

இது இவ்வோத்திற்கூறிய யாப்பிலக்கணத்திற்கெல்லாம் புறனடை கூறுகின்றது.

---

தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து, வண்டு சூழ விண்டு நீங்கி, நீர் வாய்க் கொண்ட நீல மூர்வாய், பூந்தை வீச ஆர வாய, மதியோர் நுண்டோ டொல்கி மாலே, நண்மணங் கமழும் பன்னல் லூர, வமையோர் வளைத்தோ ளம் பரி நெடுங்க, ணிணையீ ரேசுதி யேந்திள வனமுலே, யிரும்பன் மலரிடை யெழுந்த மாவி,னறுந்தழை துயல்வருஞ் செறிந்தேந் தல்கு, லணிநகை நசைஇய வரியமர் சிலம்பின், மணிமருள் வார்குழல் வளரிளம் பிறைநுத, லொளி நிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொடு, களிமுழவு முழங்கிய வணிநிலவு மணிநக, ரிருந்தளவு மலரளவு சுரும்பு நறுந் தொடையலள், கலனளவு கல னளவு நலனளவு நலனளவு, பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ, தொருநீ மறைப்ப வொழிகுவ தன்றே” எனவரும். எ-து உரையாசிரியருரை.

* இது சூத்திரத்தாற் பொருள்விளங்கும்.

---

1 வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா குமே” என்பது (தொல்-சொல்-எச்சவியல்-௫.)

இ-ள். செய்யுண்மருங்கின் மெய்பெறநாடி யிழைத்த இலக்கணம். எ-து செய்யுளிடத்துப் பொருள்பெற ஆராய்ந்து தந்திரஞ்செய்யப்பட்ட இலக்கணத்தில், பிழைத்தனபோல வருபவுளவேனும். எ-து வழீஇயின போன்று பின்ஞென்று வருவனவுளவேனும். வந்தவற்றியலாற் றிரிபின்றி முடித்தல் தெள்ளியோர்கடன். எ-து முற்கூறிய இலக்கணத்தொடு திரியாமன் முடித்துக்கோடல் அறிவுடையோர்கடன். எ-று. அவை யெண்சீரின்மிக்கனவற்றைக் கழிநெடிலடிப்பாற்சார்த்துவனவும் வெண்பாவாயே வந்து கொச்சகமாயடங்குவனவும் ஆசிரியம் அவ்வாறுவருவனவுங் கொச்சகங்களின்வேறுபாடுந் தொடைவேறுபாடுகளும் பிறவுமாம். (உ௪௩)

எட்டாவது செய்யுளியல்

பாரத்துவாசி நச்சினார்க்கினியருரை

நிறைவேறியது.

